உலகத்தின் ஒரே ஒளி தமிழர்களின் கதிரொளி

# கதிர் ஒளி

இது மக்களின் பத்திரிக்கை...

Editor in Chief : Dr. PAULRAJ D.D., | Intl. Editor: HUDSON PAULRAJ | E-Paper : www.kathiroliepaper.in Wednesday October 1, 2014 Vol: 07 Issue: 275

KATHIR OLI MEDIA INC. 3500 McNicoll Ave. Unit # 8 (West of Markham Road/On McNicoll Ave.) Scarborough, Ont. Tel: (647) 766- 7333, (647) 766-7770 kathirolinews@gmail.com

## ஸ்ரீலங்கா என்ற பெயர் சிங்ஹலே என மாறுமா? - பொதுபல சேனாவின் புதிய தீர்மானம்: சிறுபான்மை இனங்கள் எதிர்ப்பு

இலங்கை பல்லினங்கள் வாழும் நாடு என்ற கொள்கையை தூக்கி எறிந்து பௌத்தர்களுக்கு மாத்திரமே சொந்தம் என்று ஏற்றுக்கொண்டு இலங்கை என்ற பெயரை மாற்றி ''சிங்ஹலே'' என்ற பெயர் மாற்றம் செய்யப்படல் வேண்டும். இவ்வாறு பொதுபல சேனா அமைப்பின் நிறைவேற்றுப் பணிப்பாளர் டிலந்த விதானகே கூறியுள்ளார்.

கொழும்பில் கடந்த ஞாயிற்றுக்கிழமை இடம்பெற்ற பொதுபல சேனாவின் சங்க சம்மேளனத்தின் மகாநாட்டின் போது அவர் இவ்வாறு தெரிவித்துள்ளார்.

வெளிநாட்டுகளின் மதங்களையும், உத விகளையும் தடை செய்ய வேண்டும்.

அரசியல்வாதிகளின் சுய நலங்களுக்காக பல மதத்தவர்கள் வாழும் நாடு என்றும் பலவித அமைப்புக்களை ஏற்படுத்தியுள்ளனர். இந்த மாயை தடுக்கப்படல் வேண்டும்.

சிங்கள பௌத்த நாடு என்றும் இங்கு ஒரே இனம், ஒரே சட்டம் என்ற கொள்கை அமுல்படுத்த வேண்டும் இராஜ்யத்தின் மதத் தலைவராக சங்கராஜ மகா நாயகரை நியமித்து அவர் தலைமையில் 50 பேர் அடங்கிய பௌத்த குருமார் குழுவை நியமிக்க வேண்டும்.

இந்த குழுவே அரசுக்கு ஆலோசனை வழங்கும் குழுவாக நியமிக்கப்படல் வேண்டும். இவ்வாறு வலியுறுத்தும் தீர்மானங்களை பொதுபல சேனா தனது மகா நாட்டில் தீர்மானமாக நிறைவேற்றியுள்ளது.

பொதுபல சேனாவின் புதிய தீர்மானம்–சிறுபான்மை இனங்கள் எதிர்ப்பு

இலங்கையர் அனைவரும் தம்மை சிங்களவர்கள் என்று அடையாளப்படுத்திக் கொள்ள வேண்டுமென பொதுபல சேனா நிறைவேற்றியுள்ள தீர்மானத்துக்கு கடும் எதிர்ப்புக் கிளம்பியுள்ளது.

இலங்கையின் கடும்போக்குவாத பௌத்த அமைப்பான பொதுபல சேனா அண்மையில் கொழும்பில் பிக்குமார் மாநாடொன்றை கூட்டியிருந்தது.

நாட்டின் நாலாபக்கங்களில் இருந்தும் பிக்குமார் இதில் கலந்து கொண்டிருந்தனர்.

இங்கு உரையாற்றிய பொதுபல சேனாவின் ஞானசார தேரர், இலங்கையர் அனைவரும் தம்மை சிங்களவர் என்று அடையாளப்படுத்திக் கொள்ள வேண்டும் என்று கடும் குரலில் வலியுறுத்தியுள்ளார்.

இனிவரும் காலங்களில் தமிழர்கள்,கிறித்தவர்கள், முஸ்லிம்கள் என்ற அடையாளம் இருக்கக் கூடாது என்று தெரிவித்துள்ள அவர் , அதற்குப் பதிலாக சிங்கள கிறித்தவர், சிங்கள இந்து, சிங்கள முஸ்லிம் என்பதாக அழைக்கப்பட வேண்டும் என்றும் தெரிவித்துள்ளார்.

இது குறித்து தற்போது சிறுபான்மை இன மக்களின் தலைவர்களின் கடும் எதிர்ப்பை வெளியிட்டுள்ளனர்.

இது குறித்து கருத்து வெளியிட்டுள்ள மத்திய மாகாண சபை உறுப்பினர் அசாத் சாலி, எந்தவொரு இனமும் தங்கள் அடையாளத்தை விட்டுக் கொடுக்கப் போவதில்லை என்று தெரிவித்துள்ளார்.

பொது பல சேனாவின் மாநாடு அரச ஆதரவுடன் நடைபெற்ற தீவிரவாதிகளின் மாநாடு என்றும் அவர் சாடியுள்ளார்.

கிறித்தவ சகவாழ்வு மன்றத்தின் தலைவர் அருட்தந்தை மாரிமுத்து பிள்ளை சக்திவேல் பொது பல சேனாவை மதத் தீவிரவாதிகள் என்று வர்ணித்துள்ளார்.

இலங்கையில் வாழும் ஏனைய இனங்களின் கலாசார , தனித்துவங்களை அழிப்பதற்காகவே பொது பல சேனா உருவாக்கப்பட்டுள்ளது.

அவர்களின் இந்தத் தீர்மானம் அரசின் தீர்மானமாகவே பார்க்கப்பட வேண்டும். ஏனெனில் அவர்கள் அரச ஆதரவுடன்தான் செயற்பட்டுக் கொண்டிருக்கின்றார்கள் என்றும் அவர் தெரிவித்துள்ளார்.

இதற்கிடையே வடக்கு மற்றும் கிழக்கில் வாழும் தமிழர்கள் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பை நிராகரித்து பொது பல சேனாவை தேர்ந்தெடுக்கவுள்ளதாகவும் ஞானசார தேரர் தெரிவித்திருந்தார்.

அத்துடன் மன்னார் ஆயர் இராயப்பு ஜோசப் அவர்களுக்கு எதிராகவும் கடுமையான வார்த்தைகளைக் கொட்டியிருந்தார்.

இது தொடர்பில் இதுவரை யாரும் கருத்து க்களை வெளியிடவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

## லண்டனில் இள வயதில் சட்டத்தரணியாகி சாதித்த யாழ். வல்வையைச் சேர்ந்த மாணவி யாழினி முருகதாஸ்



யாழ்ப்பாணம் வல்வெட்டித்துறையை பூர்வீகமாகக் கொண்ட செல்வி. யாழினி முருகதாஸ் தனது 23 ஆவது வயதில் லண்டனில் சட்டத்தரணியாகி [LLB (Hons), LLM] ஆகியுள்ளார்.

திரு,திருமதி முருகதாஸ் சகுந்தலா ஆகியோரின் மகளான செல்வி யாழினி நோர்வே நாட்டில் 1990 ஆம் ஆண்டு பிறந்தவர். தனது ஆரம்பப் கல்வியை நோர்வேயில் ஆரம்பித்திருந்து பின்னர் கடந்த 14 வருடங்களாக இங்கிலாந்து நாட்டின் தலைநகரான லண்டனில் வாழ்ந்து கல்விகற்று வந்திருந்தார்.

இளம் வயதிலேயே கல்வியில் மிகவும் ஆர்வம் கொண்ட செல்வி யாழினி தனது கல்லூரிப் படிப்பில் விசேட சித்திகள் பெற்றவர். சட்டத்துறை பற்றிய அதீத அக்கறையின் காரணமாக சட்டப்படிப்பைக் கையில் எடுத்து, தனது முழு நேரத்தையும் சட்டத்துறையில் செலுத்தி, தீவிரமாகப் படித்து சட்டத்துறையில் முதுகலைப் பட்டத்தையும் இளம் வயதிலேயே பெற்றிருக்கின்றார்.

பல்கலைப் படிப்பில், சட்டத்துறையை (law) யாரும் அதிகளவில் விரும்பிப்படிப்பதில்லை. காரணம் சுமைகள் கூடிய சிக்கலான துறை இதுவாகும். அதிக நேரத்தை செலவிட்டு அதிகம் படிக்கவேண்டும். ஆனால் செல்வி.யாழினி இந்தச் சுமைகள் கூடிய படிப்பை ஒரு தவமாக எண்ணி விரும்பிப் படித்திருந்தார்.

தனது நாட்களின் அதிகளவு நேரத்தை இந்த த்துறையில் செலவிட்ட யாழினி ஒரே தடவையில் படித்து முடித்துப் பட்டம் பெற்றது மட்டுமில்லாமல், மறு நாளே அவருக்கு லண்டனில் உள்ள பிரபல நீதிமன்றமான Croydon County Court இல் அரச சட்டத் தரணியாக பணியாற்றும் சேவையையும் பெற் றுள்ளார் என்பது இங்கு சிறப்புடன் கவனத்தில் கொள்ளத்தக்கது. இங்கிலாந்து நாட்டில், தனது இளம் வயதில் சட்டத்தரணியாகியுள்ள செல்வி யாழினி வல்வெட்டித்துறைக்கும் இந்த வகையில் பெருமை சேர்த்துள்ளார்.

செல்வி யாழினி வல்வை ஊரிக்காட்டு பிரதேசத்தை சேர்ந்த திரு அருட்பிரகாசம், சாந்தகுணநாயகி ஆகியோரின் பேர்த்தி ஆவார். மறைந்த திரு அருட்பிரகாசம் அவர்கள் ஒரு மிகச் சகலதுறை விளையாட்டு வீரர் என்பதும் இங்கு நினைவுபடுத்திக் கொள்ளத்த க்கது.

# மார்க்கம் மாநகர சபை வேட்பாளர்களின் களியாட்ட விழா!




24 மார்க்கம் மாநகர சபை, பிரதேச சபை ஆகியவற்றில் போட்டியிடும் சில வேட்பாளர்கள் Box Grove Community Centre - 9th Line வளாகத்தில் கடந்த சனியன்று காலை முதல் மாலை வரை களியாட்ட விழாவினை நடாத்தினார்கள். அவர்கள் தனித் தனியாக தமது பந்தல்களை அமைத்து ஆதரவாளர் களை சந்தித்து உரையாடினார்கள்.

அத்துடன் உணவு வசதி, சிறுவர்களுக்கான பல்வேறு விதமான விளையாட்டு வசதிகளையும், அதிஷ்டி லாப நிகழ்ச்சிகளையும் ஏற்பாடு செய்திருந்தனர். பெருந் திரளான மக்கள் கூடி தாம் தாம் விரும்பும் வேட்பாளர்களுடன் கலந்துரையாடி தமது வாழ்த்துக்களையும் தெரிவித்தனர்.

கனடாவின் அரசியல் வரலாற்றில் முதன் முறையாக வெற்றி ஈட்டிய தமிழ் மகன் என்ற பெருமையைப் பெற்ற மாநகர சபை உறுப்பினரான திரு.லோகன் கணபதி, அவருக்கு முன்னர் மார்க்கம் 7ம் வட்டார உறுப்பினராக இருந்து வந்த ஜனாப் காலிட் உஸ்மான், பிரதேச சபை வேட்பாளரான திருமதி நிர்மலா ஆம்ஸ்ரோங் ஆகியோருட்பட மற்றும் சில வேட்பாளர்கள் தமது ஆதரவாளர்களை சந்தித்து கலந்துரையாடினார்கள்.

தொடர்ந்து இருமுறை ஏழாம் வட்டார உறுப்பினராகத் தெரிவு செய்யப்பட்டு மார்க்கத்தில் முதன் முறை யாக கிரிக்கெட் மைதானம், 72 மில்லியன் டொலர் செலவில் 14வது அவெனியூவில் சகல வசதிகளும் கொண்ட விசாலமான சனசமூக நிலையம் ஆகியவற்றினை ஏற்படுத்தியவர் திரு.லோகன் கணபதி. அது மாத்திரமன்றி வட அமெரிக்காவிலேயே முதன் முறையாக மார்க்கம் மாநகர சபையில் தை மாதத்தி னை தமிழர் மரபுரிமை தினமாக பிரகடனப்படுத்தி தமிழினத்துக்கே பெருமை சேர்த்தவர்.

மார்க்கம் வரவு செலவு குழுவின் உப தலைவராகவும் இருந்து திறம்பட செயலாற்றி வருவதோடு 2009 ம் ஆண்டு முதல் 2012ம் ஆண்டு வரை சோலை வரியை அதிகரிக்காமல் மார்க்கம் வாழ் மக்களுக்கு பெரும் உதவி செய்தவர் என்பதும் குறிப்பிடத்த க்கதாகும்.

இத்தகைய சிறந்த செயல் வீரரை இம்முறை யும் தமது பிரதிநிதியாக தெரிவு செய்ய மார்க்கம் மாநகர சபையின் 7ம் வட்டார வாக்காளப் பெருமக்கள் ஆவலோடு காத்திருக்கின்றனர்.

(வீரகேசரி மூர்த்தி)










# ‘வர்த்தகத்தின் மூலம் கனடாவின் பொருளாதார வளர்ச்சிக்கு தமிழ் சமூகத்தினர் பெரும் உதவி’

‘தமிழ் சமூகத்தினர் அரசியலிலும், வர்த்தகத்திலும் அதிகளவு ஆர்வமும் ஈடுபாடும் கொண்டவர்கள் என்பதை நான் நன்கு அறிவேன். கனடா தமிழ் வர்த்தக சம்மேளனத்தினரின் வைபவங்களில் நான் பலமுறை கலந்து கொண்டிருக்கின்றேன்.

வர்த்தகத்தில் ஈடுபட்டுள்ள தமிழ் மக்களுக்கு வேண்டிய வசதிகளை செய்து கொடுப்பதில் சம்மேளனம் ஆர்வத்துடன் செயற்பட்டு வருகின்றது.

வர்த்தகத் துறையில் ஈடுபடுவதன் மூலம் தமிழ் மக்கள் இந்நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்கு பெருமளவில் உதவி செய்துள்ளார்கள் என்பதனை நான் பெருமையுடன் கூறிக்கொள்ள விரும்புகின்றேன்.

யாழ்ப்பாணத்தில் வடமாகாண சபையில் முக்கிய பணியாற்றி வரும் திரு.சிவஞானத்துடன் கடந்த வாரம் நான் தொலை பேசியில் பேசினேன். கனடாவுக்கும்







ஸ்ரீலங்காவுக்கும் இடையிலான வர்த்தக தொடர்பினை அபிவிருத்தி செய்வதற்காக அவரையும் ஏனைய குழுவினரையும் இங்கு வரவழைக்க ஏற்பாடு செய்வேன்’.

- ஜோன் ரோறி

மார்க்கம் வீதியில் 820ம் இலக்க கட்டி டத்தில் உள்ள தனது தேர்தல் பிரச்சார அலுவலகத்தில் கடந்த சனிக்கிழமை தமிழ் ஊடகவியலாளர்கள் மத்தியில் உரையாற்றிய ரொறண்டோ மேயர் பதவிக்கான வேட்பாளர் திரு.ஜோன் ரோறி இவ்வாறு கூறினார்.

கனேடிய தேர்தல்களில் தமிழ் மக்கள் அதிகளவு ஈடுபாடு காட்டி வருகின்றனர். ரொறண்டோ மேயர் தேர்தலில் உங்கள் ஆதரவு எனக்கு மிகமிக அவசி யம். அதனால் தான் இன்று தமிழ் ஊடகத் துறையினருடனான இச்சந்திப்பினை ஒழுங்கு செய்தோம்' எனவும் கூறினார்..

தனது பிரச்சாரத்தில் ரொறண்டோ மாநகரிலுள்ள இன்றைய முக்கிய பிரச்சினையான போக்கு வரத்து பிரச்சினைக்கு தான் முன்வைத்துள்ள ளுஅயசவ வுசயஉம ‘சிமாட் ட்ரக்’ திட்டத்தைப் பற்றி அவர் மிக விளக் கமாகக் கூறினார். தமிழ் பெற்றோர்கள் தமது குழந்தைகளின் முன்னேற்றத்திலும் அதிக அக்கறை கொண்டவர்கள். அவர்களுக்கும் சனசமூக நிலையங்களின் ஊடாக சிறந்த சேவைகளை வழங்க நடவ டிக்கை எடுப்பேன். அதிகரித்து வரும் முதியோர்களின் தேவைகளையும் கருத்திற் கொண்டு செயலாற்று வேன்' என திரு.ஜோன் ரோறி உறுதியளித்தார்.

மேயர் பதவிக்கு போட்டியிடும் ஏனைய வேட்பாளர்களை விட இவர் முன்னணியில் திகழ்கின்றார். வங்கியில் உயர் பதவியில் பணி யாற்றி வருபவரும் தமிழ் மக்களுடன் தொடர்பு உடையவருமான அவரது சகோதரி ஜெனபர் ரோறியும் இவ்வைபவத்தில் கலந்து கொண்டிருந்தார்.

(வீரகேசரி மூர்த்தி)

## கனடா செய்திகள்

# தமிழ் சமூகம் ஸ்காபுறோ வைத்தியசாலைக்கு ஒன்றரை லட்சம் டொலர் நிதி கையளிப்பு!

கனடாவில் அண்மைக் காலமாக புற்று நோய்க்கு ஆளாகுவோர்களின் எண்ணிக்கை அதிகரித்து வருவதனால் ஸ்காபுறோ பேர்ச்மவுண்ட் வீதி வைத்தியசாலையில் அதனை பரிசோதனை செய்வதற்கான உபகரணங்களை கொள்வனவு செய்ய வேண்டிய அத்தியாவசிய தேவை ஏற்பட்டுள்ளது. இதனை அறிந்த எமது தமிழ் சமூகத்தினர் நடை பவனி மூலம் ஒன்றரை லட்சம் டொலர்கள் திரட்டி உள்ளனர்.

இந்நிதி ஒக்டேபர் 7ம் திகதி காலை 9.30 மணிக்கு இலக்கம் 3030, பேர்ச்மவுண்ட் வீதியிலுள்ள வைத்தியசாலையில் வைத்து சுகாதார, நீண்ட கால பராமரிப்பு அமைச்சர் டாக்டர் எரிக் ஹொ்சின் அவர்களிடம் கையளிக்கப்பட இருக்கிறது. தமிழ் சமூகத்தினர் இது போன்று பல தடவைகள் நடை பவனியின் மூலம் நிதி சேகரித்து ரொறண்டோ மாநகரிலுள்ள பல்வேறு வைத்தியசாலைகளுக்கு வழங்கி உள்ளமை குறிப்பிடத்தக்கது.

# ஆபிரிக்க 'எபோளா' நோயாளிகளுக்கு உதவி வழங்க கனடா நடவடிக்கை!

மேற்கு ஆபிரிக்காவிலும் அதன் சுற்று வட்டத்திலுமுள்ள கினியா, லைபீரியா, சியரா லியோன் போன்ற நாடுகளில் வேகமாகப் பரவி வரும் 'எபோளா' தொற்று நோய்க்கு உள்ளாகி அவதியுறும் நோயாளர்களுக்கு உதவி வழங்க கனடா அரசு முன்வந்துள்ளது. ஐக்கிய நாடுகள் சபை மற்றும் அரசு சார்பற்ற நிறுவனங்களின் வேண்டுகோளினை ஏற்று நோயாளிகளின் உடனடி தேவைகளுக்கான உதவியை செய்ய இருப்பதாக சர்வதேச அபிவிருத்தி அமைச்சர் திரு.கிறிஸ்ரியன் பரடிஸ் அறிவித்துள்ளார். எதிர்பாராத வகையில் வெகு வேகமாகப் பரவி வரும் நோயினைத் தடுக்க நாம் உடனடி நடவடிக்கை மேற் கொள்ள வேண்டியது அவசியமாகும் எனவும் அமைச்சர் கூகூறியுள்ளார்.

ஐக்கிய நாடுகள் சபை, சர்வதேச செஞ்சிலுவை சங்கம், கனடா செஞ்சிலுவை சங்கம் மற்றும் ஆபிரிக் காவிலுள்ள அரசு சார்பற்ற கனேடிய சர்வதேச அமைப்புக்கள் ஆகியவற்றின் ஊடாக இவ்வுதவிகள் வழங்கப்படுமெனவும் அமைச்சர் கூறியுள்ளார். நோயாளிகளுக்கு சிகிச்சை அளித்தல், எபோளா நோய் மேலும் பரவுவதை தடுக்கும் வகையில் கல்விப் போதனை, நோய் எதிர்ப்பு சக்தியுள்ள போஷாக்கு நிறைந்த உணவு வகைகளை விநியோகித்தல் போன்ற நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும் எனவும் அமைச்சர் தெரிவித்துள்ளார்.

ஆபிரிக்காவில் ஏற்பட்டுள்ள இத்தொற்று நோய் அங்கு சென்று வரும் வெளிநாட்டவர்கள் மூலம் பிற நாடுகளிலும் இந்நோய் பரவும் அபாயம் உள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

# 'துளிர் ஆசிரியர் சிவமோகனின் தொண்டுக்கு நாம் ஆதரவு அளிக்க வேண்டும்'

## துளிர் சஞ்சிகை வெளியீட்டு விழாவில் திரு.ஈழவேந்தன்



மார்க்கம்– மெக்னிக்கல் வீதியிலுள்ள வழிபாட்டு மண்டபத்தில் கடந்த சனிக்கிழமை மாலை நடைபெற்ற 'துளிர்' காலாண்டு சஞ்சிகை வெளியீட்டு வைபவத்தில் உரையாற்றிய திரு.ஈழவேந்தன் இவ்வாறு கூறினார். 'கதிர் ஒளி' பத்திரிகை ஆசிரியர் திரு.போள் ராஜபாண்டியனின் தலைமையில் நடைபெற்ற இவ் வைபவத்தில் டாக்டர் அலெக்சான்டரும் அவரது பாரியாரும் நூலினை வெளியிட்டு வைத்தனர். சஞ்சிகையின் முதற் பிரதியினை 'தமிழ் சி.என்.என்.' இணையத் தள செய்தி சேவையின் மூலம் உள்நாட்டு வெளிநாட்டு செய்திகளை உடனுக்குடன் வெளியிட்டு வரும் திரு.அகிலன் பெற்றுக் கொண்டார். இரண்டாவது பிரதியை ரொறண்டோ மாநகர சபை உறுப்பினர் தேர்தலில் போட்டியிடும் திரு.டேவிட் தோமஸ் பெற்றுக் கொண்டார். அவர்களைத் தொடர்ந்து ஏனையோரும் சஞ்சிகையை பெற்றுக் கொண்டனர்.

'தமிழ் மொழி மீது தணியாத தாகம் கொண்டு வளர்த்தோரில் ஆனந்த குமாரசாமி, தனிநாயகம் அடிகள் ஆகியோர் குறிப்பிடத் தக்கோராவர். அவர்கள் பாரதியின் கனவை நனவாக்கினார்கள். அதே போன்று இளைஞரான சிவமோகன் சிவலிங்கம் பெரும் சிரமங்களுக்கு மத்தியில் 'துளிர்' காலாண்டு இலக்கிய சஞ்சிகையை வெளியிட்டு வருகின்றார். அவரது முயற்சிக்கு நாம் ஆதரவு அளிக்க வேண்டும். பிறரது நடவடிக்கைகளை குறை கூறிக் கொண்டிருப்பதை விடுத்து நிறைவான காரியங்களை போற்றி ஆதரவு வழங்க வேண்டும். குற்றவாளிகளாக இருக்கும் நாம் நமது குற்றத்தை உணராமல் பிறர் குற்றங்களை உணரலாமா என்பதனை இயேசு பிரான் 'நீ உன் குற்றத்தை உணராமல் பிறர் குற்றத்தை உணரலா மா?' என அற்புதமாகக் கூறியுள்ளார்.

திரு.அகிலன் உரையாற்றிய போது தமிழ் சி.என்.என். செய்தி சேவையினை நான் பெரும் சிரமத்தின் மத்தியில் நடாத்தி வருகின்றேன். செய்திச் சேவையுடன் மாத்திரம் நின்று விடாது அதனூடாக சமூக சேவையினையும் செய்து வருகின்றேன். ஊரில் கணவன்மாரை இழந்து வறுமையின் பிடியில் சிக்கித் தவிக்கும் தாய்மார்களுக்கு இலவசமாக அரிசி வழங்கும் தொண்டினை மேற்கொண்டு வருகின்றேன்' எனக் கூறினார்.

திரு.துரைராசா உரையாற்றிய போது 'ஊரில் மழையில்லை, விவசாயமில்லை. அதனால் மக்கள் வறுமையில் வாடுகின்றார்கள். அவர்களுக்கு கை கொடுத்து உதவும் பொருட்டு இலவசமாக அரிசி வழங்கும் திட்டத்தை திரு.அகிலன் அவர்கள் செயற்படுத்தி வருகின்றார். அவருக்கு நாம் கைகொடுத்து உதவ வேண்டும். 'உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோர்' என்பதற்கிணங்க பட்டினியால் வாடும் எமது உடன் பிறப்புக்களுக்கு புலம் பெயர்ந்து வாழும் நாம் உதவி செய்ய வேண்டும். திருகோணமலையில் 95 ஆயிரம் தமிழ் விதவை பெண்கள் உள்ளனர். ஒரு லட்சத்துக்கு மேலான அகதிகள் உள்ளனர். மற்றும் ஒரு லட்சத்தி 46ஆயிரத்துக்கு மேலானோர் எங்குள்ளனர் என்ற தகவலே தெரியவில்லை. இவற்றை மன்னார் பேராயர் ஐ.நா. பிரதிநிதிகளிடம் எடுத்துக் கூறியுள்ளார். மக்கள் தொண்டு தான் மகேசன் தொண்டு என்பதற்கிணங்க இங்குள்ள மக்கள் பணம் செலுத்தி ஆலயங்களில் அர்ச்சனை செய்வதை விடுத்து பட்டினியால் வாடும் மக்களுக்கு பண உதவி செய்து புண்ணியத்தை தேட வேண்டும்' என்றார்.

'வேங்கையன் பு??ங்கொடி'இ 'காவியத் தூது' ஆகிய கவிதை நூலாசிரியையான வல்வை சகாரா உரையாற்றிய போது 'இன்றைய கால கட்டத்தில் இலக்கியத் தளத்தில் வாசகர்கள் மிகமிகக் குறைவு. அதிகளவிலான நம்மவர்கள் சினிமா, சின்னத்திரை ஆகியவற்றில் மூழ்கி இருக்கிறார்கள். துளிர் சஞ்சிகையில் சினிமா,அரசியல் ஆகியவற்றினை தவிர்த்து தனி இலக்கிய சஞ்சிகையாக வெளியிட வேண்டும் என்பது தனது அவாவென ஆசிரியர் சிவமோகன் குறிப்பிட்டார். அதனை நானும் வரவேற்கின்றேன். துளிர் இலக்கிய சஞ்சிகையாக வெளி வர நாம் ஆதரவளிக்க வேண்டும். சிறந்த ஈழத்து இலக்கிய நூலாக துளிர் மிளிர வேண்டும்' எனக் கூறினார்.

கவிதா உரையாற்றிய போது 'ஈழத்தில் தமிழ் மொழி அழியும் நிலையில் உள்ளது. எனவே புலம் பெயர்ந்த நாடுகளில் வாழ்ந்து வரும் நாம் சுத்தமான தமிழை வளர்க்க வேண்டும். அத்தகைய பணியில் ஈடுபட்டு வரும் துளிர் சஞ்சிகை போன்றவற்றுக்கு நாம் ஆதரவளிக்க வேண்டும். வர்த்தகத் துறையில் ஈடுபட்டுள்ள நம்மவர்கள் நூல் வெளியீட்டாளர்களுக்கு நிதியுதவி செய்து அவர்களை ஊக்குவிக்க வேண்டும்' எனக் கூறினார்.

திரு.டேவிட் தோமஸ் உரையாற்றிய போது ரொறண்டோ மாநகர சபை அங்கத்தவர் பதவிக்குப் போட்டியிடும் தனக்கு வாக்காளர்கள் வாக்களிப்பதோடு தேர்தல் பிரச்சார பணிகளிலும் ஈடுபடுமாறு கேட்டுக் கொண்டார். அத்துடன் சிறுவர்களுக்கு துளிர் சஞ்சிகையினை கையளித்தார். வல்வை



சகாராவின் மகளான சிறுமிக்கு சஞ்சிகையினை வழங்கிய போது மிக்க மகிழ்ச்சியுடன் முழந்தாளிட்டு இருந்து குழந்தையிடம் வழங்கியமை ஆச்சரியமாக இருந்தது.







## ஊவா மாகாண முதலமைச்சராக இரண்டாவது முறையாகவும் பதவியேற்ற ராஜபக்ஸ

ஊவா மாகாண முதலமைச்சராக சசீந்ர ராஜபக்ஷ இரண்டாவது தடவையாகவும் ஜனாதிபதி மஹிந்த ராஜபக்ஷ முன்னிலையில் சத்தியபிரமாணம் செய்து கொண்டுள்ளார்.

மேலும் ஊவா மாகாண சபை ஆளும் கட்சி உறுப்பினர்களும் அமைச்சர்களும் சத்தியப்பிரமாணம் செய்து கொண்டுள்ளனர்.

## யாழில் தனியார் கிணற்றில் இருந்து ஒரு தொகுதி ஆயுதங்கள் மீட்பு

யாழ்ப்பாணம் பளை பகுதியிலுள்ள தனியார் காணியிலுள்ள கிணற்றில் இருந்து ஒரு தொகுதி ஆயுதங்கள் நேற்று மீட்கப்பட்டுள்ளது.

கிணற்றை நேற்றைய தினம் துப்பரவு செய்யும் போது, 4 ஆர்.பி.ஜி குண்டுகள் மற்றும் 94 கைக்குண்டுகள் மீட்கப்பட்டன.

மேற்படி கிணற்றில் இருந்து 28ம் திகதி 10 ஆர்.பி.ஜி. குண்டுகள் மற்றும் 23 கைக்குண்டுகள் மீட்கப்பட்டிருந்தன.

இந்நிலையில் தொடர்ந்து அக் கிணற்றிலிருந்து குண்டுகள் மீட்கப்பட்டமை குறிப்பிடத்தக்கது.

மீட்கப்பட்ட அனைத்து குண்டுகளும் இராணுவத்தினரின் குண்டு செயலிழக்கும் பிரிவினர் மூலம் செயலிழக்கப்பட்டுள்ளதாக பொலிஸார் தெரிவித்துள்ளனர்.

## மட்டக்களப்பு சிறையில் மோதல்! மூவர் படுகாயம்

மட்டக்களப்பு மத்திய சிறைச்சாலைக்குள் நேற்று மாலை இடம்பெற்ற மோதலில் மூவர் படுகாயமடைந்து போதனா வைத்தியசாலையில் சேர்க்கப்பட்டுள்ளனர் எனக் கூறப்படுகின்றது.

இந்த சம்பவத்தில் கே.புஸ்பராஜா (வயது 23), ஏ.எம்.ஜமீல் (வயது 22), எஸ்.எல்.ஏ.ரினோல்ஸ் (வயது 22) ஆகியோரே காயமடைந்த நிலையில் வைத்தியசாலையில் சேர்க்கப்பட்டவர்களாவர்.

சிறைக் கைதிகளின் இரு பிரிவினருக்கு இடையே தொடங்கிய வாய்த்தர்க்கம் பின்னர் கைகலப்பாக மாறியது எனவும் இதன்போதே இந்த மூவரும் காயமடைந்தனர் என சிறைச்சாலை அதிகாரிகள் தெரிவித்தனர்.

அத்துடன் மோதலில் ஈடுபட்டவர்கள் கொள்ளைச் சம்பவம் ஒன்றில் ஈடுபட்டனர் என்ற குற்றச்சாட்டில் கைதாகி தண்டனை பெற்று வருபவர்கள் எனவும் தெரிவிக்கப்பட்டது.

## யுவதியை காட்டுமிராண்டித்தனமாக தாக்கிய பொலிஸ்

வாரியபொலவில் இளைஞர் ஒருவரை யுவதியொருவர் அறைந்த சம்பவம் ஊடகங்களில் பரவியதை போன்று இன்னொரு சம்பவம் இடம்பெறுள்ளது.

இந்தச் சம்பவம் இரத்தினபுரியில் இடம்பெற்றுள்ளது. பொலிஸ் ஒருவர் யுவதியை கடுமையாகத் தாகியுள்ளார்.

இந்தக் காட்சிகள் அடங்கிய வீடியோ தற்போது இணையத்தளங்களில் வெளியாகி பரபரப்பை ஏற்படுத்தியுள்ளது.

இச்சம்பவம் தொடர்பில் மேலும் தெரியவருவதாவது,

மூன்று வாரங்களுக்கு முன்பு மேற்படி பகுதியில் வைத்து பெண்கள் இருவர் சண்டையிட்டுள்ளனர். இதன்போது அங்கு கடமையில் இருந்த பொலிஸ் அதிகாரி. பெண்கள் இருவரையும் அமைதியாகும்படி கட்டளையிட்டுள்ளார்.

இதில் கோபமடைந்த பெண்ணொருவர் பொலிஸ் அதிகாரி மீது கல்வீச்சு தாக்குதல் மேற்கொண்டுள்ளார். கோபமடைந்த பொலிஸ் அதிகாரி குறித்த பெண்ணுக்கு பதிலடி கொடுக்கும் வகையில் தான் கையில் வைத்திருந்த தடியால் பெண்ணை பலமாக தாக்கியுள்ளார்.

இக்காட்சியை பஸ்தரிப்பிடத்துக்கு அருகில் இருந்த நபர் ஒருவர் தனது தொலைபேசியில் பதிவு செய்து இணையத்தளத்தில் பதிவேற்றம் செய்துள்ளார்.

இச்சம்பவம் தொடர்பிலான விசாரணை களை பொலிஸார் மேற்கொண்டு வருகின்றனர்.

இதேவேளை, இரத்தினபுரி பஸ் நிலையத்தில் பெண் ஒருவரை தாக்கிய பொலிஸ் சார்ஜனின் பணி இடை நிறுத்தப்பட்டுள்ளதாக பொலிஸ் ஊடக பேச்சாளர் அலுவலகம் தெரிவித்துள்ளது.

இதே போல் வாரியபொல பஸ் நிலையத்தில் வைத்து தன்னை வார்த்தை மற்றும் சைகை மொழி மூலம் துஷ்பிரயோகப்படுத்திய கூறி யுவதியொருவர் இளைஞன் ஒருவரை பலமாக தாக்கிய சம்பவம் அண்மையில் பலரின் கவனத்தை ஈர்த்திருந்தமை குறிப்பிடத்தக்கது.

## நுவரெலியாவில் மினி சூறாவளி! வீடுகள் சேதம்

நுவரெலியா, பொரலந்த வஜிரபுர பகுதியில் நேற்று மாலை வீசிய மினி சூறாவளி காரணமாக 15 வீடுகள் பகுதியளவில் சேதமடைந்துள்ளன.

இதன் காரணமாக 5 குடும்பங்கள் இடம்பெயர்ந்துள்ளன. இவர்களுக்கு நிவாரண உதவிகளை வழங்குவதற்கு நடவடிக்கைகள் எடுத்திருப்பதாக நுவரெலியா மாவட்ட செயலாளர் டீ.பீ.ஜீ குமாரசிரி தெரிவிக்கின்றார்.

இந்த மினி சூறாவளியினால் பாரியளவிலான பாதிப்புக்கள் எதுவும் ஏற்படவில்லை என பிரதேசவாசிகள் தெரிவிக்கின்றனர்.

## தெஹிவளையில் துப்பாக்கிச் சூடு! இருவர் காயம்

தெஹிவளையில் செவ்வாய்க்கிழமை நடைபெற்ற துப்பாக்கிச் சூட்டில் இருவர் காயமடைந்துள்ளனர்.

தெஹிவளை பெரேரா மாவத்தையில் இந்தச் சம்பவம் இன்று நண்பகல் அளவில் நடைபெற்றுள்ளது.

காரில் வந்த ஒரு மர்ம நபர் இரண்டு இளைஞர்கள் மீது துப்பாக்கிச் சூட்டை நடத்திவிட்டு தப்பிச் சென்றுள்ளார். இதில் ஒருவர் மன்ன மஞ்சு என்று அடையாளம் காணப்பட்டுள்ளார்.

இந்தச் சம்பவம் தொடர்பாக பொலிஸ் விசாரணைகள் ஆரம்பிக்கப்பட்டுள்ளன. காயமடைந்தவர்கள் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளனர்.

துப்பாக்கிச் சூட்டுக்குள்ளான நபர்கள் சமூக விரோத நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்தார்களா என்பது குறித்தும் பொலிசார் விசாரணையை முன்னெடுத்துள்ளனர்.

## யாழ். மீனவர் படகில் ஒன்றரை கிலோ தங்கம் கைப்பற்றப்பட்டது

யாழ்ப்பாணத்தில் மீனவர் படகொன்றில் இருந்து ஒன்றரைக் கிலோ தங்கம் கைப்பற்றப்பட்டுள்ளதாக பாதுகாப்பு அமைச்சு செய்தி வெளியிட்டுள்ளது.

யாழ்ப்பாணம், மாதகல் பிரதேசத்தில் மீனவர் படகொன்றில் மீன்வலைகளின் அடியில் இந்த தங்கம் மறைத்து வைக்கப்பட்டிருந்தாகவும் அந்த செய்தியில் குறிப்பிடப்பட்டுள்ளது.

நேற்று அதிகாலை கடற்படையினருக்கு கிடைத்த இரகசியத் தகவலொன்றை அடுத்து மேற்கொள்ளப்பட்ட விசேட சோதனையில் கைப்பற்றப்பட்ட தங்கத்தின் பெறுமதி 86 லட்சம் ரூபா என்று தெரிய வந்துள்ளது.

இந்தியாவுக்கு கடத்துவதற்காக இந்த தங்கம் எடுத்துச் செல்லப்பட இருந்ததாக கடற்படையினர் தெரிவித்துள்ளனர்.

கைது செய்யப்பட்ட சந்தேக நபர்கள் பொலிசாரிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளனர்.

## நரகத்தை எதிர்நோக்கிய இலங்கையர்கள்: ஆஸி ஊடகவியலாளர் கவலை

அவுஸ்திரேலியாவில் புகலிடம் மறுக்கப்பட்டு நாடுகடத்தப்படும் இலங்கையர்கள் துன்புறுத்தலுக்கும், பாலியல் சித்திரவதைகளுக்கும் உள்ளாக்கப்படுவதாக குற்றம் சுமத்தப்பட்டுள்ளது.

அவுஸ்திரேலிய ஊடகம் இவ்வாறு குற்றம் சாட்டியுள்ளது.

டேவிட் கோர்லட் (David Corlett) என்ற செய்தியாளர் கடந்த மாதம் உல்லசாப் பயணி என்ற போர்வையில் இலங்கைக்குள் நுழைந்து அவுஸ்திரேலியாவிலிருந்து நாடுகடத்தப்பட்ட பலரை சந்தித்துள்ளார்.



நாடு திரும்பிய அந்த ஊடகவியலாளர், இலங்கையில் பலருடன் சந்தித்த அனுபவத்தை ஊடகத்தின் ஊடாக இவ்வாறு வெளிப்படுத்தியுள்ளார்.

''விடுதலைப் புலிகளுடன் தொடர்புபட்டவர்கள் என சந்தேகம் கொண்டே எம்மீது அழுத்தங்கள் பிரயோகிக்கப்படுகின்றன. தாங்கள் திருப்பி அனுப்பப்பட்ட பின்னர் இலங்கையில் நரகத்தை அனுபவிக்க வேண்டியுள்ளது.

இலங்கை பாதுகாப்பு படையினராலேயே இவ்வாறான துன்புறுத்தல்கள் கட்டவிழ்த்துவிடப்பட்டுள்ளன என்றும் அவர்கள் தெரிவிக்கின்றனர்.

தாங்கள் கடத்தப்பட்டு தொடர்ச்சியாக துன்புறுத்தல்களுக்குள்ளாகின்றனர் என்றும், லஞ்சம் வழங்கினால் மாத்திரமே தங்களை விடுவிக்கின்றனர் எனவும் அவர்கள் குறிப்பிட்டுள்ளனர்.''

தான் மிகுந்த சிரமத்தின் மத்தியிலேயே இலங்கை சென்று அவர்களைச் சந்தித்தார் என்று டேவிட் கோர்லட் குறிப்பிட்டுள்ளார்.

தான் சந்தித்த சிலர் மிக மோசமான சித்திரவதைகள் காரணமாக முற்றாக உடைந்து போயுள்ளனர் என்றும் அச்சத்தின் பிடியில் சிக்குண்டுள்ளனர் எனவும் அவர் தெரிவித்துள்ளார்.

முதற்தடவை இலங்கையிலிருந்து தப்பியோட முயன்ற வேளை கைது செய்யப்பட்டு தான் பாலியல் வன்முறைக்குள்ளாக்கப்பட்டார் என்றும் தான் மீண்டும் அவுஸ்திரேலியாவுக்கு செல்ல முயன்ற வேளை அங்கிருந்து திருப்பியனுப்பட்டுள்ளார் என்றும் இலங்கை பெண்ணொருவர் குறிப்பிட்டார் என டேவிட் கோர்லட் தெரிவித்துள்ளார்.

அந்தப் பெண் மிகுந்த அச்சத்திலிருந்தார். அதனால் நாட்டை விட்டுவெளியேற முயன்றார். அவர் தற்போது பாதுகாப்பு கருதி வேறு நாட்டிலிருக்கிறார் எனவும் அவர் குறிப்பிட்டுள்ளார்.

வெள்ளை வானில் கடத்தப்பட்டு லஞ்சம் வழங்கப்படும் வரை சித்திரவதை அனுபவித்தவர்களின் கதைகளுமுள்ளன. மூன்று கிழமை தடுத்துவைக்கப்பட்டு பலரால் பாலியல் துன்புறுத்தப்பட்ட பெண் ஒருவரையும் தான் சந்தித்ததாக அவர் தெரிவித்துள்ளார்.

# ஆட்டம் காண தொடங்கும் விமல் வீரவன்சவின் கட்சி!

விமல் வீரவன்ச தலைமையிலான தேசிய சுதந்திர முன்னணி கட்சி ஆட்டம் காணத் தொடங்கியுள்ளது.

கட்சியின் சில உறுப்பினர்கள் தற்போது கட்சியை விட்டு வெளியேறத் தொடங்கியுள்ளமை குறிப்பிடத்தக்கது.

தேசிய சுதந்திர முன்னணியின் மஹாவ பிரதேச சபையின் உறுப்பினர் மஹிந்த பக்மீவெள உள்ளிட்ட கட்சி உறுப்பினர்கள் ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சியில் இணைந்து கொண்டுள்ளனர்.

கலை மற்றும் கலாச்சார அமைச்சர் டி.பி. ஏக்கநாயக்கவிடம் குறித்த உறுப்பினர்கள் கட்சியின் அங்கத்துவத்தைப் பெற்றுக்கொண்டுள்ளனர்.

தமது ஆதரவாளர்களுக்கு அதிகளவு சேவை செய்ய வேண்டும் என்ற நோக்கில் சுதந்திரக் கட்சியில் இணைந்து கொள்வதாக பக்மீவெள தெரிவித்துள்ளார்.

ஊவா மாகாணசபைத் தேர்தலுக்கு முன்னதாகவும் கட்சியின் முக்கிய முன்னாள் மாகாணசபை உறுப்பினர் ஒருவர் கட்சியை விட்டு வெளியேறியிருந்தார்.

இவ்வாறு கட்சியின் முக்கிய உறுப்பினர்களும் ஆதரவாளர்களும் கட்சியை விட்டு நாளுக்கு நாள் விலகிச் செல்கின்றமை கட்சியை வலுவிழக்கச் செய்யும் என சுட்டிகாட்டப்பட்டுள்ளது.



## நவ்ரு தீவில் அதிகரிக்கும் பாலியல் துன்புறுத்தல்கள்! விசாரணை கோருகிறார் செனட்டர் ஷார ஹன் யங்



நவ்ரு தீவு அகதிகள் முகாமில் அடைத்து வைக்கப்பட்டுள்ள பெண்கள் சிறுவர்கள் பாலியல் துன்புறுத்தலுக்கு அதிகமாக உட்படுத்தப்படுவதாக அவுஸ்திரேலியா செனட்டர் ஷார ஹன் யங் தெரிவித்துள்ளார்.

இதன் காரணமாக நவ்ரு தீவு அதிகாரிகள் பலவந்தமாக பெண்கள் சிறுவர்கள் பாலியல் ரீதியாக துன்புறுத்தப்படுவதாகவும் அவர் தெரிவித்துள்ளார்.

உடனடியாக இந்த விடயம் சம்பந்தமாக விசாரணை நடத்த வேண்டும் என்று குடிவரவு அமைச்சர் மோரிசனுக்கு வலியுறுத்தியுள்ளார்.

இதற்கு மொரிசன் ஓரிரு சம்பவங்களே நடந்துள்ளது என்று பதில் அளித்துள்ளார்.

இந்த விடயத்துக்கு உடனடியாக விசாரணை செய்து அவர்களுக்கு நல்லதொரு தீர்வினை பெற்று கொடுக்க வேண்டும் என்றும் சென்ட்டர் ஷார ஹன் யங் வலியுறுத்தியுள்ளார்.

## சர்வதேச போதைப்பொருள் கேந்திர நிலையமாக இலங்கை: பிரதமர் கவலை

சர்வதேச போதைப்பொருள் மத்திய நிலையமாக இலங்கை மாறிவிட்டதாக பிரதமர் டீ.எம். ஜயரத்தின கவலை தெரிவித்துள்ளார்.

சிங்கள ஊடகவியலாளர் ஒருவருக்கு வழங்கிய நேர்காணலில் அவர் இதனைத் தெரிவித்துள்ளார்.

சர்வதேச மட்டத்தில் இலங்கை இன்று போதைப் பொருள் வர்த்தக கேந்திர நிலையமாக மாறிவிட்டது.

போதைப் பொருட்கள் மட்டுமன்றி அதற்கான மூலப் பொருட்களும் இங்கு எளிதாக கிடைக்கின்றது.

அதனை இறக்குமதி செய்பவர்கள் மற்றும் வர்த்தகம் செய்வோர் யார் என்பது குறித்து அனைவருக்கும் தெரியும்.

ஆனாலும் அச்சம் காரணமாக யாரும் அவர்களுக்கு எதிராக வாய் திறப்பதில்லை.

அப்பாவிகள் மாட்டிக் கொள்ளும் போது அவர்கள் மீது போதைப் பொருள் வர்த்தகத்தின் பழி போடப்படுகின்றது.

போதைப் பொருள் வர்த்தகத்தில் ஈடுபடுவதாக என்னையும் குற்றம் சாட்டினார்கள். மகாநாயக்க தேரர் ஒருவரும் அந்தக் குற்றச்சாட்டை முன் வைத்திருந்தார்.

ஆனால் உண்மையிலேயே தவறு செய்தவர்கள் தொடர்பில் யாரும் சுட்டுவிரலை நீட்டுவதற்குத் தயக்கம் காட்டுகின்றனர் என்றும் பிரதமர் தொடர்ந்தும் தெரிவித்துள்ளார்.

# ஜனாதிபதி தேர்தல், ஊழல் மோசடி மிக்கதாகவே அமையும்!– கரு ஜயசூரிய

எதிர்வரும் ஆண்டில் நடைபெறவுள்ள ஜனாதிபதி தேர்தல் ஊழல் மோசடி மிக்கதாகவே அமையும் என ஐக்கிய தேசியக் கட்சியின் தலைமைத்துவ பேரவையின் தலைவர் கருஜயசூரிய தெரிவித்துள்ளார்.

கட்சியின் தலைமையகமான சிறிகொத்தவில் நேற்று நடைபெற்ற செய்தியாளர் சந்திப்பில் பங்கேற்ற போது அவர் இதனைக் குறிப்பிட்டுள்ளார்.

உத்தேச ஜனாதிபதி தேர்தல் ஜனநாயக விரோதமானதும்ஜ்ஜ ஊழல் மோசடிகள் நிறைந்தாகவும் அமைவதற்கான சாத்தியங்கள் தற்போதே தென்படத் தொடங்கியுள்ளது.

எதிர்வரும் ஜனாதிபதி தேர்தல் பிரச்சாரப் பணிகளுக்காக அண்மையில் ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சி கொழும்பு பான்ஸ் பிளேசில் காரியாலயம் ஒன்றை அங்குரார்ப்பணம் செய்தது.

இந்த நிகழ்வில் நாட்டின் உயர் பொறுப்புக்களை வகிக்கும் அமைச்சு செயலாளர்கள் பலர் பங்கேற்றிருந்தனர்.

இவர்களில் சிலர் நிர்வாக சேவை நியமனம் பெற்றுக்கொண்டவர்கள்.

நிர்வாக சேவை நியமனங்களைப் பெற்றுக்கொண்ட அரச அதிகாரிகள் அரசியல் நிகழ்வுகளில் பங்கேற்பது தடை செய்யப்பட்டுள்ளது.

பூரண அரசாங்கப் பொறிமுறைமையையும் தேர்தல் பிரச்சாரத்திற்காக பயன்படுத்திக் கொள்ளக்கூடிய சாத்தியங்கள் காணப்படுவதாகவே அரசாங்கத்தின் நடவடிக்கைகளின் மூலம் தெளிவாகின்றது.

இந்த நடவடிக்கைகள் குறித்து மக்களை தெளிவுபடுத்த வேண்டியது ஊடகங்களின் கடமையாகும்.

ஊடகவியலாளர்கள் இந்தப் பணிகளை சிறந்த முறையில் செய்வார்கள் என கருதுகின்றோம்.

உயர் பதவிகளை வகிக்கும் அரச அதிகாரிகள் எந்தவிதமான பயமோ சந்தேகமோ இன்றி அரசியல் நடவடிக்கைகளில் ஈடுபட முடியும் என்ற தைரியத்தை பாதுகாப்புச்செயலாளர் கோதபாய ராஜபக்சவே வழங்கியுள்ளார்.

கடந்த மேல் மாகாணசபைத் தேர்தலின் போது ஜாதிக ஹெல உறுமயவைச் சேர்ந்த உதய கம்மன்பிலவின் காரியாலய அங்குரார்ப்பண நிகழ்வில் கோதபாய பங்கேற்றார்.

இந்த நடவடிக்கையானது சட்டவிரோதமானது என நாட்டு மக்களும் தேர்தல் ஆணையாளரும் ஒப்புக்கொண்டனர்.

எதிர்காலத்தில் இவ்வாறான நடவடிக்கைகள் இடம்பெறுவதனை தடுக்க நடவடிக்கை எடுக்கப்படும் என தேர்தல் ஆணையாளர் குறிப்பிட்டிருந்தார்.

இவ்வாறான ஓர் நிலையில் அரசியல் கட்சியொன்றின் பிரச்சார காரியாலய அங்குரார்ப்பண நிகழ்வில் எவ்வாறு அரச அதிகாரிகள் பங்கேற்க முடியும் என தேர்தல் ஆணையாளரிடம் கேள்வி எழுப்புகின்றோம்.

ஜனாதிபதி தேர்தல் நியாயமானதும் சுயாதீனமானதுமாக இருக்க வேண்டும்.

ஜனாதிபதி தேர்தல் என்ற ஓட்டப் பந்தயத்தில் பங்கேற்க வேண்டுமாயின் ஜனாதிபதியும் ஒரே கோட்டிலிருந்து போட்டியை ஆரம்பிக்க வேண்டும்ஜ்ஜ மாறாக கோட்டுக்கு முன்னால் இருந்து ஓடக் கூடாது என ஜனாதிபதியிடம் கோருகின்றோம்.

ஜனதிபதி தேர்தல் பிரச்சாரத்திற்கு குறுகிய கால இடைவெளியே கிடைக்கும் என தகவல்கள் வெளியாகியுள்ளன.

முக்கியமான தேர்தல் ஒன்றுக்கு போதியளவு அவகாசம் வழங்கப்படாமை சர்ச்சைகளை ஏற்படுத்தக் கூடும்.

ஐக்கிய தேசியக் கட்சியின் ஜனாதிபதி வேட்பாளர் யார் என்பது உரிய நேரத்தில் அறிவிக்கப்படும் என கருஜயசூரிய தெரிவித்துள்ளார்.

# அளுத்தகம வன்முறைச் சம்பவத்தில் பாதிக்கப்பட்ட 131 வீடுகள் கையளிப்பு

அளுத்கமை மற்றும் பேருவளை பிரதேசங்களில் இடம்பெற்ற வன்முறைகளின் போது, சேதமடைந்த வீடுகளில் 131 வீடுகள் புனரமைக்கப்பட்டு உரிமையாளர்களிடம் வழங்கப்பட்டுள்ளதாக இராணுவப் பேச்சாளர் பிரிகேடியர் ருவான் வணிகசூரிய தெரிவித்தார்.

பாதுகாப்பு மற்றும் நகர அபிவிருத்தி அமைச்சின் ஊடக மையத்தில் இன்று புதன்கிழமை இடம்பெற்ற வாராந்த செய்தியாளர் சந்திப்பின்போது, அவர் இதனை தெரிவித்தார்.

அங்கு அவர் மேலும் தெரிவிக்கையில்,

87 வீடுகளின் சேதவிபரங்கள் அளவிடப்பட்டு அவற்றை நிர்மாணிக்கும் பணிகள் முன்னெடுக்கப்பட்டு வருகின்றன.

இதேவேளை 49 வர்த்தக நிலையங்கள் புனரமைக்கப்பட்டு உரிமையாளர்களிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளதுடன் 24 வர்த்தக நிலையங்களை புதுப்பிக்கும் நடவடிக்கைகள் தொடர்ந்து முன்னெடுக்கப்பட்டு வருகின்றன.

இந்த பணிகள் இன்னும் ஒரு சில மாதங்களில் நிறைவடையவுள்ளதாகவும் இராணுவ பேச்சாளர் தெரிவித்தார்.

# ஜனாதிபதித் தேர்தலுக்கு தயாராகும் ஐ.தே.கட்சியின் தலைமைத்துவச் சபை

ஜனாதிபதித் தேர்தலுக்காக எதிர்க்கட்சியை உடனடியாக தயார்படுத்துவதற்கு தேவையான அடுத்த கட்ட நடவடிக்கைகள் தொடர்பில் ஆராய ஐக்கிய தேசியக் கட்சியின் தலைமைத்துவச் சபை கூடவுள்ளது.

எதிர்வரும் 10 ஆம் திகதி தலைமைத்துவச் சபையின் தலைவரான நாடாளுமன்ற உறுப்பினர் கரு ஜயசூரியவின் தலைமையில் இந்த அமர்வு நடைபெறவுள்ளது.

ஐக்கிய தேசியக் கட்சியின் தலைமையகமான சிறிகொத்தவில் காலை 10 மணிக்கு நடைபெறும் இந்த கூட்டத்தில் தலைமைத்துவச் சபை முன்னெடுத்து வரும் ஜனஜய வேலைத்திட்டத்தை நாடு முழுவதும் தொடர்ந்தும் மேற்கொள்வதற்கு தேவையான நடவடிக்கைகள் எடுக்கப்படவுள்ளன.

ஊவா மாகாண சபைத் தேர்தலில் ஐக்கிய தேசியக் கட்சி பெற்ற முன்னேற்றம் தொடர்பில் விரிவான ஆராய்ந்து, ஜனாதிபதித் தேர்தலை இலக்கு வைத்து, கிராம மற்றும் கீழ் மட்டத்தில் செயற்படுத்தப்பட வேண்டிய நடவடிக்கைகள் சம்பந்தமாக தீர்மானங்கள் எடுக்கப்பட உள்ளன.




# ரணில் – சஜித் மீண்டும் கூட்டு! அதிர்ச்சியில் ஆளும்தரப்பினர்

ஐக்கிய தேசியக் கட்சியின் தலைவர் ரணில் விக்ரமசிங்க, பிரதித் தலைவர் சஜித் பிரேமதாச ஆகியோருக்கு இடையிலான இணக்கப்பாடு ஆளும் கட்சியின் அமைச்சர்களுக்கு மகிழ்ச்சியை ஏற்படுத்தியுள்ளதாக அந்தக் கட்சியின் நாடாளுமன்ற உறுப்பினர் நலின் பண்டார தெரிவித்துள்ளார்.

கட்சியின் வெற்றிக்காக கட்சித் தலைவர் ரணில் விக்ரமசிங்கவும், பிரதித் தலைவர் சஜித் பிரேமதாசவும் ஏற்படுத்திக்கொண்ட இணக்கப்பாடு தொடர்பில் ஆளும் கட்சி அமைச்சர்களே அதிகளவில் வாழ்த்துக்களை தெரிவிக்கின்றனர்.

மாற்றம் தேவை என ஆளும் கட்சி அமைச்சர்களும் உணர்ந்து கொண்டுள்ளனர். ஆளும் கட்சியினர் பதற்றமடைந்துள்ளனர்.

தோல்வியின் இருண்ட கிரணங்கள் ஆளும் கட்சியின் மீது படரத் தொடங்கியுள்ளது.

ஐக்கிய தேசியக் கட்சிக்குள் ஒற்றுமை இல்லை என்றே ஆளும் கட்சி பிரச்சாரம் செய்து வந்தது. ஒற்றுமையின் பலம் ஊவா மாகாணசபைத் தேர்தல்களின் போது தென்பட்டது.

ஜனாதிபதி தேர்தலில் ரணில் விக்ரமசிங்கவின் வெற்றிக்காக கட்சியின் பிரதித் தலைவர் சஜித் பிரேமதாச அர்ப்பணிப்புடன் செயற்படுவார் என நலின் பண்டார தெரிவித்துள்ளார்.

சிங்களப் பத்திரிகையொன்றுக்கு அளித்த நேர் காணலில் அவர் இதனைக் குறிப்பிட்டுள்ளார்.

# சுதந்திரக் கட்சி உறுப்பினர்களைக் குழப்பிய ஜனாதிபதி மகிந்த

இரண்டு தடவைகள் ஜனாதிபதியாக பதவி வகித்த காரணத்தினால், இம்முறை தேர்தலில் போட்டியிடாவிட்டாலும் பரவாயில்லை என ஜனாதிபதி மஹிந்த ராஜபக்ச தெரிவித்துள்ளார்.

நேற்று முன்தினம் அலரி மாளிகையில் நடைபெற்ற ஸ்ரீலங்கா சுதந்திரக் கட்சியின் மத்திய செயற்குழுக் கூட்டத்தில் பங்கேற்ற போது அவர் இதனைக் குறிப்பிட்டுள்ளார்.

''நான் இரண்டு தடவைகள் ஜனாதிபதியாக பதவி வகித்தேன் தானே, தற்போது நான் கேட்டாலும் கேட்காவிட்டாலும் பரவாயில்லை'' என தெரிவித்துள்ளார்.

இதன் போது ''சேர் போட்டியிடாவிட்டால் நான் போட்டியிடுவேன்'' என மத்திய செயற்குழு உறுப்பினர் ஒருவர் ஜனாதிபதியிடம் தெரிவித்துள்ளார்.

ஜனாதிபதித் தேர்தலில் போட்டியிடப் போவதாக தெரிவித்த மத்திய செயற்குழு உறுப்பினர் ஓர் மாகாணசபையின் ஆளும் கட்சி அமைச்சர் எனத் தெரிவிக்கப்படுகிறது.

அமைச்சரவை தீர்மானங்களை அறிவிக்கும் செய்தியாளர் சந்திப்பில் பங்கேற்றதன் பின்னர் சில ஊடகவியலாளர்களிடம் அமைச்சர் கெஹலிய ரம்புக்வெல்ல குறித்த மாகாண அமைச்சரின் அறிவிப்பு பற்றி குறிப்பிட்டுள்ளார்.

# கனடா செய்திகள்

## காவலூர் புனித அந்தோனியார் கல்லூரி உடற்பயிற்சி குழுவினரின் சாதனை!



அகில இலங்கை டகதியில் நடைபெற்ற உடற்பயிற்சி போட்டியில் காவலூர் புனித அந்தோனியார் கல்லூர் மாணவர் குழுவினர் மூன்றாம் இடத்தைப் பெற்று பெரும் சாதனையை நிலை நாட்டியுள்ளனர். கொழும்பில் அண்மையில் நடைபெற்ற உடற் பயிற்சி போட்டியில் வெண்கலப் பதக்கத்தைப் பெற்று அவர்கள் இச்சாதனையை நிலை நாட்டி கல்லூரிக்குப் பெருமை சேர்த்துள்ளனர்.

இச்சாதனையை தொடர்ந்து ஆறு வருட காலமாக நிலை நாட்டி வருகின்றனர் என்பது குறிப்பிடத்தக்கது. 2011ம் ஆண்டு இப்போட்டியில் முதலாம் இடத்தைப் பெற்று தங்கப் பதக்கத்தை வென்று பெரும் சாதனையை நிலை நாட்டினார்கள் என்பதும் குறிப்பிடத்தக்கது. இப்போட்டியில் கலந்து கொண்டு சாதனை நிலை நாட்டிய குழுவி னரைப் படத்தில் காணலாம்.

(வீரகேசரி மூர்த்தி)

## ஈராக்கின் இஸ்லாமிய அரசின் வன் செயல் குறித்து கனடா வருத்தம் தெரிவிப்பு

ஈராக்கின் இஸ்லாமிய அரசு ஆர்மேனியன் தேவாலயத்தையும், 1915ம் ஆண்டு இனப்படுகொலை செய்ய ப்பட்டோரின் உடல்கள் புதைக்கப்பட்ட ஞாபகார்த்த மண்டபத்தையும் இடித்து அழித்தமைக்கு கனடா வருத்தம் தெரிவித்துள்ளது. மத சுதந்திரத்துக்கான கனடா தூதுவர் திரு. அன்ட்றூ பெனெற் இது சம்பந்தமாக அறிக்கை ஒன்றினை வெளியிட்டுள்ளார்.

புனித இடத்தை காட்டு மிராண்டி தனமாக வேண்டுமென்றே இடித்தழித்துள்ள இஸ்லாமிய அரசின் செயல் அதன் உண்மையான நோக்கத்தை வெளிப்படுத்தி உள்ளது. மனித இனத்தின் மகிமை, அடிப்படை உரிமை, மத உரிமை ஆகியவற்றுக்கு எதிராக மேற்கொள்ளப்பட்ட இச்செயல் மிகவும் கண்ட னத்துக்கு உரியதாகும். இஸ்லாமிய அரசு பர்பாடின்றி கிறீஸ்த்தவ, யசிடிஸ், சியா, சுண்ணி ஆகிய மதத்தினரையும் அவர்களது வணக்க ஸ்தலங்களையும் தாக்கி அழித்து வருகின்றது. இஸ்லாம் மதத்தின் செய்திகளை திரிபுபடுத்திக் கூறி ஆயிரக்கணக்கான அப்பாவி மக்களை கொன்றழித்து வரும் பயங்கரவாத குழுவின் செயலை கனடா வன்மையாகக் கண்டிக்கிறது எனவும் இவ்வறிக்கையில் குறிப்பிடப்பட்டுள்ளது.

## தேர்தல் வாக்குகளையும், முன்கூட்டிய வாக்குகளையும் சரிவர எண்ணுவதற்கு தொழில் நுட்ப வசதிகள்

இம்மாதம் 27ம் திகதி நடைபெறவிருக்கும் மார்க்கம் மாநகர சபை தேர்தலில் வாக்காளர்களினால் இடப்படும் வாக்குகள், முன்கூட்டியே அளிக்கப்படவிருக்கும் வாக்குகள், கணணி மூலம் பதிவு செய்யப் படும் வாக்குகள் ஆகிய அனைத்தையும் தவறேதுமின்றி சரியான முறையில் எண்ணுவதற்கான தொழில் நுட்ப வசதிகள் யாவும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளதாக மார்க்கம் மாநகர சபையின் தேர்தல் அதிகாரி யான கிம்பனி கிற்றறிங்கம் அறிவித்துள்ளார்.

இணையத்தளம் மூலம் அளிக்கப்படும் வாக்குகளை எண்ணுவதற்குரிய கணினி மென்பொருள் வசதிகளு க்கு ஸுஉலவட ஊயனெய ஐஉெ. என்ற கொம்பனியுடன் ஒப்பந்தம் செய்யப்பட்டிருப்பதாகவும் வேறு எந்த கொம்ப னிகளுடனும் ஒப்பந்தம் செய்யப் படவில்லை எனவும் அவர் தெரிவித்துள்ளார்.

## சென்னை மெற்றோ (Chennai Metro) பத்திரிகையை ஈ--மெயிலில் பெறலாம்

சென்னையில் இருந்து Chennai Metro என்ற பத்திரிகை தினசரி மாலையில் வெளியிடப்படுகின்றது. திரு.எஸ்.ஏ.என்.வசீகரன் இதன் பிரதம ஆசிரியராக உள்ளார். இப்பத்திரிகையை உங்களது ஈ-மெயிலில் பெற்றுக் கொள்ளக் கூடிய வசதி செய்யப்பட்டுள்ளது. அதனை பார்க்க விரும்புவோர் உங்களது ஈ-மெயில் முகவரியை cmetrodaily@gmail.com என்ற ஈ-மெயில் முகவரிக்கு அனுப்பி வைத்தால் போதும். அவர்கள் தினசரி உங்களது ஈ-மெயிலுக்கு பத்திரிகையை அனுப்பி வைப்பார்கள்.

## கனடா செய்திகள்

# "உலக நாடுகளில் தாய்மார், பிள்ளைகளின் மரணம் தடுக்கப்பட வேண்டும்!"

### ஐ.நா.வின் 69வது வருடாந்த மகாநாட்டில் கனடா பிரதமர் ஹாப்பர் வலியுறுத்தல்

'உலக நாடுகளில் மரண அபாயத்தை எதிர் நோக்கி இருக்கும் தாய்மார்கள், குழந்தைகள், பிறக்கவிரு க்கும் சிசுக்கள் ஆகியோரது மரணங்கள் தடுக்கப்பட வேண்டும். மரணத்திலிருந்து இவர்களைக் காப்பா ற்றும் நடவடிக்கையினை கனடா தலைமை தாங்கி வழி நடத்த முன்வந்துள்ளது. பல்வேறு நாடுகளில் மரண அபாயத்தை எதிர்நோக்கி இருக்கும் தாய்மார்கள், பிள்ளைகள் பாதுகாக்கப் பட வேண்டும் என உலகத் தலைவர்கள் மத்தியில் 2010ம் ஆண்டு 'ஆரளமழமய' திட்டத்தின் மூலம் கனடா வலியுறுத்தி இருந்தது. அதனை மீண்டும் 2014ம் ஆண்டு ரொறண்டோ நகரில் நடைபெற்ற 'ஆயுத முனையிலிருந்து ஒவ்வொரு தாய்மாரும் பிள்ளைகளும் பாது காக்கப் பட வேண்டும்' என வலியுறுத்தி இருந்தது. அடுத் தாண்டுக்கான செயற் திட்டத்தில் இதற்கு முக்கியத்துவம் அளிக்கப்பட வேண்டும்'.



இவ்வாறு கனடா பிரதமர் திரு.ஸ்ரீபன் ஹாப்பர் கடந்த 25ம் திகதி நியு?? யோர்க் நகரில் நடைபெற்ற ஐக்கிய நாடுகள் சபையின் 69வது வருடாந்த மகாநாட்டில் வலியுறுத்தி உரையாற்றினார். ஸ்ரீலங்கா உட்பட பல்வேறு வறிய நாடுகளில் பிள்ளைகளும் மற்றும் தாய்மார் கற்பழிக்கப்பட்டு ஈவிரக்கமற்ற முறையில் அரச படைகளினால் கொன்றழிக்கப்பட்டு வருவதும் சர்வ சாதாரண நிகழ்ச்சி ஆகிவிட்ட இவ்வேளையில் பிரதமரின் பேச்சு மகாநாட்டில் கலந்து கொண்டிருந்த அனைத்து நாடுகளினதும் தலை வர்களின் கவனத்தை ஈர்த்தது.

மகாநாட்டில் உரையாற்றுவதற்கு முன்னர் கனடா பிரதமர் இத்திட்டத்தினை ஒன்றிணைந்து செயலாற்ற முன்வந்த ஐ.நா. செயலாளர் நாயகம் திரு.பன்கி மூன், உலக வங்கி தலைவர் டாக்டர் ஜிம் யொங் கிம், நோர்வே பிரதமர் திரு.எர்னா சொல்பேர்க், அமெரிக்க உதவித் திட்ட நிர்வாகி டாக்டர் றஜிவ் ஷா ஆகியோருடன் கலந்துரையாடி இருந்தார்.

இம்மகாநாட்டில் பங்கு பற்றிய தன்சானிய ஐக்கிய குடியரசின் ஜனாதிபதி திரு.ஜகய சிக்வெத், உலக சுகாதார நிறுவனத்தின் செயலாளர் நாயகம் டாக்டர் மாகிறற் சான் ஆகியோர் வளர்முக நாடுகளில் தாய்மார்கள், பிள்ளைகள் ஆகியோரின் நலனை உறுதி செய்வதற்கு பிறப்பு, இறப்பு அத்தாட்சிப் பதிவு நடவடிக்கை அபிவிருத்தி செய்யப்பட வேண்டும் என்பதனை உறுதிப்படுத்தினார்கள்.

## இலங்கை செய்திகள்

# கிணற்றுத் தவளையாகிவிட்ட ஜனாதிபதி குடும்பம்: ஹெல உறுமய

நாட்டில் தற்போது குடும்ப ஆட்சி நடைபெறுவதால் ஜனாதிபதியின் குடும்பத்தினர் என்ன நடக்கிறது என்பது கூட அறியாதவர்களாக இருப்பதாக ஜாதிக ஹெல உறுமயவின் நாடாளுமன்ற உறுப்பினர் அத்துரலியே ரத்ன தேரர் குற்றம் சுமத்தியுள்ளார்.

கொழும்பில் வெளியாகும் ஊடகம் ஒன்றுக்கு வழங்கிய போட்டியில் அவர் இதனை கூறியுள்ளார். அவர் மேலும் தெரிவிக்கையில்,–ண

அரசாங்கத்தின் அமைச்சுக்களில் அதிகளவான அமைச்சுக்கள் ஜனாதிபதிக்கும் அவரது சகோதரர் பசில் ராஜபக்ஷவிற்கும்மிடையில் பகிரப்பட்டுள்ளது.

ஏனைய அமைச்சுகள் வெறுமையான அமைச்சுக்கள் என்ற நிலையிலேயே இருக்கின்றது.

அரசியல் அமைப்பின் 57வது பிரிவின் படி ஜனாதிபதி, நிதி அமைச்சர் ஒருவரை நியமிக்க முடியும். எனினும் அந்த அமைச்சை ஜனாதிபதி தனது பொறுப்பில் வைத்து கொண்டு அரசியல் அமைப்பிற்கு எதிராகவே செற்படுகின்றார்.

நாட்டின் வரவு செலவு திட்டத்தில் ஒதுக்கப்படும் 75 வீதமான நிதியை கையாளும் பொறுப்பை ஜனாதிபதி தன் கையில் வைத்துள்ளார். இந்த நிதி முழுதும் துறைமுகம், வீதி நிர்மாணத்திற்கே செலவு செய்யப்படுகின்றது.

தனி நபர் கையில் அதிகாரங்கள் குவிந்து கிடப்பதால், நாட்டில் ஊழல், நீதி, ஜனநாயகம், தேர்தல் முதலானவற்றில் தலையீடுகள் அதிகரித்து நாடு சீரழிந்து வருகின்றது.

நாங்கள் இது சம்பந்தமாக தொடர்ச்சியாக சமர்ப்பித்து வரும் கோரிக்கைகள் கவனிக்கப்படாவிட்டால் . மாற்றுவழியை நாடவேண்டிய சூழ்நிலை உருவாகும் அதிகார மயக்கத்தில் இப்பொழுது அரசு தள்ளாடி க்கொண்டு இருக்கின்றது.

ஜனாதிபதியை சுற்றியிருக்கும் பரிவாரங்கள் காரணமாகவே ஜனாதிபதியினால், மக்களின் மனநிலையை புரிந்துக் கொள்ள முடியாமல் இருக்கின்றது என்றும் அத்துரலிய ரத்ன தேரர் தனது ஆதங்கத்தை வெளிப்படுத்தியுள்ளார்.

# கூட்டமைப்பின் கோரிக்கையை நிராகரித்தார் மோடி: மஹிந்த தெரிவிப்பு

இலங்கை அரசுடன் தாங்கள் பேச்சு நடத்துவதானால் இந்தியா விசேட பிரதிநிதியை நியமிக்க வேண்டும் என்று தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு முன்வைத்த கோரிக்கையை இந்தியப் பிரதமர் நரேந்திர மோடி நிராகரித்திருக்கிறார் என ஜனாதிபதி மஹிந்த ராஜபக்ஷ கூறியிருக்கிறார்.

ஐ.நா. பொதுச் சபைக் கூட்டத்தில் பங்கேற்க ஜனாதிபதி அமெரிக்கா சென்றிருந்த போது இந்தியப் பிரதமரை சந்தித்துப் கலந்துரையாடலில் ஈடுபட்டார்.

இந்த சந்திப்புக் குறித்து அமைச்சரவையில் உரையாற்றிய போதே மஹிந்த இவ்வாறு தெரிவித்தார். அங்கு அவர் மேலும் தெரிவிக்கையில்,

இந்தியப் பிரதமர், தமிழ்த் தேசிய கூட்டமைப்புடன் பேச்சு நடத்துமாறு மட்டுமே என்னிடம் தெரிவித்தார். அத்துடன் பேச்சுக்காக விசேட பிரதிநிதியை இந்தியா நியமிக்க வேண்டும் என்ற கூட்டமைப்பினரின் கோரிக்கையைத் தான் நிராகரித்திருந்தார் என்பதையும் மோடி எனக்குத் தெளிவுபடுத்தினார் என தெரிவித்தார்.

மேலும் இந்தியா ஒருபோதும் இலங்கைக்கு விரோதமாக செயற்படாது எனவும் மோடி தன்னிடம் உறுதியளித்த தாகவும் ஜனாதிபதி குறிப்பிட்டுள்ளார்.

# பேஸ் புக் ஊடாக யுவதியை ஏமாற்றிய பௌத்த பிக்கு கைது

பேஸ் புக் சமூக வலையமைப்பின் ஊடாக யுவதி ஒருவரை ஏமாற்றிய பௌத்த பிக்குவை பொலிஸார் கைது செய்துள்ளனர்.

பேஸ் புக் சமூக வலையமைப்பின் ஊடாக அறிமுகமான 18 வயதான யுவதி ஒருவரை காதலித்து ஏமாற்றியதாக 24 வயதான பௌத்த பிக்கு ஒருவருக்கு எதிராக குற்றம் சுமத்தப்பட்டுள்ளது.

சந்தேக நபரை பொலிஸார் இன்று நீதிமன்றில் முன்னிலைப்படுத்தியுள்ளனர். இதன்போது எதிர்வரும் 7ம் திகதி வரையில் விளக்க மறியலில் வைக்குமாறு நீர்கொழும்பு பிரதான நீதவான் பூர்ணிமா ப ர ண க ம ே க உத்தரவிட்டுள்ளார்.

பௌத்த பிக்கு குறித்த யுவதியிடம் தம்மை சாதாரண ஓர் இளைஞராக காண்பித்துக் கொண்டுள்ளார் என பொலிஸார் குற்றம் சுமத்தியுள்ளனர்.

பௌத்த பிக்குவாகவும் சாதாரண இளைஞராகவும் இரட்டை வேடம் போட்ட காரணத்திற்காக கைது செய்ததாக பொலிஸார் தெரிவித்துள்ளனர்.

மாத்தளை வில்கமுவ என்னும் இடத்தைச் சேர்ந்த சமன் புஸ்பகுமார என்ற பௌத்த பிக்குவே இவ்வாறு கைது செய்யப்பட்டுள்ளார்.

குறித்த பௌத்த பிக்கு மற்றுமொரு விஹாரைக்கு சென்று காவி உடையை களைந்து சாதாரண உடையில் யுவதியை பார்வையிடச் சென்றுள்ளார்.

இருவரினதும் புகைப்படங்கள் பேஸ் புக் வலையமைப்பில் பிரசுரிக்கப்பட்டுள்ளதாக பொலிஸார் தெரிவித்துள்ளனர்.

சந்தேக நபர் ஓர் பௌத்த பிக்கு என்பதனை யுவதியின் பெற்றோர் கண்டறிந்து கொண்டதன் பின்னர் பொலிஸ் நிலையத்தில் முறைப்பாடு செய்துள்ளனர்.

சம்பவம் தொடர்பில் நீர்கொழும்பு பொலிஸார் விசாரணைகளை ஆரம்பித்துள்ளனர்.

# தமிழக செய்திகள்

## கலைஞர் தொலைக்காட்சிக்கு சட்ட விரோதமாக பணப்பரிமாற்றம் செய்யப்பட்டதாக வழக்கு: 20-ம் தேதி உத்தரவிடப்படும் என நீதிபதி அறிவிப்பு

கலைஞர் தொலைக்காட்சிக்கு சட்டவிரோதமாக பணப்பரிமாற்றம் செய்யப்பட்டதாக தொடரப்பட்ட வழக்கில், முன்னாள் மத்திய அமைச்சர் ஆ.ராசா, மாநிலங்களவை உறுப்பினர் கனிமொழி ஆகியோர் மீது குற்றச்சாட்டுகள் பதிவு செய்வது குறித்து அடுத்த மாதம் 20 - ம் தேதி உத்தரவிடப்படும் என்று நீதிபதி ஓ.பி. சைனி தெரிவித்துள்ளார்.

டெல்லி சிபிஐ சிறப்பு நீதிமன்றத்தில் நடைபெற்று வரும் இந்த வழக்கு விசாரணையின் போது, திமுக தலைவர் கருணாநிதியின் மனைவி தயாளு அம்மாள், கலைஞர் தொலைக்காட்சியின் இயக்குநர்களில் ஒருவரான அமிர்தம் உள்ளிட்டோர் மீதான குற்றச்சாட்டுகள் தொடர்பாக அவர்கள் தங்களது வாதத்தை எழுத்துப்பூர்வமாக திங்கட்கிழமை நீதிமன்றத்தில் அளித்தனர். இதன் மீதான எதிர்வாதம் வரும் புதன்கிழமையன்று எழுத்துப்பூர்வமாக தாக்கல் செய்யப்படும் என்று அமலாக்கத்துறையின் சார்பில் தெரிவிக்கப்பட்டது. இதனையடுத்து வழக்கு விசாரணையை அடுத்த மாதம் 20- ம் தேதிக்கு ஒத்திவைத்த நீதிபதி ஷைனி, அன்றைய தினம் குற்றச்சாட்டு பதிவு செய்வது குறித்து உத்தரவிடப்படும் என்று கூறினார். இதே வழக்கில் குற்றம்சாட்டப்பட்டுள்ள ஆ.ராசா, கனிமொழி, ஷாகித் பல்வா ஆகியோர் மீதான குற்றச்சாட்டுகள் குறித்து அவர்கள் தங்களது வாதத்தை கடந்த வெள்ளிக்கிழமையன்று முன் வைத்தனர். 2ஜி அலைக்கற்றையை முறைகேடாக ஒதுக்கீடு பெற்றதற்கு பிரதிபலனாக ஸ்வான் டெலிகாம் நிறுவனம் கலைஞர் தொலைக்காட்சிக்கு 200 கோடி ரூபாய் லஞ்சமாக கொடுத்ததாக வழக்கு தொடரப்பட்டுள்ளது. இது தொடர்பாக முன்னாள் மத்திய அமைச்சர் ஆ.ராசா, மாநிலங்களவை உறுப்பினர் கனிமொழி உள்ளிட்ட 19 பேர் மீது குற்றம்சாட்டப்பட்டுள்ளது.

## ஆவின் பால் கலப்பட விவகாரம்: வைத்தியநாதன் மீண்டும் சிறையில் அடைப்பு

ஆவின் பால் கலப்பட விவகாரம் தொடர்பாக கைது செய்யப்பட்ட வைத்தியநாதன் 6 நாள் சிபிசிஐடி விசாரணைக்குப் பின், மீண்டும் கடலூர் சிறையில் அடைக்கப்பட்டார்.



வைத்தியநாதனை விசாரிக்க வழங்கப்பட்ட 6 நாள் காவல் முடிந்த நிலையில், விழுப்புரம் மாவட்ட குற்றவியல் நடுவர் நீதிமன்றத்தில் அவரை சிபிசிஐடி காவல்துறையினர் திங்கட்கிழமை ஆஜர்படுத்தினர். இதையடுத்து நீதிமன்றக் காவலில் மீண்டும் சிறையிலிடைக்குமாறு நீதிபதி உத்தரவிட்டார். ஆவின் பால் கலப்படத்தில் எவ்வளவு வருவாய் ஈட்டப்பட்டது, அது யார், யாருக்கு பகிர்ந்தளிக்கப்பட்டது என்பது குறித்து 6 நாள் காவலின்போது, வைத்தியநாதனிடம் விசாரணை நடத்தப்பட்டதாக சிபிசிஐடி அதிகாரிகள் கூறியுள்ளனர். அதன் அடிப்படையில், ஆவின் பால் கலப்படத்தால் பலன் அடைந்தவர்களின் பட்டியலை தயாரிக்கும் பணி மேற்கொள்ளப்பட்டு வருவதாக தகவல்கள் வெளியாகியுள்ளன. மேலும், தனியார் பால் நிறுவனங்களிடம் விசாரணை நடத்தவும் சிபிசிஐடி அதிகாரிகள் திட்டமிட்டுள்ளனர். வைத்தியநாதனின் வங்கிக்கணக்கில் நடைபெற்ற பணப் பரிமாற்றம் குறித்தும் விசாரணை மேற்கொள்ளப்பட்டதாக சிபிசிஐடி போலீசார் தெரிவித்தனர். தலைமறைவாக உள்ள வைத்தியநாதனின் மனைவி உட்பட மூன்று பேரை தேடும் பணி தொடர்ந்து மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## ஜெயலலிதாவுக்கு சிறைத்தண்டனை: மதுரை, திருச்சியில் இன்று கடையடைப்பு

சொத்துக்குவிப்பு வழக்கில் அதிமுக பொதுச்செயலாளர் ஜெயலலிதா கைது செய்யப்பட்டதற்கு எதிர்ப்பு தெரிவித்து மதுரை, திருச்சி மற்றும் நாமக்கல் ஆகிய மாவட்டங்களில் செவ்வாய்க்கிழமை கடையடைப்பு போராட்டம் நடைபெறும் என அறிவிக்கப்பட்டுள்ளது.

வணிகர் கூட்டமைப்பு சார்பில் நடத்தப்படும் இந்த கடையடைப்பு போராட்டத்திற்கு மதுரையில் உள்ள 36 சங்கங்கள் ஆதரவு தெரிவித்துள்ளன. அதிமுக பொதுச்செயலாளர் ஜெயலலிதா, வணிகர்களின் நலன்களை பாது காக்கும் வகையில், அந்நிய நேரடி முதலீட்டிற்கு எதிர்ப்பு, பொருள் மற்றும் சேவை வரிக்கு எதிர்ப்பு தெரிவித்ததால் அவருக்கு ஆதரவாக இந்த கடையடைப்பு போராட்டம் நடத்தப்படுவதாக தெரிவிக்கப்பட்டுள்ளது. இந்நிலையில் நெல்லை மற்றும் திண்டுக்கலில் அதிமுக சார்பில் உண்ணாவிரதப் போராட்டம் நடைபெறும் என்று அறிவிக்கப்பட்டுள்ளது.



## ஜெயலலிதாவுக்கு சிறைத் தண்டனை: தமிழகம், புதுச்சேரியில் அதிமுகவினர் போராட்டம்



ஜெயலலிதாவுக்கு சிறைத்தண்டனை விதிக்கப்பட்டதைக் கண்டித்து, தமிழகம் மற்றும் புதுச்சேரியில் பல்வேறு இடங்களில் அதிமுகவினர் போராட்டம் நடத்தினர்.

புதுச்சேரி மாநிலத்தில் ரயில் மறியலில் ஈடுபட்ட அதிமுகவினரை காவல்துறையினர் கைது செய்தனர். மேலும், தமிழகத்தில் திருப்பூர் மாவட்டத்தில் ரயில் நிலையம் முன் கருப்புச் சட்டை அணிந்து அதிமுகவினர் போராட்டத்தில் ஈடுபட்டனர். மேலும் காஞ்சிபுரம், தஞ்சாவூர், திருவண்ணாமலை, கிருஷ்ணகிரி, தருமபுரி, ஈரோடு, விழுப்புரம், கும்பகோணம், சேலம், கடலூர், தேனி, திருவாரூர், மாவட்டங்களில் பல்வேறு பகுதிகளில் அதிமுகவினர் உண்ணாவிரதத்தில் ஈடுபட்டனர். மேலும் திருவாரூர் மற்றும் நாகை அரசு கலைக்கல்லூரி மாணவர்கள் வகுப்புகளைப் புறக்கணித்து போராட்டத்தில் ஈடுபட்டனர். தஞ்சாவூர், நாகை, சீர்காழி மாவட்டத்தில் உள்ள மீனவர்கள் வேலைநிறுத்தத்தில் ஈடுபட்டனர். கன்னியாகுமரி மற்றும் தஞ்சை மாவட்டத்தில் ஒருசில இடங்களில் அரசியல் கட்சித் தலைவர்களின் உருவ பொம்மைகள் எரிக்கப்பட்டன, புதுக்கோட்டை மாவட்டத்தில் அதிமுகவினர் நடத்திய போராட்டத்தில் சில தொண்டர்கள் மொட்டை அடித்தும் பெண்கள் ஒப்பாரி வைத்தும் உண்ணாவிரதத்தில் ஈடுபட்டனர்.

கல்லூரி மாணவர்கள் மறியல்: ஜெயலலிதாவிற்கு விதிக்கப்பட்ட தண்டனையை ரத்து செய்யக் கோரி மாநில கல்லூரி மாணவர்கள் சென்னையில் சாலை மறியலில் ஈடுபட்டனர். காமராஜர் சாலையில் நடந்த இந்த போராட்டத்தின்போது அதிமுக பொதுச்செயலாளர் ஜெயலலிதாவை விடுதலை செய்யக்கோரி முழக்கங்கள் எழுப்பப்பட்டன. மாணவர்களின் சாலைமறியலால் போக்குவரத்து பாதிக்கப்பட்டது.

## மழை குறைவு: மேட்டூர் அணைக்கு வரும் நீரின் அளவும் குறைவு



காவிரி நீர்ப்பிடிப்புப் பகுதிகளில் பெய்து வரும் மழையின் அளவு குறைந்ததால் மேட்டூர் அணைக்கு வரும் நீரின் அளவு குறைந்திருக்கிறது.

மேட்டூர் அணைக்கு ஞாயிற்றுக்கிழமை வினாடிக்கு 34 ஆயிரத்து 661 கன அடி தண்ணீர் வந்தது. அது படிப்படியாகக் குறைந்து தற்போது வினாடிக்கு 27 ஆயிரத்து 873 கன அடி தண்ணீர் வந்து கொண்டிருக்கிறது. அணையின் நீர் இருப்பு 54.66 டிஎம்சியாக உள்ளது. பாசனத்திற்காக மேட்டூர் அணையிலிருந்து வினாடிக்கு 18 ஆயிரத்து 600 கன அடி தண்ணீர் வெளியேற்றப்படுகிறது. தென்மேற்குப் பருவமழையால் மேட்டூர் அணையின் நீர்மட்டம் 100 அடியை தாண்டியதால் ஆகஸ்ட் 10ஆம் தேதி பாசனத்திற்காக மேட்டூர் அணை திறக்கப்பட்டது. ஆனால், நீர் வரத்து தொடர்ச்சியாக குறைந்ததால் நீர் மட்டமும் குறைந்து கொண்டே வந்தது. மேட்டூர் அணையிலிருந்து திறக்கப்படும் தண்ணீரை நம்பி டெல்டா பகுதிகளில் சுமார் 17 லட்சம் ஏக்கர் பரப்பில் குறுவை, சம்பா உள்ளிட்ட பயிர்கள் சாகுபடி செய்யப்படுகின்றன.

# ஹாங்காங்கில் மாணவர்களின் போராட்டம் தீவிரம்



ஜனநாயகம் கோரி, ஹாங்காங்கில் மாணவர்கள் நடத்தி வரும் போராட்டம் தீவிரமடைந்துள்ளது. ஹாங்காங் நகரின் பல பகுதிகளிலும் போராட்டக்காரர்கள் தங்கியுள்ளனர். ஞாயிற்றுக்கிழமை நடைபெற்ற போராட்டங்களில் காவல்துறையினர் மாணவர்கள் மீது கண்ணீர்ப் புகைக் குண்டுகளை வீசினர். எனினும் அங்கிருந்து வெளியேற மறுத்து மாணவர்கள் தொடர் போராட்டத்தில் ஈடுபட்டனர். இதனிடையே காவல்துறையினர் ரப்பர் குண்டுகளை வீசினால் மாணவர்கள் பின் வாங்க வேண்டும் என, போராட்டக் குழுவின் தலைவர் சன் கின் மேன் அறிவுறுத்தியுள்ளார். இந்நிலையில், ஹாங்காங் பிராந்திய தலைமை நிர்வாகி, லெங் சன் யிங், இந்த போராட்டத்தால் மக்களின் இயல்பு வாழ்க்கை வெகுவாக பாதிக்கப்பட்டுள்ளதாகவும், மாணவர்கள் தங்கள் போராட்டங்களைக் கைவிட வேண்டும் எனவும் கேட்டுக் கொண்டுள்ளார்.

வரும் 2017–ல் ஹாங்காங் ஆட்சியாளரை நேரடியாகத் தேர்வு செய்ய வாக்கெடுப்பு நடத்தப்படும் என்று சீனா அறிவித்திருந்தது. எனினும் தேர்தலில் போட்டியிடுபவர்களின் பெயர்களை சீன அரசே வெளியிடும் என அறிவித்தது. இதற்கு எதிர்ப்பு தெரிவித்து மாணவர்கள் போராட்டம் நடத்தி வருகின்றனர்.

# ஆப்கன் புதிய அதிபராக அஷ்ரஃப் கனி பதவியேற்பு

ஆப்கானிஸ்தான் நாட்டின் புதிய அதிபராக அஷ்ரஃப் கனி பதவி ஏற்றுக்கொண்டார். தலைநகர் காபூலில் நடைபெற்ற விழாவில் நாட்டின் 13வது அதிபராக அவர் பதவி ஏற்றார்.

அஷ்ரஃப் கனியை எதிர்த்து போட்டியிட்ட அப்துல்லா தலைமை செயல் அதிகாரியாக பதவி ஏற்றுக்கொண்டார். ஆப்கானிஸ்தானில் கடந்த ஜூன் மாதம் அதிபர் தேர்தல் நடைபெற்றது. இதில் போட்டியிட்ட அஷ்ரஃப் கனி மற்றும் அப்துல்லா இருவரும், தேர்தலில் முறைகேடுகள் நடைபெற்றதாகக் கூறி, வந்தது. அதேசமயம் தலிபான் தீவிரவாதிகளின் அச்சுறுத்தலும் இருந்து வந்தது. இந்நிலையில், அஷ்ரஃப் கனி மற்றும் அப்துல்லா ஆகியோர் இடையே அதிகாரங்களை பகிர்ந்து கொள்வதற்கான உடன்பாடு கடந்த வாரத்தில் எட்டப்பட்டது. இதன் படி அஷ்ரஃப் கனி அதிபராகவும், பிரதமருக்கு நிகரான அதிகாரங்களை கொண்ட, தலைமை செயல் அதிகாரியாக அப்துல்லாவும் பொறுப்பேற்றுக் கொள்வது என முடிவு செய்யப்பட்டது. இதனிடையே, ஆப்கனில் இருக்கும் அமெரிக்கப் படைகளை



முடிவுகளை அறிவிப்பதற்கு எதிர்ப்பு தெரிவித்து வந்தனர்.

இதனால் 3 மாதத்திற்கு மேலாக ஆப்கானிஸ்தானில் அரசியல் குழப்பம் நீடித்து குறைத்துக்கொள்ளவும், ஆப்கன் படைகளுக்கு பயிற்சி அளிக்கவும் அமெரிக்கா உடன் அதிபர் அஷ்ரஃப் கனி ஒப்பந்தம் கையெழுத்திட உள்ளதாக கூறப்படுகிறது.

# உக்ரைனில் ஆளுநர் உத்தரவின் பேரில் லெனின் சிலை அகற்றம்



உக்ரைனின் மிக முக்கிய நகரான கார்கிவில் இருந்த லெனின் சிலை ஆளுநர் உத்தரவின் பேரில் அகற்றப்பட்டது. கார்கிவ் உக்ரைனின் பகுதி என்பதை வலியுறுத்தும் வகையில் பேரணி ஒன்றை நடத்திய அரசு ஆதரவாளர்கள் முன்னிலையில் சிலை அகற்றப்பட்டது. இது குறித்து கருத்து தெரிவித்துள்ள உக்ரைன் உள்துறை அமைச்சர் ஆர்சென் அவகோவ், நாட்டு மக்களின் பாதுகாப்பினை கவனத்தில் கொள்ளும்படி காவல்துறைக்கு அறிவுறுத்தப்பட்டுள்ளதாகவும், மக்கள் விருப்பப்படி லெனின் சிலை அகற்றப்படுவதே சிறந்தது என்றும் கருத்து தெரிவித்துள்ளார். ரஷ்ய ஆதரவு கிளர்ச்சியாளர்கள் உக்ரைனின் கிழக்குப் பகுதியில் அரசுக்கு எதிராக போராட்டங்களை நடத்தி வரும் நிலையில், ரஷ்ய மொழி பேசுபவர்கள் அதிகம் வசிக்கும் கார்கிவ் பகுதியில் உள்ள லெனின் சிலை அகற்றப்பட்டுள்ளது.

# ஹாங்காங்கில் மக்களாட்சி கோரி போராட்டம்: பதற்றம் அதிகரிப்பு

ஹாங்காங்கில் மக்களாட்சி கோரி போராடி வருபவர்கள் பிராந்தியத்தின் முக்கிய வர்த்தகப் பகுதியில் முகாமிட்டுள்ளதால் அங்கு பதற்றம் அதிகரித்துள்ளது. ஞாயிறன்று போராட்டக்காரர்களுடன் நடந்த மோதலை அடுத்து வன்முறை தடுப்புப் படையினர் அப்பகுதியில் இருந்து விலக்கிக் கொள்ளப்பட்டுள்ளனர். இந்நிலையில் கடந்த மூன்று நாட்களில் நடந்த மோதல்களில் சுமார் 40க்கும் மேற்பட்டோர் காயமடைந்துள்ளதாக காவல்துறை துணைத்தலைவர் தெரிவித்துள்ளார். ஆயிரக்கணக்கான போராட்டக்காரர்கள் அரசு அலுவலகங்களை முற்றுகையிட்டுள்ளதாகவும், போராட்டங்கள் காரணமாக மூன்று மாவட்டங்களில் பள்ளிகள் மூடப்பட்டுள்ளதாகவும், பல்வேறு இடங்களில் போக்குவரத்து தடைபட்டுள்ளதாகவும் அதிகாரிகள் தெரிவித்துள்ளனர். போராட்டக்காரர்கள் அமைதியான முறையில் கலைந்து செல்லும்படி அரசு விடுத்த வேண்டுகோளை ஏற்க மறுத்துவிட்டனர். இதனிடையே ஹாங்காங்கின் மத்தியப்பகுதி மட்டுமல்லாது பிற பகுதிகளுக்கு போராட்டம் பரவி வருவதாகவும் கூறப்படுகிறது. பிராந்தியத்தின் சிறப்பு அந்தஸ்து பெற்ற நிர்வாத்திற்கான நபர்களை தேர்ந்தெடுப்பதில் சீனாவின் தலையீடை எதிர்த்து போராட்டங்கள் நடந்து வருகின்றன.

# கேட்டலோனியா பொது வாக்கெடுப்பு: சட்ட விரோதம் என அறிவிக்க ஸ்பெயின் கோரிக்கை

கேட்டலோனியாவின் விடுதலை தொடர்பான பொதுவாக்கெடுப்பை சட்டவிரோதமானது என அறிவிக்கும்படி ஸ்பெயின் அரசு அந்நாட்டு உயர்நீதிமன்றத்தை கேட்டுக்கொண்டுள்ளது.

நவம்பர் 9 ஆம் தேதி நடக்க உள்ளதாக அறிவிக்கப்பட்டுள்ள இந்த பொதுவாக்கெடுப்பு குறித்து கருத்து தெரிவித்துள்ள ஸ்பெயின் பிரதமர் மரியானோ ரஜோய், நாட்டைப் பிரிக்க எந்த ஒரு சக்தியையும் அனுமதிக்க முடியாது என்று தெரிவித்துள்ளார்.

கேட்டலோனியா பொதுவாக்கெடுப்பு குறித்து விவாதிப்பதற்காக கூடிய அமைச்சரவைக் கூட்டத்திற்கு பின்னர் தொலைக்காட்சி வாயிலாக நாட்டு மக்களுக்கு உரையாற்றிய அவர் இவ்வாறு கூறியுள்ளார். மேலும் இந்த பொதுவாக்கெடுப்பு ஸ்பெயினின் அரசியல் சட்டத்திற்கு புறம்பானது என்றும் ரஜோய் குறிப்பிட்டுள்ளார்.

கடந்த 19ஆம் தேதி கேட்டலோனியா நாடாளுமன்றத்தில் நடந்த விவாதத்தின் போது இந்த பொதுவாக்கெடுப்பிற்கு 106 பேர் ஆதரவு தெரிவித்தனர். இதனையடுத்து செப்டம்பர் 27 ஆம் தேதியன்று பொதுவாக்கெடுப்பிற்கான அறிவிப்பு வெளியிடப்பட்டது.



# ஆப்கனில் தற்கொலைப்படை தாக்குதல்: 16 பேர் பலி

ஆப்கானிஸ்தானில் பல்வேறு இடங்களில் தற்கொலைப் படை தாக்குதல் நிகழ்த்தப்பட்டதில் 16 பேர் உயிரிழந்தனர்.

கிழக்கு பக்டியா மாகாணத்தில் தலிபான் தீவிரவாதிகளுக்கும், பாதுகாப்புப் படையினருக்கும் இடையே துப்பாக்கிச் சண்டை நடைபெற்றது. இந்நிலையில், வெடிபொருட்களுடன் வாகனத்தில் வந்த தலிபான் தீவிரவாதிகள் வெடிபொருட்களை வெடிக்கச்செய்து தாக்குதல் நடத்தினர். இதில் 12 பேர் உயிரிழந்ததாக காவல்துறையினர் தெரிவித்தனர்.

இதேபோல், காபூல் விமான நிலையம் அருகே நடந்த தாக்குதலில், நான்கு பேர் கொல்லப்பட்டனர். 2 பேர் படுகாயங்களுடன் மருத்துவமனையில் அனுமதிக்கப்பட்டுள்ளனர். குண்டுஸ் நகரில் உள்ள கால்நடைச் சந்தையில் வெடிகுண்டுகளுடன் வந்த தீவிரவாதி நடத்திய தாக்குதலில் இரண்டு பேர் காயமடைந்தனர். இந்த தாக்குதல்கள், ஆப்கான் புதிய அதிபர் பதவி ஏற்பதற்கு முன்பாக நிகழ்த்தப்பட்டுள்ளது. இதனிடையே தாக்குதலுக்கு பொறுப்பேற்றுள்ள தலிபான் தீவிரவாத அமைப்பு , ஆப்கான் மற்றும் வெளிநாட்டுப் படைகளை இலக்காக வைத்து தாக்குதல் நடத்தியதாக தெரிவித்துள்ளது.

# ஒன்ராறியோ மாகாணக் கல்வித் திட்டத்தில் மாணவரும் பெற்றோரும்-45

கலாநிதி இ. பாலசுந்தரம்

இத்தொடரின் 344 ஆம் கட்டுரையில் I B Program பற்றி விரிவாக எழுதியிருந்தோம். இன்னும் பல செய்திகள் இக்கல்வித்திட்டம் பற்றி அறிந்துகொள்ளதல் பயனுடையதாகும். Gifted program என்ற சிறப்புப் பாடநெறி பற்றிப் பெற்றோர்கள் அறிந்திருப்பீர்கள். அதனைவிடவும் I B Program ஒருபடி உயர்வானதும் கடினமானதும் என்பதையும் குறிப்பிட வேண்டும். இக் கல்வித் திட்டம் முதலில் உயர் பாடசாலையில் மட்டுமே அறிமுகப்படுத்தபட்டிருந்து தற்போது, குறிப்பிட்ட சில ஆரம்பப் பாடசாலைகளிலும் இக்கல்வித்திட்டம் கற்பிக்கப்படுகிறது. 9 ஆம் 10 ஆம் தரங்களில் அதிஉயர் திறன்களுடைய மாணவர் ஆசிரியரின் வழிகாட்டலில் இக்கல்விநெறியைத் தேர்ந்தெடுக்கின்றனர். இக்கல்விநெறி புகைவநன Program ஐவிடச் சற்றுக் கூடுதலான பாடநெறிகளைக் கொண்டது என்பதையும் மாணவர்களுக்கு மிகக் கூடுதலான கற்றல் பழுவைக் கொடுப்பது என்பதையும் கருத்திற்கொள்ள வேண்டும். அத்துடன் மிகச் சில பாடசாலைகளில் மட்டுமே இப்பாடநெறி கற்பிக்கப்படுகிறது.

9ஆம் தரத்தில் பிரஞ்சுமொழி, ஆங்கிலம், கணிதம், விஞ்ஞானம் ஆகிய பாடங்களில் மதிப்புயர்ந்த தரத்தில் IB Program கற்பிக்கப்படுகிறது. 11ஆம் தரத்தில் இதற்கான இரண்டு தேர்வுகள் மாணவர் எழுத வேண்டியிருக்கும். 12 ஆம் தரத்தில் நான்கு விசேட தேர்வுகள் எழுத வேண்டும். இப்பாடநெறியிலும் High Level Courses, Standard Level Courses என இரு தரங்களுள்ளன.

உலகளாவிய நிலையில் இச்சிறப்புப் பாடநெறி கற்பிக்கப்படுகிறது என்பதும் கவனிக்கத்தக்கது. உலகின் 91 நாடுகளில் 1450 பாடசாலைகளில் மட்டுமே இப்பாடநெறி செயற்படுத்தப்படுவதோடு, அனைத்து நாட்டுப் பாடசாலைகளிலும் ஒரே பாடநெறிகளே கற்பிக்கப்படுகின்றன என்பதும், அவர்கள் அனைவரும் ஒரே தேர்வுகளைவே செய்கின்றனர் என்பதும் கவனத்தில் கொள்ளத் தக்கவையாகும்.

ஐ வி. பாடநெறி அரசு சார்பான பாடசாலைகளில் இலவசமாகவே கற்பிக்கப்படுகிறது. ஆனால் ரொறன்ரோவிலுள்ள தனியார் பாடசாலைகள் இப்பாடநெறிக்குரிய ரியூசன் கட்டணமாக 20,000 டொலர் அறவிடுவதாகவும் கூறப்படுகிறது. இப்பாடநெறியைத் தேர்ந்தெடுக்க விரும்பும் மாணவர் தமது கல்விக்கான பொறுப்பினைத் தாம் ஏற்றுக்கொள்ளத் தயாராக இருக்கவேண்டும். அவர்கள் ஆங்கிலத்திலும் பிரஞ்சுமொழியிலும் நன்கு ஆளுமைத் திறன்கள் பெற்றிருத்தல் அவசியமாகிறது. அனைத்துப் பாடங்களிலும் சராசரி 80 வீதத்திற்கு மேலான புள்ளிகளைப் பெறும் ஆற்றல் உடையவராக இருக்கவேண்டும். தாம் பல்கலைக்கழகப் பட்டப்படிப்பை வெளிநாடுகளில் மெற்கொள்ளவும் தயாராக இருக்க வேண்டும். படிப்பில் மட்டுமன்றி விளையாட்டு, கலைகள், சமூக சேவை என்பவற்றிலும் மிக்க ஈடுபாடு உள்ளவராகவும் இருக்க வேண்டுமென எதிர்பார்க்கப்படுகிறது. ஆக்கத்திறனைப் பெறக்கூடிய சூழலைக்கொண்ட 150 மணித்தியாலங்கள சமூகசேவையிலும், தலைமைத்துவம், சமூகப் பொறுப்புணர்ச்சி என்பற்றையும் செயலிற் காட்டுபவராக இருக்க வேண்டும். தமது கல்வியை உலக நோக்குடையதாக அமைத்துக் கொள்ளளுதல் அவசியமாகும்.

இத்தகைய பின்னணிகளையுடைய மாணவர் தாமே இப்பாடநெறியைத் தெரிவு செய்துகொள்ள விண்ணப்பிக்லாம். இப்பாடநெறியைக் கற்பிக்கும் ஆசிரியர்களுக்கு விசேட பயிற்சியும் அளிக்கப்படுகிறது. மேற்குறிப்பிட்ட இப் பாடநெறியானது அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் உள்ள அனைத்துப் பல்கலைக்கழகங்களாலும் அங்கீகாரம் பெற்றதாகும்.. எனவே இப்பாட நெறியைக் கறறு டிப்ளோமா பெறும் மாணவர் தாம் விரும்பியவாறு அமெரிக்க, ஐரோப்பிய நாடுகளிலுள்ள பல்கலைக்கழங்களில் அனுமதி பெற்றுப் பட்டப் படிப்பை மேற்கொள்ள வாய்ப்பு அளிக்கப்படும் எனக் கூறப்படுகின்றது. அத்துடன் சில பல்கலைக்கழகங்கள் இம்மாணவர்களுக்கு முதலாம் வருட விலக்கு அளித்து இரண்டாம் வருடத்திற்குரிய அனுமதியும் வழங்குகின்றன.

இக்கல்வித் திட்டத்தில் பயிலும் மாணவர்கள், பல்வேறுவழிகளில் சிக்கலானதும் அதிஉன்னதமான முறையில் தனித்தனியே தமது அறிவை வளர்த்துக்கொள்கிறார்கள். அத்தோடு தாம் கொண்ட அறிவுத் தேடலையும் தமது விளக்கங்களையும் அறிவாற்றலையும் வெளிப்படுத்தும் திறனையும் பெற்றுக்கொள்கின்றனர் என்பதும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கதாகும்.

இப்பாடநெறிக்குரிய அனைத்துத் தேர்வுகளும் பாடசாலை நடத்துவதாக இல்லாது வெளிநிலைத் தேர்வுகளாகவே நடத்தப்படுகின்றன. இத் தேர்வுக்குரிய சான்றிதழ்கள், தேர்வின் இறுதியில் வழங்கப்படும் டிப்ளோமா அனைத்தும் ஜெனிவாவில் உள்ள தலைமை அலுவகத்தினாலேயே மேற்கொள்ளப்படுகின்றன. இச்சிறப்புப் பாடநெறியானது மிக உயர்வான கல்வித் தரத்தையும், சமூக சேவைகளையும், மிகத் தரமானமுறையில் கட்டுரை எழுதுதல், அனைத்துலக அடிப்படையிலான பாடத்திட்டம் என்பவற்றை அடிப்படையாகக் கொண்டிருக்கும். இத்தகைய பாடத்திட்டங்களின் மூலம் மாணவர் ஏனைய பண்பாடுகள், பழக்க வழக்கங்கள் என்பன பற்றி அறிந்து கொள்வதோடு, அப்பண்பாட்டு விடயங்களை மனம் உவந்து பாராட்டும் பக்குவத்தையும் பெற்றுக்கொள்கின்றனர்.

I B Program சிறப்புப் பாடநெறித் திட்டத்தின்கீழ் கல்வி பயிலும் மாணவர் பொதுவாக மிகக் கூடுதலான கல்வித்திறன்கள் உடையவர்களாகவே இருப்பர் என எதிர்பார்க்கப்படகிறது. உலகின் அனைத்து விடயங்கள், நிகழ்வுகள் என்பன பற்றி அறிந்துகொள்வதில் மிக்க ஆர்வம் உடையவர்களாகக் காணப்படுவர். இவர்கள் புதுப்புது விடயங்களை மிக விரைவாக அறிந்துகொள்வதோடு அவற்றை நினைவிலும் வைத்திருப்பர். எவ்விடயத்தையும் விடாப்பிடியாக இருந்து தொடர்ச்சியாக அறியும் தன்மையும், தானே தனித்தியங்கும் ஆற்றலும் கொண்டிருப்பர். தமது திறமைகளை வெளிப்படுத்தும் ஆற்றலும் இவர்களிடம் மிகுதியாகவே காணப்படும். இவர்களிடம் பொது நோக்கம், சமூக வேவைகளுக்கான ஈடுபாடு முதலான சிறப்பியல்புகளும் காணப்படும்.

இச்சிறப்புக் கல்வித்திட்ட கல்வி மூலமாக மாணவர் சுதந்திரமான முறையில் கல்வி அறிவைப் பெற்றுக் கொள்கின்றனர். மேலும் ஆங்கிலம் மற்றும் பிறமொழிகளையும் கற்றல், கணிதம், சமூகக் கல்வி, பரிசோதனை விஞ்ஞானம், பாடநெறியோடிணைந்த அறிவியல் தத்துவங்கள் என்பன பற்றிய கற்றல் மூலமான அறிவு, மற்றும் அனுபவங்களையும் மாணவர் பெற்றுக்கொள்கின்றனர். இம்மாணவர்கள் இக்கல்வித் திட்டத்தின் மூலம் வளர்த்துக்கொண்ட தமது ஆக்கத் திறன்கள் மூலமாக கலைகளை இரசிக்கும்திறன், தமது ஆக்கத்திறன் செயற்பாடுகள், உடற்பயிற்சி, சமூகசேவை முதலானவற்றையும் வளர்த்துக் கொள்கின்றனர். இக்கல்விநெறியில் பயிலும் மாணவர் உலக நடப்பியல் விடயங்கள் அனைத்திலும் (நடட-சழரனெநன ினைளைனையட) அறிவுத் திறன்பெற்றிருப்பார் எனவும் எதிர்பார்க்கப்படுகிறது.

(தொடரும்)

## ஜெயக்குமாரியின் விடுதலையை வலியுறுத்தி கொழும்பில் ஆர்ப்பாட்டம்

பயங்கரவாத தடுப்புப் பிரிவில் தடுத்து வைக்கப்பட்டிருக்கும் ஜெயக்குமாரியை விடுதலை செய்யுமாறு கோரி கொழும்பு கோட்டை புகையிரத நிலையத்திற்கு முன்பாக நேற்று மாலை ஆர்ப்பாட்டமொன்று முன்னெடுக்கப்பட்டது.

கிளிநொச்சியைச் சேர்ந்த ஜெயக்குமாரி என்பவர் காணாமல் போன தனது மகனை கண்டுபிடித்துத் தருமாறு கோரி பல போராட்டங்களில் கலந்துகொண்டார். இந்நிலையில் அவரும் அவரது மகள் விபூசிகாவும் பயங்கரவாத தடுப்புப் பிரிவினரால் கைது செய்யப்பட்டிருந்தனர்.

இந் நிலையில் ஜெயக்குமாரியை விடுதலை செய்யுமாறு கோரி பிரசார அமைப்பினால் இந்தஆர்ப்பாட்டம் முன்னெடுக்கப்பட்டது.

இந்த ஆர்ப்பாட்டத்தில் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் நாடாளுமன்ற உறுப்பினர் எம்.ஏ.சுமந்திரன், ஜனநாயக மக்கள் முன்னணியின் தலைவர் மனோ கணேசன், தமிழ்த் தேசிய மக்கள் முன்னணியின் தலைவர் கஜேந்திரகுமார் பொன்னம்பலம், தேசிய ஐக்கிய முன்னணியின் தலைவர் அஸாத் ஸாலி, ஐக்கிய சோசலிஷக் கட்சியின் பொதுச் செயலாளர் சிறிதுங்க ஜயசூரிய உட்பட அரசியல்வாதிகள், மனித உரிமை செயற்பாட்டாளர்கள், காணாமல்போனோரின் உறவுகள் எனப் பலர் கலந்துகொண்டனர்.

## வாழ்த்தொன்று !

வாழ்த்தொன்று நான் வடித்து
வாழ்கவென வாழ்த்தவே
தமிழ் வரிகளை தொடுத்தேன்.
அதையே இங்கு வடித்தேன்.
கதிரவன் இல்லையெனில்
கதிரொளி இல்லையே !
மேகங்கள் சூழ்ந்தாலும்
கதிரொளி புலப்படும் அது –
புலத்திலும் வசப்படும்
புதிய பரிமானத்தில் இங்கே வெளிப்படும் .
தவம் புரியவில்லை, தலைக்கனமும் இல்லை
தமிழினம் பெருமை கொள்ள –
தரமுடன் வெளிவரவாழ்த்துகிறேன்.
உன்னத சேவை ஊடகச்சேவையென
உன் பெயர் சொல்லி உலகம் சொல்லவும்
நடு நிலை தவறாது நம்மவர் குறை கூறாது
பத்திரிகை தர்மத்தை பத்திரமாய் காத்திடவேண்டும்
ஒளி என்றால் கதிர் ஒளி என்றுகூறிட வேண்டும்.
என்றும் அது நன்றாய் வாரம் தோறும் வென்று ஒளி
விடும் கதிர் ஒளியாய் கனடிய மண்ணில் வெளி
வரவே வாழ்த்துகிறேன்.....

*பிரியமுடன் . தளிர்*

## எமது வரலாற்றுக் கடமையைச் செய்வதற்கான இறுதிச் சந்தர்ப்பம் !

அதற்கான மிக முக்கிய அவசர அழைப்பு ! இன அழிப்பிற்கான சாட்சியங்களை வழங்கி

தமிழர்களுக்கான நீதியைப் பெற ஒவ்வொரு தமிழனும், முன் வர வேண்டும்.

இன்னும் முப்பது நாட்களே உள்ளது.கடைசி நாள் வரையும்

பார்க்காமல் இன்றே செய்வதே நன்றாகவிருக்கும் . இப்படி ஒரு விசாரணை இனிமேல் வரச் சந்தர்ப்பமே இல்லை.

இதைச் செய்யா விட்டால் அறுவது வருடப் போராட்டம் தோற்றுப் போனதாகி விடும்

.இது எங்களுக்குத் தேவையா இல்லையா என நாங்கள் இன்றே தீர்மானிப்போம்! உங்கள் நண்பர்களுக்கும்,

உறவினர்களுக்கும் இதைத் தாயக மந்திரமாகப் பரப்புங்கள் !

ஸ்ரீலங்கா அரசாங்கம் பல பொய்யான தகவல்களை உண்மையான ஆதாரங்கள் போல், எங்களுடைய மக்களை வெறுட்டி எடுக்கின்றது.

நாங்கள் என்ன செய்யப்போகின்றோம் ? சிந்தியுங்கள், செயற்படுங்கள். இது நிச்சயமாக நாளை மலரும் தமிழ் ஈழத்திற்கான

முக்கிய படிக்கல்லாக அமையும். இச்செயட்பாட்டுக்கு ஊடகங்கள், சங்கங்கள், அமைப்புகள் ஒத்துழைப்புத்

தரவேண்டுமென்று தாழ்மையுடன் கேட்கிறேன். மேலதிக விபரங்களுக்கு கீழ் இணையத்தை அழுத்துங்கள்.

http://icppg.org/

# விக்னேஸ்வரன் தலைமையிலான குழுவினர் மன்னார் விஜயம்!

## யுத்தத்தினால் பாதிக்கப்பட்ட மக்களை நேரில் சென்று சந்திப்பு

வடமாகாண முதலமைச்சர் சி.வி.விக்னேஸ்வரன் தலைமையிலான வடமாகாண அமைச்சர்கள் மற்றும் வன்னி மாவட்ட பாராளுமன்ற உறுப்பினர்கள் அடங்கிய குழு ஒன்று செவ்வாய்க்கிழமை காலை யுத்தத்தினால் இடம் பெயர்ந்து மீள் குடியேற்றம் செய்யப்பட்ட மன்னார் மாவட்டம் மாந்தை மேற்கு பிரதேச செயலாளர் பிரிவுக்குட்பட்ட ஈச்சலவக்கை மற்றும் சன்னார் ஆகிய கிராமங்களுக்குச் சென்று அங்குள்ள மக்களின் பிரச்சினைகள் தொடர்பில் கேட்டறிந்து கொண்டனர்.

வடமாகாண முதலமைச்சர் சி.வி.விக்னேஸ்வரன் தலைமையில் வடமாகாண மீன்பிடி போக்குவரத்து அமைச்சர் பா.டெனிஸ்வரன், வடமாகாண விவசாய அமைச்சர் பொ .ஐங்கரநேசன், வடமாகாண சுகாதார அமைச்சர் பா.சத்தியலிங்கம், வடமாகாண கல்வி அமைச்சர் ரி. குருகுலராஜா மற்றும் தமிழ் தேசியக்கூட்டமைப்பின் வன்னி மாவட்ட



பாராளுமன்ற உறுப்பினர்களான செல்வம் அடைக்கலநாதன், எஸ்.வினோநோகராதலிங்கம் ஆகியோர் சென்றிருந்தனர்.

முதலில் ஈச்சலவக்கை கிராமத்திற்குச் சென்ற குறித்த குழுவினர் அங்கிராம மக்களினால் ஏற்பாடு செய்யப்பட்ட நிகழ்வில் கலந்து கொண்டு மக்களின் பிரச்சினைகளை கேட்டறிந்து கொண்டனர்.

குறிப்பாக ஈச்சலவக்கை கிராமத்தில் உள்ள பாடசாலையில் காணப்படுகின்ற பிரச்சினைகள், போக்குவரத்துச் சேவைகள் சீரின்மை, குடிநீர் பிரச்சினைகள், வீதி சீரின்மை, மின்சார வசதியின்மை, ஆரம்ப வைத்திய சேவைகள் இல்லாமை, அக்கிராமத்தில் உள்ள குளம் புனரமைப்புச் செய்யப்படாமை, வயல் நிலங்கள் துப்பரவு செய்யப்படாமை, நன்னீர் மீன்பிடியில் உள்ள பிரச்சினைகள், புதிதாக வழங்கப்பட்ட காணிகளுக்கு பாதைகள் இல்லாமை, மக்களின் காணிகளையும் வயல் நிலங்களையும் இராணுவம் கைப்பற்றியுள்ளமை உட்பட ஈச்சலவக்கை கிராம மக்கள் எதிர் நேக்கும் சகல பிரச்சினைகளும் முதலமைச்சர் உள்ளிட்ட குழுவினருக்கு அந்த மக்கள் தெரியப்படுத்தினர்.

இதே வேளை ஈச்சலவக்கை பகுதியில் உள்ள மக்களுக்குச் சொந்தமான காணியில் சுமார் 2 ஆயிரம் ஏக்கர் நிலப்பரப்பை இராணுவத்தினர் சுவீகரித்து இராணுவ பயிற்சி முகாம் அமைக்கப்பட்டுள்ளமை குறித்தும் அக்கிராம மக்கள் குறித்த குழுவினருக்கு தெரியப்படுத்தினர்.

இந்த நிலையில் குறித்த பிரச்சினைகளை கேட்டறிந்த குறித்த குழுவினர் மக்களினால் முன்வைக்கப்பட்ட பிரச்சினைகள் தொடர்பில் உரிய கவனம் செலுத்தி நடவடிக்கைகள் மேற்கொள்ளப்படும் என வடமாகாண அமைச்சர்கள் மற்றும் பாராளுமன்ற உறுப்பினர்கள் தெரிவித்தனர்.

இதனைத் தொடர்ந்து குறித்த மக்கள் சன்னார் கிராமத்திற்குச் சென்று அக்கிராம மக்களை சந்தித்து மக்களின் பிரச்சினைகளை கேட்டறிந்து கொண்டனர்.

# மக்கள் மயப்படுத்தப்பட்ட போராட்டமே வெற்றி அளிக்கும்!

**ஆனந்தன் எம்.பி**

தமிழ் மக்களின் இனப்பிரச்சினைக்கு நிரந்தர அரசியல் தீர்வை காண்பதும், போரினால் மோசமாக பாதிக்கப்பட்டுள்ள மக்களின் வாழ்க்கைத்தரத்தை மேம்படுத்துவதும், சர்வதேச சமுகத்தின் ஒத்துழைப்பும் தலையீடும் இன்றி, இலங்கைத்தீவுக்குள் சாத்தியமாகும் சூழல் இல்லை என்று வன்னி மாவட்ட நாடாளுமன்ற உறுப்பினர் சிவசக்தி ஆனந்தன் தெரிவித்துள்ளார்.



வடமாகாணசபை உறுப்பினர் ம.தியாகராசாவின் பன்முகப்படுத்தப்பட்ட நிதியிலிருந்து வவுனியா மதுராநகர் கிராம அபிவிருத்திச் சங்கத்துக்கு தளபாடங்கள் வழங்கும் வைபவத்தில் கலந்து கொண்டு உரையாற்றும்போதே அவர் இவ்வாறு தெரிவித்துள்ளார். அவர் தனது உரையில் மேலும் தெரிவித்ததாவது,

சிறிலங்கா அரசாங்கம் ஐக்கிய நாடுகள் சபையினதும், சர்வதேச சமுகத்தினதும் அழுத்தங்களை முன்னெப்போதும் இல்லாதவாறு சந்தித்துள்ளது. குறிப்பாக இறுதிக்கட்ட யுத்தத்தில் நடத்திய படுகொலைகள் மனித உரிமை மீறல்கள் தொடர்பில் பதிலளிப்பதிலும், பொறுப்புக் கூறுவதிலிருந்தும் சிறிலங்கா அரசு அவ்வளவு இலகுவில் விலகியிருந்து விட முடியாது. அதேவேளை காலம் கடத்துவதற்கான வாய்ப்புகளையும் ஐ.நா பொறிமுறைகள் இனியும் சிறிலங்கா அரசுக்கு வழங்காது.

போர் முடிந்து ஐந்து வருடங்களை கடந்தும், பல ஆயிரக்கணக்கான மக்கள் காணாமல் போன தமது உறவுகளை தேடிக்கொண்டிருக்கின்றார்கள். நீண்டகாலமாக அரசியல் கைதிகளாக சிறை வைக்கப்பட்டுள்ள தமிழ் இளைஞர் யுவதிகள் தமது விடுதலைக்காக ஏங்கிக் கொண்டிருக்கின்றார்கள். யுத்தத்தில் இழக்கப்பட்ட, பறிக்கப்பட்ட உயிர் உடைமைகளுக்கான நஸ்ட ஈட்டை அரசு இன்னமும் தமிழ் மக்களுக்கு வழங்கவில்லை. மேலும் மேலும் தமிழர் நிலங்களையும், இயற்கை வளங்க ளையும் சூறையாடி வருகின்றது. போருக்குப் பின்னரான அபிவிருத்தி மீள் நல்லிணக்கம் என்பவற்றில் உண்மைத்தன்மை முற்றிலுமாக இல்லை.

எனவே சிறிலங்கா அரசின் இன ஒடுக்கு முறைகளுக்கும் ஏதேச்சதிகார போக்குகளுக்கும் எதிராக புலத்தில் எமது உறவுகள் கனதியான போராட்டங்களையும், நம்பிக்கை அளிக்கும் செயல்பாடுகளையும் முன்னெடுத்து வருகின்றனர். எனவே நாங்கள் பார்வையாளராக இருந்து விட்டுப் போக முடியாது. சிறு எறும்பை மிதித்தால், அது மிதிப்பவரை சாகும் தருவாயிலும் பலம் கொண்டவரை கடித்து தனது எதிர்ப்பை வெளிப்படுத்தியே ஆகும்.

நாம் அமைதியாக இருக்க முடி யாது. தமிழர் நலனில் அக்கறை கொண்டுள்ளவர்கள் புலத்தில் முன்னெடுக்கும் நடவடிக்கைகளுக்கு உள்ளூரில் நாமும் பக்கபலமாக காத்திரமான ஜனநாயக போராட்டங்களை விரைவுபடுத்த உள்ளோம். ஜனநாயக போராட்டங்களின் வெற்றி மக்கள் எழுச்சியிலேயே தங்கியுள்ளது என்றும் அவர் தெரிவித்தார்.

இந்த நிகழ்வில் வடமாகாணசபை உறுப்பினர்களான ம.தியாகராசா, இ.இந்திரராசா, வவுனியா தெற்கு தமிழ் பிரதேசசபை உறுப்பினர்களான ராஜேசேகரம், பரமேஸ்வரன், பார்த்திபன் ஆகியோரும் கலந்து கொண்டனர்.

# நாட்டில் போலி நாணயத்தாள்களின் புழக்கம் அதிகரிப்பு

நாட்டில் போலி நாணயத்தாள்களின் புழக்கம் அதிகரித்துள்ளதாக பொலிஸார் தெரிவித்துள்ளனர். ஏனைய ஆண்டுகளுடன் ஒப்பீடு செய்யும் போது இந்த ஆண்டில் அதிகளவான போலி நாணயத்தாள்கள் அச்சிடப்பட்டுள்ளன.

இந்த ஆண்டில் இதுவரையில் 1176 போலி ஐயாயிரம் ரூபா நாணயத்தாள்கள் கண்டு பிடிக்கப்பட்டுள்ளதாக பொலிஸ் விசாரணைகளின் மூலம் தெரியவந்துள்ளது.

கடந்த அண்டில் 311 போலி ஐயாயிரம் ரூபா நோட்டுக்களே மீட்கப்பட்டுள்ளன. இந்த ஆண்டில் 562 போலி இரண்டாயிரம் ரூபா நோட்டுக்களும், 1622 போலி ஆயிரம் ரூபா நோட்டுக்களும், 1184 போலி ஐநூறு ரூபா நோட்டுக்களும், 42 போலி நூறு ரூபா நோட்டுக்களும், 6 ஐம்பது ரூபா போலி நோட்டுக்களும், 1 போலி 20 ரூபா நோட்டும் மீட்கப்பட்டுள்ளன.

பொருளாதார நெருக்கடிகள் காரணமாக அதிகளவில் இவ்வாறான போலி நாணயத்தாள் அச்சிடப்படுவதாகத் தெரிவிக்கப்படுகிறது. அதிக சனநெரிசல் மிக்க இடங்களில் பணக் கொடுக்கல் வாங்கல்களின் போது மக்கள் விழிப்புடன் செயற்பட வேண்டுமென எச்சரிக்கை விடுக்கப்பட்டுள்ளது.

திட்டமிட்ட வகையில் சில குழுக்கள் நாடு முழுவதிலும் போலி நாணயத்தாள் விநியோகத்தில் ஈடுபட்டு வருவதாக பொலிஸார் எச்சரிக்கை விடுத்துள்ளனர்.

# சம்பந்தன், தொண்டமான், ஹக்கீம் ஆகியோரின் கட்சிகளுக்கு எதிராக சிங்கள பௌத்த மக்களை அணி திரட்ட வேண்டும்!

**- ஹெல உறுமய**

சம்பந்தன், தொண்டமான் மற்றும் ரவூப் ஹக்கீம் ஆகியோரின் கட்சிகளுக்கு எதிராக சிங்கள பௌத்த மக்களை அணி திரட்ட வேண்டுமென ஜாதிக ஹெல உறுமய கட்சியின் மேல் மாகாண சபை உறுப்பினர் உதய கம்மன்பில தெரிவித்துள்ளார்.

அண்மையில் கண்டியில் நடைபெற்ற சிங்கள வர்த்தகர் முன்னணியினால் ஏற்பாடு செய்திருந்த நிகழ்வு ஒன்றில் பங்கேற்ற போது அவர் இதனைக் குறிப்பிட்டுள்ளார்.

தமிழ்த் தேசியக் கூட்டமைப்புஜ்ஜ் ஸ்ரீலங்கா முஸ்லிம் காங்கிரஸ் மற்றும் இலங்கை தொழிலாளர் காங்கிரஸ் ஆகிய கட்சிகளின் பேரம் பேசும் பலத்தை சிதறடிக்கச் செய்ய வேண்டும்.

பத்து லட்சம் சிங்கள பௌத்த வாக்குகளை ஆயத்தம் செய்வதன் மூலம் சிறுபான்மை கட்சிகளின் பேரம் பேசும் பலத்தை வலுவிழக்கச் செய்ய முடியும்.

2005ம் ஆண்டு ஜனாதிபதி மஹிந்த ராஜபக்சவுடன் செய்து கொண்ட ஒப்பந்தம் ரத்தாகியுள்ளது.

எதிர்வரும் ஜனாதிபதி தேர்தலில் போட்டியிடும் ஜனாதிபதி வேட்பாளருடன் புதிய உடன்படிக்கை ஏற்படுத்திக் கொள்ளப்படும்.

சிங்கள பௌத்த கொள்கைகளுக்கு முக்கியத்துவம் அளிக்கும் தலைவர் ஒருவருக்கே ஆதரவளிக்கப்படும் என உதய கம்மன்பில தெரிவித்துள்ளார்.

# கடும்போக்குவாதத்திற்கு எதிராக இரண்டு கடும்போக்கு அமைப்புக்கள் உடன்படிக்கை?

கடும்போக்குவாதத்திற்கு எதிராக இரண்டு கடும்போக்குவாத அமைப்புக்கள் உடன்படிக்கையொன்றில் கைச்சாத்திட்டுள்ளன.

சிங்கள பௌத்த கடும்போக்குவாத அமைப்பாக கருதப்படும் பொதுபல சேனா அமைப்பும், மியன்மாரின் பௌத்த கடும்போக்குவாத அமைப்பான 969 அமைப்பும் உடன்படிக்கை ஒன்றில் கைச்சாத்திட்டுள்ளன.

தீவிரவாதமற்ற அமைதியான ஓர் வலயமாக ஆசிய பிராந்தியத்தை உருவாக்கும் நோக்கில் பொதுபல சேனா அமைப்பும், 969 அமைப்பும் உடன்படிக்கையில் கைச்சாத்திட்டுள்ளன.

இலங்கைக்கு விஜயம் செய்துள்ள 969 பௌத்த அமைப்பின் தலைவர் அசீன் விராது தேரரும், பொதுபல சேனா அமைப்பின் பொதுச் செயலாளர் கலகொடத்தே ஞானசார தேரரும் இந்த உடன்படிக்கையில் கைச்சாத்திட்டுள்ளனர்.

கிருலப்பனையில் அமைந்துள்ள பொதுபல சேனா அமைப்பின் தலைமைக் காரியாலயத்தில் நேற்று இந்த உடன்படிக்கை கைச்சாத்திடப்பட்டுள்ளது.

கடும்போக்குவாதத்தை இல்லாமல் செய்யும் நோக்கில் சகல பௌத்த அமைப்புக்களையும்ஜ்ஜ்கடும்போக்குவாத நிலைப்பாட்டை கொண்டிராத இந்து முஸ்லிம் அமைப்புக்களையும் எதிர்காலத்தில் தமது அமைப்புக்களுடன் இணைத்துக்கொள்ளப் போவதாக பொதுபல சேனா அமைப்பின் தலைவர் கிரம விமலஜோதி தேரர் தெரிவித்துள்ளார்.

# முக்கோண மருத்துவம்

இதென்ன புதிய மருத்துவ முறையோ என்று நீங்கள் வியப்பது புரிகிறது. ஒரு முக்கியமான முக்கோண மருத்துவத்தைப் பற்றித்தான் பார்க்கப்போகிறோம். ஆனால், இது ஒரு சிகிச்சை செய்யும் மருத்துவம் அல்ல. நாம் ஆரோக்கியமாக, நோய்கள் வருமுன் காக்க, பல நல வாழ்வுத் தகவல்களை முக்கோண வடிவில், இலகுவில் நினைவில் நிறுத்திப் புரிந்துகொள்ள உதவும் ஒரு வகையான நோய்த்தடுப்பு மருத்துவம். Preventive Medicine என்றும் சொல்லலாம்.



இப்படியொரு முறையினை நான் கருத்தரங்குகளில் விளக்கவுரைகள் நிகழ்த்தும்போது கடைப்பிடித்ததில் பலருக்கும் பயனுள்ளதாக இருந்த காரணத்தால் அதை உங்களோடும் பகிர்ந்துகொள்ள விரும்புகிறேன்.




Hurry (எதிலும் அவசரம்)

Curry (மச்சம் மாமிசம்)

Worry (எப்போதும் கவலை)

### Hurry

ஆரோக்கியத்தை மிகவும் பாதிக்கின்ற விடயங்களில் முக்கியமான, ஆனால் மறைமுகமான விடயங்கள் இவை மூன்றும் என்றும் கருதலாம். இதய மற்றும் இரத்தக் குழாய்கள் தொடர்பான பல நோய்களின் விதைகளாக இவை இருக்கின்றன. எதிலும் அவசரம், பதட்டம், படபடப்பு இதயத்தின் மின்னலைகளின் சீரான ஓட்டத்தைப் பாதிக்கிறது. ஆனால், இதயத்துடிப்பில் மாற்றங்கள் உண்டாகின்றது. இதயத்தில் வலது சோணை அறையில் ஒரு குறிப்பிட்ட பகுதியான SA. Nod என்ற, கண்ணுக்குப் புலப்படாத மின் உற்பத்தி நிலையம் இருக்கிறது. இங்குள்ள கலங்களிலிருந்து எவ்வாறு, தானே தனக்குத் தேவையான மின்சாரத்தை தாயின் கருவில் இதயம் உருவாகத் தொடங்கியது முதல், இறப்புவரை உற்பத்தி செய்கிறது என்பதை, இன்றைய விஞ்ஞானத்தாலும் புரிந்துகொள்ள முடியவில்லை என்பது ஆச்சரியமான விடயம்தான். ஆனால், அளப்பதற்கும், மின்னோட்டத்தின் தன்மையை விளங்கிக்கொள்வதற்கும் E.C.G. (Electro Cardio Graphy) போன்றவை பயன்படுகிறது.

### Worry

எப்போதும் கவலை, யாருக்குத்தான் கவலையில்லை என்று நீங்கள் கவலைப்படுவதும் எனக்குப் புரிகிறது. ஆம், உண்மைதான். சின்னச் சின்ன விடயங்களையும் பெரிதுபடுத்தி அதைப்பற்றி எப்போதும் கவலைகொள்ளுதல், அல்லது பல்வேறு காரணங்கள் ஆழ்மனதில் வடுக்களாக மாறி, மாறாத காயங்களாக எப்போதும் தொடர்ந்து பயணித்தல் போன்ற நிலைகளில் உடலில் பல தேவையற்ற இரசாயனங்களைச் சுரக்கச் செய்து உடலில் எங்கெல்லாம் குழாய்கள் போன்ற அமைப்புகள், அதாவது சுவாசக் குழாய்கள், இரத்தக் குழாய்கள் போன்றவற்றின் சுருங்கி விரியும் தன்மையில் மாற்றங்களை உண்டாக்குவதால் மூட்டுநோய், ஆஸ்மா, மாரடைப்பு, பக்கவாதம் போன்ற வியாதிகள் வர வாய்ப்புள்ளது. எனவே, கவலை பற்றிய கவலை வேண்டாம்.

### Curry

தமிழகத்தில் கறி என்றால் பொதுவாக மாமிச உணவுகளைத்தான் குறிப்பிடுவார்கள் என்று பலருக்கும் தெரியும். ஆனால், ஈழத்தில், சோற்றோடு சாப்பிடும் எல்லாவற்றையும் கறி என்று குறிப்பிடுவது வழக்கமாகும்.

நான் குறிப்பாகச் சொல்ல வருவது என்னவென்றால், எப்போதும் மாமிசம் உண்பவர்கள் அதைக் கொஞ்சம் குறைத்துக்கொள்வது நல்லது. அல்லது, எப்படியான மாமிச உணவைத் தேர்வுசெய்வது என்பதில் கொஞ்சம் புரிதல் இருந்தாலே போதும், இதைப்பற்றி, தொடர்ச்சியான முக்கோணங்களில் பார்ப்போம்.



அண்மைக்காலங்களில், மாமிச உணவு தொடர்பான ஆய்வுகள் பல ஆச்சரியமான முடிவுகளைத் தந்துள்ளன. பெரிய விலங்கினங்களைக் கொல்கின்றபோது, அவை தற்காப்பினாலும் பயத்தினாலும் உடலிலுள்ள கலங்களில் சில சுரப்புக்களையும், இரசாயனங்களையும் மிக அதிக அளவில் கலந்துவிடுகின்றன. அவை மனித உடலில் பல பாதிப்புக்களை ஏற்படுத்துகின்றது என்பதாகும்.






உதாரணமாக Adrenal Hormone அதிரினல் சுரப்பு உடலில் அளவுக்கு அதிகமாவதால் இதயத்திலும் இரத்தக் குழாய்களிலும் மற்ற உறுப்புக்களிலும் பல விளைவுகள் உண்டாகின்றன. இதைப் பற்றி இன்னொரு கட்டுரையில் பார்க்கலாம்.

மேற்குறிப்பிட்ட விலங்குகளில், இறைச்சியில் LDL என்ற கெட்ட கொழுப்பும் TGL என்ற இதயத்தை நேரடியாகத் தாக்கும் கொழுப்பு வகையும் இருப்பதால், பிறகென்ன, இளவயதில் மாறடைப்புத் தான். மாமிசப் பிரியர்களுக்கு நல்ல செய்தியும் உள்ளது. கடல் உணவுகளில், குறிப்பாக மீன்களில் நல்ல கொழுப்பு உள்ளதால், தயவு செய்து பொரிக்காமல், வேறு வகையில் சமைத்து ருசிக்கலாம்.

# திரையுலகின் ஜெயலலிதா ஆதரவு 'மௌன' உண்ணாவிரதம்: ஒரு முழுமையான பார்வை

சொத்துக் குவிப்பு வழக்கில் முன்னாள் முதல்வர் ஜெயலலிதாவுக்கு விதிக்கப்பட்ட தீர்ப்புக்கு வருத்தம் தெரிவித்து, தமிழ்த் திரையுலகினர் நேற்று செவ்வாய்க்கிழமை மௌன உண்ணாவிரதப் போராட்டம் மேற்கொண்டனர்.

சென்னை – சேப்பாக்கம் அரசு விருந்தினர் மாளிகை முன்பு காலை 9 மணி அளவில் தமிழ்த் திரையுலகினர் மௌன உண்ணாவிரதப் போராட்டத்தை தொடங்கி மாலை 5 மணி வரை நடைபெற்றது.

நடிகர் சங்கத் தலைவர் சரத்குமார், கேயார், சத்யராஜ், எஸ்.ஜே. சூர்யா, பிரபு, விக்ரம் பிரபு, சிபிராஜ், அபிராமி இராமநாதன், நடிகை சச்சு, நடிகை வெண்ணிற ஆடை நிர்மலா உள்ளிட்ட நடிகர் நடிகைகள், இயக்குநர்கள் மற்றும் தயாரிப்பாளர்கள் பலர் கலந்துகொண்டுள்ளனர்.

. முன்னணி நடிகர்களான சூர்யா, கார்த்தி, விக்ரம், சிவகார்த்திகேயன், சூரி, விஜய் சேதுபதி மற்றும் இயக்குநர் பாலா உள்ளிட்டவர்கள் மதியத்திற்கு மேல் கலந்து கொண்டு தங்களது ஆதரவைத் தெரிவித்தார்கள். பலரும் 30 நிமிடத்திற்குள் உண்ணாவிரதப் போராட்டப் பந்தலில் இருக்கவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

உண்ணாவிரதப் பந்தலில் யாருமே காலை முதலே பேசவில்லை. தொலைக்காட்சி மற்றும் இணையதளங்களுக்கு மட்டும் சிறு பேட்டிகள் அளித்தார்கள்.

மாலை 4:30 மணியளவில் முதலில் பேசிய இயக்குநர் செல்வமணி, 'இந்த உண்ணாவிரதப் போராட்டம் மூலமாக தமிழக மக்களுக்கு ஒரு கோரிக்கை வைக்கிறோம்.



யாரும் தங்களது இன்னுயிரை மாய்த்துக் கொள்ளாதீர்கள்.

ஏற்கனவே சோகத்தில் இருக்கிறோம். மேலும் சோகம் வேண்டாம்' என்றார்.

வாசிக்கப்பட்ட அறிக்கை...

அதனைத் தொடர்ந்து தயாரிப்பாளர் டி.சிவா அனைத்து சங்கங்களின் சார்பாக அறிக்கை ஒன்றிணை வாசித்தார்.

அந்த அறிக்கையில்

'தமிழ் திரையுலகினர் சார்பில் தமிழ் திரைப்பட தயாரிப்பாளர்கள் சங்கம்,தென்னந்திய திரைப்பட வர்த்தக சபை, தென்னந்திய நடிகர்கள் சங்கம், இயக்குநர்கள் சங்கம், தொழிலாளர்கள் சம்மேளனம், சென்னை திரையரங்க உரிமையாளர்கள் சங்கம், சின்னத்திரை நடிகர்கள் கூட்டமைப்பு, பி.ஆர்.ஒக்கள் சங்கம் உள்ளிட்ட சங்கங்கள்



ஒன்றிணைந்து மாபெரும் மவுன உண்ணாவிரத அறப் போராட்டம் நடத்தினோம்.

அனைத்து சங்கங்களின் குரலாக, ஓங்கிய குரலாக ஏகமனதாக ஓர் தீர்மானத்தினை நிறைவேற்றி இருக்கிறோம். அனைத்து தமிழக மக்களின் வாழ்வாரதத்தை உயர்த்திய, உலக தமிழ் மக்களின் உரிமையை பாதுகாத்த தமிழக முதல்வர் ஜெயலலிதா மீது புனையப்பட்ட வழக்குகளில் இருந்து, நீதிமன்றத்தின் மூலமாகவே குற்றமற்றவர் என்று அறிவிக்கப்பட்டு மிக விரைவில் விடுதலையடைந்து, மீண்டும் தமிழக முதல்வர் அரியணையில் அமர வேண்டும் என்ற ஒட்டுமொத்த தமிழக மக்களின் ஆசை நிறைவேற தமிழ் திரையுலகம் பிரார்த்தனை செய்கிறது.

ஆகவே எங்களின் பிரார்த்தனை நிறைவேறி செல்வி ஜெயலலிதா அவர்கள் மீண்டும் முதல்வர் அரியணையில் அமர்வது உறுதி' என்று குறிப்பிடப்பட்டு இருந்தது.

அதனைத் தொடர்ந்து நடிகர் சரத்குமார் அனைவருக்கும் நன்றி தெரிவித்தார். பழம்பெரும் நடிகர் எஸ்.எஸ்.ஆர், உண்ணாவிரதப் பந்தலில் இருந்த சரத்குமார் உள்ளிட்டவர்களுக்கு பழரசம் கொடுத்து உண்ணாவிரதப் போராட்டத்தை முடித்து வைத்தார்.

முடிவுற்ற இந்த உண்ணாவிரதப் போராட்டத்தில் ரஜினி, கமல்,அஜித், விஜய் உள்ளிட்டவர்கள் பங்கேற்கவில்லை. 'லிங்கா' படப்பிடிப்பில் ரஜினியும், கமலுக்கு உடல்நிலை சரியில்லை என்றும் அஜித் படப்பிடிப்பில் தீவிரம்,'கத்தி' படப்பிடிப்பில் விஜய் மும்முரம் என்று சினிமா வட்டாரங்கள் தெரிவித்தன.

# தமிழ்நாட்டு அம்மாவை விஞ்சிய இலங்கை அமைச்சர் ரிசாத்பதியுதீன்!

அம்மா ?"05 வருடத்தில் 64 கோடி"" சொத்துக்களைத் தான் தேடியுள்ளார். இவ்வளவு சொத்துக்களையும் எப்படி தேடினார்? அவரின் வாவைவிட சொத்து அதிகமாக இருக்கிறதாம். அவ்வாறு அதிகரித்துள்ள சொத்துக்கு எவ்வித ஆதாரமும் இல்லையாம்.

அவ்வாறே, எமது வன்னி அமைச்சரும் கடந்த 20 வருடங்களில் இவ்வளவு சொத்துக்களையும் எப்படி கொள்ளையடித்தாரோ? சூறையாடினாரோ? இதனைக் கேட்க முடியாதா? எமது சட்ட க்காணிகளே இதற்கு ஒரு வழியுமே இல்லையா?

எங்கோ ஒரு மூலையில் அகதி முகாமில் அப்போதைய எம்.பிகளான சுமதிபால, அபூபக்கர் போன்றோருக்கு மொழி பெயர்ப்பாளராக இருந்தவர். இப்போது எப்படி இவ்வளவு சொத்துகளை சேகரித்தார்? இந்த அரசாங்கம் என்ன இவருக்கு மாதாந்தம் ஒரு கோடி ரூபா சம்பளமா கொடுக்கிறது?

இவைகள் வந்த வழிகள்ய பொதுமக்கள் சொத்துகளை சூறையாடியதாக இருக்குமோ?

1. வடக்கிலிருந்து வெளியேற்றப்பட்ட முஸ்லிம்கள் அகதி முகாமில் வாழுகின்றபோது திருமணம் முடித்தால் அவர்களின் வாழ்வை திட்டமிட்டுக்கொள்வதற்காக தலைவர் அஷ்ரப் புனர்வாழ்வு அமைச்சராக இருக்கின்றபோது அந்த தடும்பத்திற்கு 25,000 ரூபா வழங்கினார்.

அதனை இந்த றிசாட் வன்னி அமைச்சர் அமைச்சராக வந்த பிறகும் வழங்கினார். ஆனால் அதில் 12,500 ரூபாதான் வழங்கப்பட்டது. அவ்வாறு வழங்குகின்ற போது இரண்டு விண்ணப்பங்களில் கையொப்பங்களை இந்த வன்னி அமைச்சர் பெற்றுள்ளார். ஒவ்வொன்றிலும் 12,500 ரூபா பெற்றுக் கொண்டுள்ளேன் என எழுதப்பட்டுள்ளது.

அதன் படி இந்த அமைச்சர் 25,000 ரூபா கொடுத்து விட்டார்.

ஆனால், இந்த அமைச்சர் அவற்றில் 12,500 ரூபாவைக் கொடுத்துவிட்டு அடுத்த 12,500 ரூபாவை தனதாக்கிக் கொண்டார். அப்பாவி அகதிகளின் அடி வயிற்றில் நெருப்பை வாரிக் கொட்டி விட்டு சேர்த்த சொத்தாக இருக்காதா? அந்த அகதி மக்கள் வாழ்வுக்காக ஏங்கித் தவித்துக் கொண்டிருக்கின்றபோது இந்த 12,500 ரூபாவாவது கிடைத்ததே என்று கிடைத்ததை பெற்றுக் கொண்டு சென்று விட்டனர். அவ்வாறு சுமார் 237 பேருக்கு கொடுத்துள்ளார்.

எனவே, 237 ஐ 12,500 ஆல் பெருக்கிப்பாருங்கள் – 237 ஙீ 12,500 = 2962500

இவ்வாறு மக்களின் சொத்துக்களை சூறையாடிது ஒரு வழி. இவ்வாறு எத்தனையோ வழிகள் இருக்கின்றன.

2. நியாயமாக சிந்திக்கும் புத்திவான்களே! இந்த வன்னி அமைச்சரினால் வன்னி முஸ்லிம்கள் எதிர்நோக்கும் அடிமைத்துவம், ஒடுக்குமுறை, சொத்து சூறையாடல் என்பவற்றை நீங்கள் கொஞ்சமாவது கண்திறந்து பார்க்க மாட்டீர்களா?

உதாரணமாக, புத்தளம் தில்லையடியில்



காசிம் சிட்டி என்ற ஒரு மாதிரிக்கிராமம் அமைப்பதற்காக கட்டாரிலுள்ள ஒருவரால் நிதி வழங்கப்பட்டுள்ளது. அங்கு சுமார் 372 வீடுகள், பள்ளிவாசல், பாடசாலை என்பன கட்டப்பட்டுள்ளன. இவைகளில் அந்த 372 வீட்டையும் கொஞ்சம் சென்று பாருங்கள் இவர் என்ன செய்து வைத்திருக்கிறார் என்று விளங்கும்.

அங்கு ஒரு வீட்டைக் கட்டுவதற்கு அந்த அரபியால் 6 அரை இலட்சம் வழங்கப்பட்டுள்ளது. முஸ்லிம் புத்திஜீவிகளேய! செயற்பாட்டாளர்களேய! எங்களைக் கொஞ்சம் வந்து பாருங்கள். எங்களுக்கு வழங்கப்பட்டுள்ள இந்த வீடுகள் 6 அரை இலட்சம் பெறுமதியான வீடுதானா என்று. அதனைப் பார்த்தால் உங்களுக்குப் புரியும்.

சரி அவற்றில் அரை இலட்சத்தை வன்னி அமைச்சர் பெற்றுவிட்டு 6 இலட்சத்திற்காவது கட்டியிருக்கலாமல்லவா? அப்படியும் இல்லை. சரி 6 இலட்சத்திற்குத்தான் கட்டிவிட்டார். அந்த அரை இலட்சத்தைத்தான் அவர் எடுத்துள்ளார் என்று வைத்துக் கொள்வோம். அதன்படி 372 வீடுகள் அதனை 50000 ரூபாவால் பெருக்கிப் பாருங்கள்!

இதில் வீடுகள் மாத்திரம்தான் சேர்க்கப்பட்டன. இங்கு கட்டப்பட்ட பள்ளிவாசலின் நிலை என்ன? பாடசாலையின் நிலை என்ன? இக்கிராமத்திற்கு வீதி அமைப்பதற்காக அறபி வழங்கிய நிதி என்ன? அப்படி இருக்கின்றபோது இப்பிரதேசத்தின் வீதியின் நிலை என்ன என்பதை வந்து பாருங்கள். அதன்போது வன்னி அமைச்சரின் விளையாட்டுக்கள் விளங்கும்.

3. உலக வங்கியால் அகதிகளுக்காக வழங்கப்பட்ட 10 000 வீடு குறித்த நிலைப்பாடு. அது ஒரு நீண்ட வரலாறு. இதில் அமைச்சரின் ஜால்ரா விளையாட்டு அது ஒரு தனி ரகம்.

4. தற்போது மன்னார் மறிச்சுக்கட்டியில் அமைக்கப்பட்டுள்ள வீடுகள் அதற்கும் புத்தளம் காசிம் சிட்டியில் அமைக்கப்பட்டுள்ள வீட்டுக்கும் எவ்வித வித்தியாசமும் இல்லை. அவைகள் எப்படிப்பட்டது? அதன் நிலமைகள் என்ன? அந்த கிராமத்தை அமைப்பதற்காக அறபி ஒரு வீட்டுக்கு எவ்வளவு கொடுத்தார்?

அங்கு தற்போது அமைக்கப்பட்டுள்ள நிலையில் ஒரு வீடு அமைப்பதாக இருந்தால் எவ்வளவு செலவாகும்? என்பதை முஸ்லிம் புத்திஜீவிகள், பத்திரிகையாளர்கள், செயற்பாட்டாளர்கள் ஏன் தேடிப் பார்க்கிறார்களில்லை.

உண்மை நிலையை வந்து பாருங்கள்ய அங்குள்ள வீடுகள் என்னென்ன நிலையில் அமைக்கப்பட்டுள்ளன. அப்போதாவது புரியும் இந்த வன்னி அமைச்சர் வன்னி முஸ்லிம்களின் பெயரால் எப்படி எப்படியெல்லாம் விளையாடுகிறார் என்று.

மறிச்சுக்கட்டியில் சுமார் 500 வீடுகள் கட்டப்பட்டுள்ளன. அவற்றிலிருந்து குறைந்தது 25000 எமது வன்னி அமைச்சர் பெற்றால் எப்படி இருக்கும். ஆனால், அந்த வீடுகளைப் பார்த்தால் அதைவிட வன்னி அமைச்சர் விளையாடியிருப்பார் என்று அழகாக விளங்கும். 500 வீடுகள் 25000 ரூபா = 12500000 ருபா

5. வன்னியில் 20 வருட அகதிகளாக இருந்து யுத்த வெற்றியின் பின்னர் மீள்குடியேறுகின்ற மக்களின் வாழ்வாதாரத்தை மேம்படுத்துவதற்காக சுமார் 73 குளங்களை புனர்நிர்மாணம்



செய்ய 436 கோடி நிதி இந்த வன்னி அமைச்சரிடம் வழங்கப்பட்டுள்ளதாக சில தகவல்கள் தெரிவிக்கின்றன.

ஆனால், இங்குள்ள குளங்களின் நிலையோ பரிதாபம். மீள்குடியேறிய விவசாயிகள் ஒவ்வொரு வருடமும் போதிய நீரின்றி பெரும் சிரமத்தை எதிர் நோக்குகிறார்கள்.

ஆனால், வன்னி அமைச்சரோ அனைத்து குளங்களும் புனர்நிர்மாணம் செய்யப்பட்டு விட்டன என தெரிவித்துள்ளார். இதற்கு அவருக்கு ஒத்துப்பாடும் அரசாங்க அதிகாரிகள் இருக்கின்றமை எல்லாவற்றையும் விடக்கொடுமையாகும்.

இவ்வாறு அமைச்சரின் சொத்துக் குவிப்பை அடுக்கிக்கிட்டே போகலாம்ய உங்களுக்கு வாசிப்பதற்கு நேரமிருக்காது.

இவைகளைப் பேசவும் முடியாது. ஏனெனில் வன்னி, முக்கியமாக முல்லைத்தீவு, மன்னார் மக்கள் ஒரு இரும்புத் திரைக்குள் அகப்பட்டுக் கொண்ட ஒருவகையான அடக்கு முறைக்குள் வாழ்கிறார்கள்.

இந்த மக்களின் அடிமைத்துவ வாழ்வுக்கு எப்போது விடிவு கிடைக்குமோ? அவ்வாறு மக்களை அடிமைகளாக வைத்துக்கொண்டு அமைச்சரும் அவரின் சகோதர சகாக்களும் நல்லாத்தான் விளையாடுகிறார்கள். இவைகள் முஸ்லிம் சமூக புத்திஜீவிகள், செயற்பாட்டாளர்கள், பத்திரிகையாளர்களுக்கும் புரிவதில்லை. முஸ்லிம் சமூகமே! வன்னி முஸ்லிம்கள் என்ன தீண்டத்தகாதவர்களா?

அங்கு அம்மாவின் நிலை பரிதாபம்! மக்கள் நீதியோடு வாழ்கிறார்கள். ஆனால் இங்கு வன்னியில் வன்னி அமைச்சர் றிசாட் அனைத்திலிருந்தும் தப்பி குசியாக வாழ்கிறார். மக்களோ அடக்கு முறை இரும்புத்திரைக்குள் வாழ்கிறார்கள்.

எமக்கு எங்கே நீதி? நீதியே உன் கண்ணை இங்கே திறப்பாயா?

# காணாமல் போனோர் ஆணைக்குழு, நகைச்சுவை குழுவாக மாறியுள்ளது!- ரவிகரன் குற்றச்சாட்டு

இலங்கை அரசாங்கத்தின் காணாமல் போனோர் தொடர்பான ஆணைக்குழு, நகைச்சுவை குழுவாக மாறியுள்ளதாகவும், நமது விசாரணைகளின் போது மக்களை காட்டிலும் காணாமல் போன கால்நடைகளை பற்றியே அக்கறை செலுத்துகிறது என்றும் குற்றப் [illegible]

வடமாகாண சபை உறுப்பினர் துரைராசா ரவிகரன் இந்தக் குற்றச்சாட்டை ஆங்கில ஊடகம் ஒன்றில் சுமத்தியுள்ளார்.

தமது உறவுகளை காணவில்லை என்று மக்கள் வந்து முறையிடும் போது உங்களிடம் கோழிகள் இருந்தனவா? ஆடுகள் இருந்தனவா? என்று ஆணைக்குழுவினர் கேள்வி எழுப்புகின்றனர்.

இது குறித்த ஆணைக்குழு நகைச்சுவை



குழுவாக மாறியுள்ளமையை காட்டுவதாக ரவிகரன் குறிப்பிட்டுள்ளார்.

முல்லைத்தீவை பொறுத்தவரையில் முள்ளிவாய்க்காலுக்கு செல்லும் போது பலர் காணாமல் போயினர். அத்துடன் நந்திக்கடல் ஊடாக வட்டுவாகலுக்கு செல்லும் போது பலர் காணாமல் போயினர் என்றும் ரவிகரன் தெரிவித்தார்.

காணாமல் போனதாக கூறப்பட்ட குறித்த அனைவருமே படையினரிடம் சரணடைந்தவர்கள் என்றும் அவர் குறிப்பிட்டார். இந்தநிலையில் ஆணைக்குழு நகைச்சுவை குழுவாக மாறும் போது மக்கள் எந்தளவு நம்பிக்கையுடன் அதன் முன் முறையிட முடியும் என்று ரவிகரன் கேள்வி எழுப்பினார்.

# உலக செய்திகள்

## உலகின் மூத்த கோமாளி கலைஞன் 98 வயதில் மரணம்

மோண்டானா, அக். 1–

உலகிலேயே பழமையான கோமாளி வேஷம் போடும் நபரான கிரீக்கி தனது 98 வயதில் மரணம் அடைந்தார். அமெரிக்காவில் உள்ள மோண்டானா மாநிலத்தில் வசித்து வந்தவர் கிரீக்மோர்.

இவர் 1916-ம் ஆண்டு ஜுலை மாதம் 14-ந்தேதி பிறந்தவர். கிரீக்கி தனது 10-வயது முதல் கோமாளி வேஷம் அணிந்து குழந்தைகள் உள்பட அனைவரையும் சந்தோஷப்படுத்தி வந்தார்.

கடந்த 2012-ம் ஆண்டு உலகிலேயே மிக அதிக வயதுடைய கோமாளி கலைஞன் என்ற கின்னஸ் சாதனை படைத்தார். அவரது மனைவி அதே ஆண்டில் மரணம் அடைந்தார். அதன்பின் கோமாளி வேஷம் அணிவதை தவிர்த்தார்.



இந்நிலையில், இதய நோயால் அவதிப்பட்டு வந்த அவர், பில்லிங்சில் உள்ள தனது வீட்டில் சனிக்கிழமை இரவு காலமானார். இத்தகவலை அவரது மகன் டேவ் கிரீக்மோர் தெரிவித்தார்.

## உக்ரைனில் பள்ளி வளாகத்தில் குண்டு மழை- 10 பேர் பலி

டோனட்ஸ்க், அக். 1–

கிழக்கு உக்ரைனில் ராணுவத்தினருக்கும் பிரிவினைவாதிகளுக்கும் இடையே போர் நிறுத்தம் ஏற்பட்டப் பிறகும் ஆங்கேங்கே குண்டு வீச்சு சம்பவம் நடைபெற்றுதான் வருகிறது. அந்த வகையில், இன்று ஒரு பள்ளிக்கூட வளாகத்தில் குண்டு வீசி தாக்கியதில் 10 பேர் பரிதாபமாக உயிரிழந்தனர்.

ரஷ்ய ஆதரவு பிரிவினைவாதிகள் ஆதிக்கம் செலுத்தி வரும் டோனட்ஸ்க் நகரில் உள்ள ஒரு பள்ளிக்கு இன்று காலை 10 மணியளவில் 8 வயது முதல் 10 வயதிலான சுமார் 60 குழந்தைகள் வந்து கொண்டிருந்தனர். அப்போது, பள்ளி விளையாட்டு மைதானத்தின் மீதும், பள்ளி அருகே சென்று கொண்டிருந்த ஒரு மினி வேன் மீதும் வெடிகுண்டுகள் வீசி தாக்குதல் நடத்தப்பட்டது.

குண்டு சத்தம் கேட்டதும் சுதாரித்த ஆசிரியர்கள், குழந்தைகளை அவசரம் அவசரமாக பள்ளியில் உள்ள ஒரு அறைக்குள் அழைத்துச் சென்றனர். இதனால் அவர்கள் அதிர்ஷ்டவசமாக உயிர்தப்பினர். ஆனால்,



துரதிர்ஷ்டவசமாக ஒரு ஆசிரியர் மற்றும் ஒரு மாணவனின் தந்தை உயிரிழந்தனர்.

பள்ளி அருகே சென்ற வேன் குண்டு வெடிப்பில் தீக்கிரையானது. இதில் 6 பேர் உயிரிழந்தனர். மேலும், பிரிவினைவாதி ஒருவரும் உயிரிழந்ததாக கூறப்படுகிறது.

இந்த தாக்குதலில் மொத்தம் 10 பேர் இறந்ததாக பிராந்திய நிர்வாகம் தெரிவித்துள்ளது. ஆனால், 12 பேர் இறந்ததாகவும், 2 உடல்களை அந்த இடத்தில் இருந்து உடனே அப்புறப்படுத்திவிட்டதாகவும் கிளர்ச்சியாளர்கள் தெரிவிக்கின்றனர்.

## ஐ.எஸ்.-யை அழிப்பதுடன் ஆசாத்தை பதவி இறக்கவும் துருக்கி போராடும்: அதிபர் எர்டோகன் பேச்சு



இஸ்தான்புல், அக்.1–

துருக்கியில் இன்று நடைபெற்ற பாராளுமன்றக் கூட்டத் தொடரில் அந்நாட்டின் அதிபர் எர்டோகன் முதல் உரையை மேற்கொண்டார். அப்போது இஸ்லாமிய அமைப்பு உட்பட தங்கள் பகுதிகளில் காணப்படும் அனைத்து பயங்கரவாத இயக்கங்களுக்கும் எதிராகப் போரிட எப்போதுமே முன்னுரிமை அளிக்கப்படும் என்று அவர் குறிப்பிட்டார்.

ஆனால் அதே சமயம் சிரியாவில் அதிபர் பதவியில் உள்ள ஆசாத்தை நீக்க முயற்சிப்பதுவும் தங்களின் முக்கியக் குறிக்கோளாக இருக்கும் என்றும் அவர் தனது உரையில் குறிப்பிட்டார்.

சிரியாவின் பிராந்திய ஒருமைப்பாட்டினைப் பாதுகாக்கவும், குடிமக்கள் அனைவரையும் அரவணைத்து செல்லும் பாராளுமன்ற அரசாங்க அமைப்பினை ஊக்குவிக்கவும் தற்போதைய சிரிய அதிபரை ஆட்சியிலிருந்து நீக்குவதும் தங்களின் முக்கிய குறிக்கோளாக இருக்கும் என்று அவர் தனது உரையில் குறிப்பிட்டார்.

கடந்த நான்கு ஆண்டுகளுக்கும் மேலாக அதிபர் ஆசாத்தைப் பதவியிலிருந்து இறக்க ஜிகாதிப் போராளிகள் மேற்கொண்ட உள்நாட்டு யுத்தத்தில் அங்கு பல்லாயிரக்க ணக்கானோர் பலியாகினர். மில்லியனுக்கும் மேற்பட்டோர் தங்கள் இருப்பிடங்களை விட்டு இடம் பெயர்ந்தனர்.

இருப்பினும், சமீபத்தில் அங்கு நடைபெற்ற தேர்தலிலும் ஆசாத் வெற்றி பெற்று அதிபர் பதவியில் அமர்ந்துள்ளார் என்பது இங்கு குறிப்பிடத்தக்கதாகின்றது.

## வெளிநாட்டு வங்கிகளுக்கு மியான்மர் அரசு அனுமதி

யாங்கூன், அக், 1–

நீண்ட காலமாக ராணுவ ஆட்சியின் கட்டுப்பாட்டில் இருந்து வந்த மியான்மர் கடந்த 2011-ம் ஆண்டில்தான் ஓரளவு சிவில் உரிமைகளைப் பெற்ற அரசாக மாறியது. ராணுவ ஆட்சியினால் தனிமைப்படுத்தப்பட்டு மோசமாகக் காணப்படும் பொருளாதாரத்தை சீர்தூக்கும் பல முயற்சிகளில் இந்த புதிய அரசு இறங்கியுள்ளது.

இதன் ஒரு பகுதியாக முதன்முறையாக ஒன்பது வெளிநாட்டு வங்கிகளுக்குத் தங்கள் நாட்டில் செயல்பட மியான்மரின் மத்திய வங்கி முதற்கட்ட அனுமதியை அளித்துள்ளது. ஆசிய பசிபிக் பிராந்தியத்தைச் சேர்ந்த ஆஸ்திரேலியா மற்றும் நியூசிலாந்து வங்கி, சீனாவின் தொழில் மற்றும் வணிக வங்கி, ஜப்பானின் டோக்கியோ மிட்சுபிஷி வங்கி, சுமிடோமோ மிட்சுயி வங்கி கார்ப்பரேஷன், மிஷுஹோ வங்கி, தாய்லாந்தின் பாங்காக் வங்கி, மலேயன் பேங்கிங் பெர்ஹாட், சிங்கப்பூரின் ஓவர்சீ- சைனீஸ் வங்கி கார்ப்பரேஷன் மற்றும் யுனைடெட் ஓவர்சீஸ் வங்கி என்ற ஒன்பது வங்கிகளுக்கு இந்த அனுமதி அளிக்கப்பட்டுள்ளது.

மியான்மர் நாட்டின் நிதித்துறை மற்றும் பொருளாதார வளர்ச்சியில் இந்த வங்கிகள் ஈடுபாடு காட்டும் என்றும், முதல் 12 மாதங்கள் செயல்பட்ட பின்னர் அவற்றுக்கான நிரந்தர




அனுமதி வழங்கப்படும் என்றும் மியான்மரின் மத்திய வங்கி அறிக்கை தெரிவித்துள்ளது.

புதிய ஆட்சியைத் தொடர்ந்து பெரும்பாலான சர்வதேசத் தடைகள் அகற்றப்பட்டுள்ள நிலையில் மியான்மர் அரசு அரசியல் மற்றும் பொருளாதார சூழ்நிலைகளில் பல மாற்றங்களை ஏற்படுத்தி தங்களின் உள்ளூர் வர்த்தகத்தில் வெளிநாட்டு முதலீடுகள் அதிகரிக்கும் வண்ணமாக செயல்பட்டு வருவதில் இந்த வங்கிகள் செயல்பாட்டுக்கான அனுமதியும் ஒரு பகுதி என்றே கூறப்படுகின்றது.

## தமிழக முதல்வர் பதவிக்கு ஷீலா பெயர் வெளியானது எப்படி?



சொத்துக் குவிப்பு வழக்கில், ஜெயலலிதா, பெங்களூரு சிறையில் அடைக்கப்பட்டதும், அடுத்த முதல்வர் யார் என்ற பரபரப்பு, தமிழக அரசியல் வட்டாரத்தில் கிளம்பியது. அப்போது, அ.தி.மு.க.,வை சேர்ந்த ஓ.பன்னீர்செல்வம், நவநீதகிருஷ்ணன், செந்தில் பாலாஜி ஆகியோருடன், ஐ.ஏ.எஸ்., அதிகாரியான ஷீலா பாலகிருஷ்ணன் பெயரும் அடிபட்டது.

அமைச்சர்கள், அரசியல்வாதிகள் பெயர் அடிபட்டதில், எந்த ஆச்சரியமும் இல்லை. ஆனால், ஐ.ஏ.எஸ்., அதிகாரியான ஷீலாவின் பெயர், அந்த பதவிக்கு பரிசீலிக்கப்படுவதாக, செய்திகள் வெளியானது எப்படி என்பதில் தான், பெரிய பின்னணியே இருக்கிறதுஜெயலலிதா தலைமையிலான ஆட்சியின்போது, தமிழக அரசு தலைமை செயலராக, ஷீலா பாலகிருஷ்ணன் பொறுப்பு வகித்தார்.

அப்போது, ஜெயலலிதாவின் நம்பிக்கைக்கு உரியவராக மாறினார்.அதன் காரணமாக, பணியில் ஓய்வு பெற்றதும், ஜெயலலிதா, அவரை அரசின் ஆலோசகராக நியமித்தார்.அதிகாரிகளின் முடிவுகளுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்படும் நடைமுறை

இருந்ததால், அமைச்சர்களை விட, அதிகாரமிக்கவராக ஒருசில அதிகாரிகள் உருவெடுத்தனர். அதில், முக்கிய இடம் பிடித்தது, முதல்வரின் செயலகத்தில் உள்ள அதிகாரிகள். அவர்களுக்கு துணையாக, போலீஸ் துறையில் உள்ள ஒருசில உயரதிகாரிகள் என, இந்த வட்டம் விரிவடைந்தது.

நாளடைவில் இந்த வட்டம் இட்டது தான் சட்டம் என்கிற அளவுக்கு நிலைமை போய் விட்டதாக கூறும் ஆளுங்கட்சியினர், ஓ.பி.எஸ்., போன்றவர்கள் முதல்வராகி விடக் கூடாது என்பதை தடுக்க போட்ட திட்டம் தான் இது என்றும் சொல்கின்றனர்.

இதுகுறித்து ஆளும் கட்சி வட்டாரம் மேலும் கூறியதாவது:ஆட்சி நிர்வாகத்தில், அதிகாரிகள் ஆதிக்கம் துவங்கியதற்கு, மூலக்காரணமாக இருப்பவர், முதல்வர் அலுவலகத்தில் உள்ள, ஒரு அதிகாரி தான். பல விவகாரங்களை அவரே கவனித்தார்.

எல்லா துறையிலும், அவர் தலையீடும் குறுக்கீடும் இல்லாமல் இருக்காது.இவரது யோசனைப்படி தான், ஷீலா பாலகிருஷ்ணன் பெயர் பரப்பி விடப்பட்டுள்ளது. அவரை முதல்வராக்கும் நோக்கத்தில் இந்த செய்தியை வெளியிட்டுள்ளனர்.

ஓ.பி.எஸ்., தான் முதல்வர் என்று முடிவான பிறகும், 'துணை முதல்வராகிறார் ஷீலா' என, கிளப்பி விடப்பட்டது.அது இல்லாமல் போனதும், 'அம்மா, ஷீலாவை தான் முதல்வராக்க விரும்பினார்; ஆனால், நாங்கள் தான் ஓ.பி.எஸ்.,சை ஆக்குங்கள் என்று கூறினோம்' என்று, அந்த வட்டம் இப்போது கூறிக் கொண்டிருக்கிறது.

பழையபடி எல்லாவற்றிலும் ஆதிக்கம் செலுத்தலாம் என்ற எண்ணத்துடன் இப்போது காய் நகர்த்த பார்க்கிறது.அரசுக்கு எதிராக,நியாயமான குறைகள் பத்திரிகைகளில் வெளிவருவதை கூட இந்த வட்டம் விரும்புவதில்லை. அப்படி வெளியாகும் செய்திகளைகூட, 'சுத்தப் பொய்; எல்லாம் பணம்' என, ஏதாவது ஒன்றை சொல்லி, முதல்வரை சமாளித்து விடுவர்.இந்த வழக்கு விவகாரத்திலும், அதுவே நடந்திருக்கிறது.

அதிகாரிகள்,' லாபி'யை நம்பியதால், வந்த விளைவு இது. அவர்கள் கோட்டை விட்டு விட்டனர். அதனால் தான், 'விரைவில் அதிகாரிகள் பந்தாடப்பட உள்ளனர்' என்ற செய்திகள் இப்போது வரத் துவங்கி உள்ளன.இவ்வாறு, ஆளுங்கட்சி வட்டாரம் தெரிவித்தது.

# இரண்டு ஆளுமைகள்! அவர்களில் இருந்து கற்றுக் கொள்ள ஆயிரமாயிரம் பாடங்கள்

எங்கள் விடுதலைப் போராட்டத்தின் மிகவும் கனதியான நாட்கள் இவை. இன்னும் நெஞ்சிருந்து உதிரம் வடியும் நினைவுகளுக்குரிய தினங்கள் இவை.. தமிழீழ விடுதலைப் போராட்டத்தின் மிகப்பெரும் ஆளுமைகள் இரண்டு இதே தினங்களில் விதையாகி போயின.

அதுவும் இரு வேறுபட்ட முறைகளில் அந்த விதைப்புகள்...ஒன்று ஆயுதங்கள் ஒப்படைக்கபட்டு இருந்த ஒரு அமைதிப் பொழுதில், சாத்வீகமான முறையில் விடுதலைக்கான எமது மக்களின் பெருவிருப்பை கோரிக்கைகளாக்கி நீரும் அருந்தாமல் உண்ணா நோன்பிருந்து...

இன்னொன்று தமிழீழ விடுதலைக்கான போராட்டத்தின் அத்தனை நீட்சிகளையும், வளர்ச்சியையும் கனவுகண்டு அதனை நனவாக்க தேசிய தலைவனுக்கு தோள்கொடுத்த ஒரு அற்புதம்..அதுவும் அமைதி பேச்சு காலத்தில்தான்..

இரண்டு விதைப்புகளும் நடந்தேறியது இரண்டு விதமான பத்தாண்டுகளில், இருவேறு நூற்றாண்டுகளில், ஒன்று இருபதாம் [illegible]ன் இறுதியில் [illegible] [illegible] இறுதியில் மர[illegible] ஆரம்பத்தில்..

சங்கர் அண்ணா, திலீபன் இருவருமே தியாகத்தின் இரு உச்சங்கள். ஓய்வற்ற போராட்டத்தின் இரு உறுதி மலைகள்...அவர்களின் வாழ்வும் மரணமும் ஆயிரம் பாடங்களை எமக்கு சொல்லி தந்தபடியே காலகாலத்துக்கும் தொடர்ந்துவரும்...இரண்டு வீரர்களிலும் இருந்து விடுதலைக்கான முறைமைகளை, வழிகளை, அதனை எவ்வாறு பெருமக்களின் அணிதிரட்டலுடன் முன் நகர்த்தலாம் என்பதையே எந்த நேரமும் சிந்தித்ததே அவர்களிடம் இருந்த ஒற்றுமை.....!

அதிலும் திலீபனை எடுத்துக் கொண்டால் அவனது மிகமுக்கியமான பலமே விடுதலைப் போராட்டத்தின் மீதும்,அதனை அடைவதற்கான பாதை தொடர்பாகவும்,அதனை வழிநடாத்தும் தலைமை மீதும் முழுமையான தெளிவும் நம்பிக்கையுடனும் இருந்ததே.

எந்த சந்தர்ப்பத்திலும் அவன் குழப்பமடைந்ததோ அசதி அடைந்ததோ கிடையாது..

இரண்டாவதாக, திலீபனுக்கு முன்பாக ஒரு பெரும் கடமையை அவனது ஆதர்ச தளபதியும் அவனுக்கு மிகவும் பிரியமானவருமான கிட்டு காட்டிவிட்டிருந்தார்.

களமாடுவதிலும், தாக்குதல்களில் முதன்நிலை தாக்கு நிலையில் நிலை கொண்டு நிற்பவனாக இருந்து போராடுவதே திலீபனுக்கு மிகமிக விருப்பமாக இருந்தாலும் காலத்தின் தேவை அவனை வேறு ஒரு நிலைக்கு மாற்றியது.

'இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து அதனை அவன் கண்விடல்' என்றுணர்ந்த தலைமை திலீபனிடம் அரசியல் பொறுப்பை ஒப்படைத்தபோது அவன் முழுமனதுடனேயே ஏற்றுக்கொண்டான்.

இங்கே ஒரு பாடம் நம் எல்லோருக்கும்...20 வயதை சற்று தாண்டிய அந்த பருவத்தில் களமாடுவதும்,சக போராளிகளுடன் இணைந்து நிலைகொண்டு தாக்குதலுக்காக நிற்பதும் எத்துணை எழுச்சியையும், வீர உணர்வையும் தரும் என்பது எல்லோருக்கும் தெரியும். அந்த வயதில் எல்லோரும் அதனையே விரும்புவதும் இயல்பானதுதான்.

ஆனாலும் நான் எதனை விரும்புகிறேன் என்பதல்ல இங்கு விடுதலைப் போராட்டத்தில் முக்கியம். விடுதலைப் போராட்டமும், அதன் தலைமையும் எதனை ஒப்படைக்கிறார்களோ அதுவே வரலாற்றின் கடமை என்றுணர்ந்து அதற்காகவே முழுமையான உழைப்பையும் தேவை ஏற்படின் அந்த துறைக்காகவே மரணிக்கவும்கூட தயாராக இருத்தலே அந்த பாடம்.

(இதனையே கிட்டு ''எனக்கு என்ன வேலையை இயக்கம் தருகின்றதோ அதனை முழு ஈடுபாட்டுடன் செய்து முடிப்பதே எனக்கான பணி.அமைப்பின் போராளிகளின் உடுப்புகளை துவைக்கும் வேலை தந்தால்கூட அதனை எவ்விதம் சிறப்பாக செய்வதென்றும்,எப்படி அழகாக மடித்து உடுப்புகளை வைப்பதென்றும் பார்ப்பேன்.' என்று அழகாக கூறுவார்)

ஒரு முக்கியமான காலகட்டம் ஒன்றில் திலீபன் அரசியல்துறை பொறுப்பாளன் ஆகின்றான். பகுதியாக விடுவிக்கப்பட்ட தமிழீழ தாயகம், அந்த பகுதிக்குள் வாழும் மக்களுக்கான பாதுகாப்பு, வாழிட சுகாதாரம், கல்வி என்பனவற்றிலும் நீதி வழங்குவதிலும் இயக்கமே பொறுப்பெடுக்க வேண்டிய ஒரு பொழுதில் திலீபனின் செயற்பாடு தொடங்குகின்றது.

மக்களுக்கு புரியாமல் மூன்றாம் அகிலம், நவபாசிசம், நான்காம் அகிலம் என்று பிதற்றுவதே அரசியல் என்றும் அடுக்கு மொழியில் விளாசுவதும்தான் அரசியல் என்றும் இருந்த ஒரு பொழுதில் மக்களுக்கு புரியக்கூடிய விதத்தில் மக்களின் மனதோடு ஒன்றிடும் மொழியில் சொன்னதே திலீபனை மக்கள் தங்களுள் ஒருவனாக நினைத்தற்கு காரணமாகும்.

மிகமிக அற்புதமாக ஒரு பம்பரம் போன்ற வேகத்துடன் தெருத்தெருவாக மக்களை அணிதிரட்டி அரசியல் ரீதியான விழிப்புணர்வை ஏற்படுத்தினான்.

காலகாலமாக கற்பித்து வரப்பட்ட சமூக ஏற்றத்தாழ்வுகளை பேணுவதும், கதைப்பதும்கூட ஒரு தேசக்குற்றம் என்ற நினைப்பை எல்லோர் மனங்களின் உள்ளேயும் நிறுவினான்.

போராளிகளின் தியாகங்களாலும் வீரம் செறிந்த அர்ப்பணங்களாலும் ஏற்படுத்தப்பட்ட இராணுவ வெற்றிகளை ஒரு அரசியல் மாற்றமாக செய்யும் ரசவாதம் தெரிந்த ஒரு முழுமையான போராளியாக அவன் உலாவந்தான்.

ஒரு சுதந்திர தேசத்துக்குரிய கட்டமைப்புகளை ஏற்படுத்துவதில் கிட்டுவக்கு பக்கதுணையாக நின்றவன் திலீபன்.

இறுதியாக அரசியல்ரீதியாக ஒரு அழுத்தம்,ஒரு பெரு மாயை ஏற்பட்டபோதும் அதனை நீக்குவதற்காக வேறு யாரையும் தேர்வு செய்வதைவிட திலீபன் தானாகவே முன்வந்து உண்ணாவிரதத்தில் அமர்கிறான்.

திலீபனை பற்றி தேசிய தலைவர் சொல்லும்போது ''திலீபனின் மரணம் எமது மக்களின் இந்திய மாயையை கலைத்தது'' என்று கூறுவார். அதுதான் முழு உண்மை. திலீபனின் மிகக்குறைந்த பட்ச கோரிக்கைகளும், அதற்காக அவன் நீரும் அருந்தாமல் உண்ணாவிரதம் இருந்ததும், அதனைகூட நிறைவேற்ற முடியாத இந்திய ஆளும் வர்க்கமும் எமது மக்களின் ''இந்தியா என்பது எமது காவல் தெய்வம்'' என்ற கனவை கலைக்க உதவியது.

அந்த நினைப்பை கலைத்து உண்மையை புரியவைக்காமல் இந்திய படைகளுடன் ஒரு யுத்தம் தொடங்கி இருந்தால் நிச்சயமாக மிகப்பெரும் பின்னடைவையே அமைப்பு சந்தித்திருக்கும்.

தன் மரணத்தின் மூலம்கூட இன்னும் பெரிய உந்துதலை, உறுதியை இந்த போராட்டத்து, இந்த மக்களுக்கு தந்து போனது தான் அவனது ஈகம்..

சங்கர் அண்ணாவை பொறுத்தவரையிலும் திலீபன் அரசியல் ரீதியாக ஒன்றுதிரட்டும் மக்களுக்கான விடுதலையை துரிதப்படுத்தும் கட்டமைப்புகளை படையக கட்டமைப்புகளை கட்டளைப் பீடத்தை சிங்கள தேசத்தின் இராணுவ பலத்துக்கு ஈடானதாக, அதனைவிட



லெப்.கேணல் திலீபன்
இராசையா பார்த்தீபன்
கேணல் சங்கர் / முகிலன்
வைத்தியலிங்கம் சொர்ணலிங்கம்

பலமானதாக கட்டி எழுப்புவதில் உழைத்த ஒருவர்.

சங்கர் அண்ணா அமைப்புக்கு வந்த காலகட்டம் ஒரு நெருப்பாற்று நீச்சல் போன்ற பொழுது.

1983ல் யூலை இனக்கொலைக்கு பின்னர் தமிழீழ இளைஞர்கள் மத்தியில் ஏற்பட்ட எழுச்சியும், ஆயுதப் போராட்டம் மீதான அவர்களின் இணைவும் இந்திய வல்லாதிக்கத்தின் தலையீட்டை ஏற்படுத்து கின்றது. பயிற்சி தருவதாக ஆயுத அமைப்புகளுக்கு அழைப்பு வந்த காலம் அது.

அதனை ஏற்று இந்தியா சென்றால் இந்தியாவின் கட்டளைகள், ஊடுருவல்கள், தலையீடுகள் அமைப்புக்குள் வலிந்து வந்தே தீரும். பயிற்சிக்கு செல்லாது ஈழத்திலேயே நின்றால் ஒரிருவருடன், ஒரு பத்துபேருடன் இருக்கும் அமைப்புகளுக்கு எல்லாம் பயிற்சியும் கொடுத்து ஆயுதமும் கொடுத்து தமிழீழம் அனுப்பி உறுதியான போராட்ட சக்தியான விடுதலைப்புலிகளை அழித்துவிடுவார்கள்.

ஒருவகையில் பத்மவியூகம்தான். தெளிவுடன் உள்நுழைந்து சேதாரம் இன்றி தனித்தன்மையுடன் வெளியேறவும் வேண்டும். சென்றோம்..ஆனால் சேதாரம் இன்றி அதே விடுதலைப்புலிகளாக அங்கிருந்து வெளியேற பாடுபட்டவர்களில் சங்கர்அண்ணா முக்கிய ஆள்.

அதற்காகவே எந்தநேரமும் அண்ணையுடன் திரிந்தார் சங்கர் அண்ணா..வேறு வேறு இயக்கங்கள், தமிழீழ கனவுகளுடன் படகேறி அங்கே முழு இலங்கைக்குமானவர்களாக மாறியது போன்று எமது இயக்கத்தினுள்ளும் நடைபெறாது காத்தவர்களில் சங்கர் அண்ணா முக்கியமானவர்.

இரண்டாவதாக, தாம் பிச்சைபோன்று வழங்கும் ஆயுத- தொடர்பு வளங்களுடனேயே போராளிகள் இருக்கவேண்டும் என்ற இந்திய வல்லாதிக்க நினைப்பை பொய்யாக்கி,

எமக்கான வளங்களை நாமே தேடுவதற்கான ஏற்பாடுகளை தலைவர் திட்டமிட்டபோது அதனை முழுமையாக நடைமுறைப்படுத்திய அசாத்திய ஆற்றலாளன் கேணல் சங்கர் அண்ணா..அதற்காகவே சங்கர் அண்ணா இந்த அமைப்பின் முதன்முதலான புலனாய்வுபகுதி ஒன்றை கட்டியமைத்தார்.

தமிழீழ கடலைப் பொறுத்தவரையிலும் 83,84,85 பகுதிகளில் ஓட்டிகள் என்று அழைக்கப்படுபவர்களே விடுதலைப் புலிகளின் கடற்படகுகளை செலுத்துபவர்களாக இருந்தார்கள்.

தமிழீழ இலட்சியத்தின் மீதான பற்றுதலாலும், இயக்கத்தின் மீதானவாஞ்சையாலும் குடும்பவாழ்வினுள் இருந்தபடியே இந்த உயிர் ஆபத்தான கடல்பயணங்களை ஓட்டிகள் செய்தார்கள்.

ஆனால் இயக்கத்தின் வளர்ச்சியும், அதனூடு சிங்கள பேரினவாத கடற்படையின் வளர்ச்சியும் அதிகரித்தபோது இயக்கத்து க்கென்று தனியாக ஒரு கடற்படை,ஒரு கடல் அணி உருவாக்கப்பட வேண்டிய வரலாற்று தேவை உருவானபோது சங்கர் அண்ணாவே முன்னின்று கடற்புறாவின் உருவாக்கத்துக்கு உழைக்கிறார்.

இயக்கத்துக்கு வருவதற்கு முன்னர் ஏற்கனவே சங்கர் அண்ணா உலகம் முழுதும் கப்பல் மாலுமியாக (இயந்திர பொறியியாளனாக) வேலை செய்த அனுபவம் அதற்கு பெரிதும் உதவியது.

அதனைப் போலவே விரிந்த பெருங்கடலில், வானூர்திகளின் உதவியுடனும் கடற்படையினர் செய்த எம் மக்கள் மீதான படுகொலைகளுக்கு பதிலடியாக முதலாவது கடற்கரும்புலி தாக்குதலை சங்கர் அண்ணாவே முன்னின்று நெறுத்திப்படுத்தினார்.

சிங்கள பேரினவாத படைகளின் பலத்துக்கு சவால்விடும் கட்டமைப்புகளை உருவாக்கி அதன்மூலமே எமது மக்களை காத்து கொள்ளலாம், எமது நிலத்தை காத்தும்-மீட்டும் கொள்ளலாம் என்று அனுபவத்தால் உணர்ந்ததாலேயே சங்கர் அண்ணா விமானப் படையை உருவாக்கினார்.

இந்த முயற்சிகளுக்கான அவரது பயணங்கள், தேடல்கள், தோல்விக்கு தோல்விக்கு பின் வெற்றி அளிக்கும்வரை செய்த முயற்சிகள் எமக்கு என்றைக்குமான பாடங்கள்.

இந்த இனத்தை அளவுகடந்து நேசித்த ஒரு மனிதன் அவர்.

சங்கர் அண்ணாவுக்கான பரிசோதனை சாலைகளும், திட்டமிடல் கட்டமைப்பும், தலைவருடன் தினசரி சந்திக்கும் வேலைகள் இருந்தாலும் சங்கர் அண்ணா அதனூடாக கிடைக்கும் ஒரு சிறு இடைவெளிக்குள் மக்களை சந்தித்து அவர்களின் அன்றாட ஏதாவது ஒரு பிரச்சனைக்கு தீர்வு கண்டபடியேதான் இருந்தார்.

நாளைய தன் தேசம் பசுமையாக இருக்க வேண்டும் என்று கனவு கண்ட ஆயுதப் போராளி அவர். அதனால்தான் தினமும் சிறுசிறு மரக்கன்றுகளை எங்காவது நட்டுவைத்தார்.

இன்று அவை கிளை பரப்பி விருட்சங்களாக நிற்கலாம். நாளை ஒரு சுதந்திர தேசம் மலரும்போது சங்கர் அண் ணாவின் நினைவாக அவை காற்றெறியும்.

நிச்சயமாக திலீபன், சங்கர் அண்ணா என்ற இந்த இருபெரும் ஆளுமைகளும் விடுதலைப் போராட்டத்தின் இருபெரும் வழிகாட்டிகளாக என்றென்றும் நிலைத்திருப்பர்.

ஒவ்வொரு பாதையும் மூடப்படும்போது மற்ற ஒரு பாதையை எப்படி திறப்பது என்றும் அதற்காக எப்படி முழுமையான அர்ப்பணத்துடன் உழைப்பது என்றும் திலீபனது வாழ்வும் சங்கர் அண்ணாவினது வாழ்வும் எப்போதும் சொல்லியபடியே இருக்கும்.

## பழங்காலத்து மலைகள்!

அண்டார்டிகா கண்டத்தின் பெரும் பனியடுக்கின் கீழே புதைந்து கிடக்கும் புதிரான மலைகள், பூமியில் டைனோசர்கள் திரிந்த காலத்தைச் சேர்ந்தவை. அதாவது 20 கோடி ஆண்டுகளுக்கு முந்தையவை என்று தெரியவந்துள்ளது.

காம்பர்ட்சேவ் சப்கிளேசியல் மவுன்டன்ஸ் எனப்படும் இந்த மலைகளைப் பற்றி ஆய்வு மேற்கொண்டிருக்கும் விஞ்ஞானிகள், இவை அண்டார்டிகா நிலப்பரப்பில் 10 ஆயிரம் அடிக்கு மேல் உயர்ந்தன.

ஆனால் பெரும்பாலும் 15 ஆயிரத்து 750 அடி பனி அடுக்கால் மூடப்பட்டிருக்கின்றன என்கின்றனர்.

இந்த மலைகளைப் பற்றி ஆய்வாளர் பாஸ்டோ பெராச்சியோலி கூறுகையில், ''பனி அடுக்குகள் காரணமாக இந்த மலைத் தொடரானது பூமியில் அதிகம் அறியப்படாத மலைத் தொடராக உள்ளது'' என்கிறார்.

''தென் துருவத்தில் மனிதன் காலடி வைத்து நூறாண்டுகள் ஆகும் நிலையில், தற்போதைய கண்டுபிடிப்பு வெளியாகியிருப்பது மிகவும் பொருத்தமானது'' என்று தேசிய அறிவியல் அறக்கட்டளையைச் சேர்ந்த அலெக்சாண்ட்ரா இசர்ன் கூறுகிறார்.

புதிய ஆய்வுப் பணியில் ஈடுபட்ட விஞ்ஞானிகள், மிகவும் கடினமான சூழலில் அண்டார்டிகா மலைத் தொடர் பற்றிய தகவல்களையும், நுணுக்கமான படங்களையும் சேகரித்துள்ளனர். தற்போது கிடைத்திருக்கும் முடிவுகள், இனி இப்பகுதியில் மேற்கொள்ளப்படும் ஆய்வுகளுக்கு பல்லாண்டு காலத்துக்கு உதவும் என்று கருதப்படுகிறது.

இந்த ஆய்வுக்கு என சுமார் 1 லட்சத்து 20 ஆயிரம் கிலோமீற்றர் பரப்பளவுக்கு இரு சிறு விமானங்களில் விஞ்ஞானிகள் பறந்து திரிந்துள்ளனர். பனிப் பாறைகளை ஊடுருவும் ரேடார்கள், லேசர்கள், காந்த மற்றும் புவியீர்ப்பு விசை மீற்றர்களைப் பயன்படுத்தியுள்ளனர்.

25 கோடிக்கும் 10 கோடிக்கும் இடைப்பட்ட காலகட்டத்தில் இந்த மலைத் தொடர் பூமியிலிருந்து எழுந்திருக்க வேண்டும் என்ற முடிவுக்கு அவர்கள் வந்துள்ளனர்.

★★★★★★★★★★★★★★★★★★★

## தட்டின் வண்ணமே ருசியின் வண்ணம்



நம்பினால் நம்புங்கள், நீங்கள் சாப்பிடும் தட்டின் நிறம் மாறினால் உணவும் ருசியாகும். இதை நாம் கூறவில்லை. ஸ்பெயின், இங்கிலாந்து நாடுகளைச் சேர்ந்த ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.

அவர்கள், 'ஸ்ட்ரோபெரி மியூஸ்' என்ற இனிப்புப் பதார்த்தத்தை வெள்ளைத் தட்டிலும், கறுப்புத் தட்டிலும் வைத்து சிலரைச் சாப்பிடச் சொன்னார்கள்.

அப்போது, தட்டின் நிறமானது ஒருவர் உணவை ரசித்து ருசிக்கும் விதத்தைப் பாதிப்பது உறுதியானது.

கறுப்புத் தட்டில் வைக்கப்பட்ட ஸ்ட்ரோபெரி மியூஸை' விட வெள்ளைத் தட்டில் வைக்கப்பட்டது மிகவும் ருசியாகவும், இனிப்பாகவும், தரமாகவும் இருந்ததாக அதைச் சாப்பிட்டவர்கள் கூறினார்கள்.

அவர்களுக்கு, வெள்ளைத் தட்டில் வைக்கப்பட்ட உணவு மிகவும் மணமாகவும் தோன்றியதாம்.

வெள்ளை நிறப் பின்னணியில் பளிச்சென்று உணவு தோன்றியது அவர்களை இவ்வாறு கருத வைத்திருக்கலாம் என்று ஆய்வாளர்கள் தீர்மானித்தனர்.

அதனால், அவர்கள் இன்னொரு ஆய்வையும் செய்தனர். அதாவது, தட்டின் வடிவமும் உணவு குறித்த கருத்தில் தாக்கத்தை ஏற்படுத்துகிறதா என்பது.

இதற்காக ஆய்வாளர்கள், தன்னார்வப் பங்கேற்பாளர்களை வட்டமான, சதுரமான, முக்கோணமான தட்டுகளில் சாப்பிட வைத்தனர். ஆனால் தட்டின் நிறத்தைப் போல இது பெரிதாகத் தாக்கத்தை ஏற்படுத்தவில்லை.

பொதுவாகவே, மென்மையான, வெளிறிய பின்னணி கொண்ட தட்டு, அடர்நிறப் பின்னணி கொண்ட தட்டைவிட உணவை ருசியானதாக, சிறப்பான தாகத் தோன்றச் செய்வதாக ஆய்வாளர்கள் உறுதிப்படுத்தியுள்ளனர். கண் வழியாக மூளையில் பதிவாகும் காட்சி, இந்த மாயாஜாலத்தை ஏற்படுத்துவதாக அவர்கள் தெரிவிக்கின்றனர்.

★★★★★★★★★★★★★★★★★★★

## பூமிக்கு இன்னொரு ஆபத்து



செவ்வாய் கிரகத்தின் துணைக்கிரகமான சந்திரனை ஆராய்ச்சி செய்வதற்காக ஆளில்லா 'போபோஸ் கிரவுண்ட்' என்ற விண்கலத்தை ரஷ்யா அனுப்பியுள்ளது. 200 கிலோ எடையுள்ள இந்த விண்கலம் தன் பணியை அங்கு முடித்துவிட்டதால், பூமிக்கு மீண்டும் திரும்புகிறது. பூமியின் உட்காற்றுப் பாதைக்குள் நுழையும் போது அந்த விண்கலமானது 20 முதல் 30 துண்டுகளாக உடையும். அவ்வாறு சிதைவடையும் துண்டுகள் பூமியில் மோதும் என எதிர்பார்க்கப்படுகிறது.

இந்த நிகழ்வு வருகிற ஜனவரி மாதம் 6ம் தேதியிலிருந்து 19ந் தேதிக்குள் நடைபெறும் என ரஷ்யாவின் விண்வெளி மையம் தெரிவித்துள்ளது. பூமியை நெருங்கும்போது அதன் துண்டுகள் நெருப்புப் பிழம்பாக மாறும். அவை உடைந்து சிதறுவதால் வெளியேறும் நச்சு எரிபொருள் மற்றும் கதிரியக்க பொருளால் மக்களுக்கு எந்தவித ஆபத்தும் ஏற்படாது என்றும் அறிவிக்கப்பட்டுள்ளது.






## எதுவா இருந்தாலும் வேலை செய்யும்

★★★★★★★★★★★★★★★★★★★

தாய்வானின் தேசிய ஃபோர்மோசா பல்கலைக்கழகத்தின் மின்னணு மற்றும் காந்தப்புலத்துறை விரிவுரையாளரான சுங்பின் லையோ, வெறும் ஈரத்தன்மையால் சக்தியேற்றும் பற்றறி ஒன்றைக் கண்டுபிடித்துள்ளார். இந்த பற்றறி, எந்தத் திரவத்தினால் வேண்டுமானாலும் ஈரமாக்கப்பட்டால் போதும், சக்தியேற்றம் தொடங்கிவிடுகிறது.

தண்ணீர், குளிர்பானம் என்பன மட்டுமல்லாமல் சிறுநீரால்கூட இந்த பற்றறிக்கு சக்தியேற்றலாம். ஈரமான வெறும் பத்து நொடிகளுக்குள் மின்சக்தி பிறப்பிக்கப்படும் இந்த பற்றறி, எந்தத் திரவத்தால் சக்தி ஏற்றப்படுகிறதோ, அதைப் பொறுத்து, இரண்டு நாட்கள் முதல் ஒரு வாரம் வரை நீடித்து நிற்கிறது. எந்தச் சூழலிலும் எதற்கான சக்தி பிறப்பாக்கியாகவும் இந்த பற்றறியை இயக்க முடிவது இதன் இன்னுமொரு சிறப்பு.

சாதாரண பற்றறிகளைவிடவும் பாதியளவே மின்சக்தியை இந்த பற்றறிகள் வழங்குமென்றாலும் நீரால் சக்தியேற்றப்படும் பற்றறிகளைவிடவும் அதிகளவான களஞ்சியப்படுத்தல் சக்தியைக் கொண்டுள்ளது. அதுமட்டுமன்றி, அந்த பற்றறிகளுடன் ஒப்பிடுகையில், இந்த நவீன பற்றறிகளின் உற்பத்திச் செலவும் குறைவானதே. அத்தோடு, இரசாயனச் சேர்மானங்கள் இதில் அடக்கப்படாமையால், சுற்றுச்சூழலுக்கு எவ்வித பாதிப்பும் இருக்காது என்கிறார் சுங்பின்.

## வர்ணப்பூச்சில் மின்சாரம்

★★★★★★★★★★★★★★★★★★★

இதுவும் ஒரு மாற்று சக்தி மூலம் பற்றிய செய்தியே.

சூரியசக்தியைச் சேமித்து மின்சக்தியாக வழங்கக்கூடிய வர்ணப்பூச்சு வகை ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. விமானம், புகையிரதம் போன்ற பெரிய உருப்படிகள் தவிர, சுவர்கள், வேலிகள், மேற்கூரைகள் போன்றவற்றிலும் இந்தப் பூச்சைப் பூசலாம்.

இந்தப் பூச்சின் ஒவ்வொரு துளியிலும் ஓரிரு நெனோ மீற்றர் விட்டமேயுள்ள மிகச் சிறிய கலங்கள் புள்ளிகள் வடிவில் அடங்கியிருக்கின்றன. ஒரு நெனோ மீற்றர் என்பது, மனிதனின் ஒரு முடியின் பத்தாயிரத்தில் ஒரு பங்கே.

இந்த மிகச் சிறிய புள்ளிகள், அவை உள்வாங்கும் சூரிய சக்தியை, - ஏனைய சூரிய சக்தி கலங்கள் போலவே - மின்சக்தியாக மாற்றக்கூடியன. அதுவும் ஒப்பீட்டளவில் மிகக் குறைந்த செலவில். ஒரு சதுர மீற்றர் பரப்பளவுக்குத் தேவையான பூச்சின் விலை பதினைந்து டொலர்களே.

அதே சமயம், அதே பரப்பளவிலான, பாவனையில் இருக்கும் சூரிய சக்தித் தகடு ஒன்றின் விலை ஆயிரம் டொலர்கள்.

இதற்குக் காரணம், சூரியசக்தித் தகடுகளில் அமைக்கப்படும் சிலிக்கன் கற்கள், மிக அதிக வெப்பத்தில் உருவாக்கப்பட்டு, குளிரூட்டப்பட்டு, பதப்படுத்தப்பட்டு வெட்டப்படுகிறது.

உலகத்தினரின் பாவனைக்குத் தேவையான மின்சக்தியில் ஒரு சதவீதமே சூரிய சக்தியில் இருந்து இன்றுவரை பெறப்படுகிறது.

ஆயினும், உலகம் முழுவதும் விழும் சூரிய வெப்பத்தை ஒரு மணிநேரம் சேமித்தாலே, முழு உலகத்துக்கும் ஒரு வருடத்துக்குத் தேவையான மின்சாரத்தைப் பெற முடியுமாம்.

இந்த சக்தியைப் பெறுவதிலும், அதை மின்சக்தியாக மாற்றுவதிலும், மாற்றப்படும் மின்சக்தியைச் சேகரிப்பதிலுமான தொடர்பைச் சரியாகப் பேண முடியாதிருப்பதே சூரியசக்திப் பயன்பாடு வரவேற்புப் பெறாமைக்குக் காரணம்.

ஆனால், இந்த மலிவு விலை வர்ணப் பூச்சு மூலம் இந்தக் குறையை நிவர்த்தி செய்யலாம் என நம்பப்படுகிறது.



சிறுகதை

# பிழைக்கத் தெரியாதவர்

என்.கணேசன்

பஸ் ஸ்டாப்பில் நின்றிருந்த நீலச்சட்டைக்காரரைப் பார்த்த போது சத்யமூர்த்தி போலத் தெரிந்தது. சத்யமூர்த்தி தான். மனிதர் வேலையில் இருந்த போது எப்படி இருந்தாரோ பார்க்க அப்படியே தான் இப்போதும் தெரிந்தார். எந்தப் பெரிய முன்னேற்றமும் தெரியவில்லை. ஜெயக்குமார் ஏளனமாக நினைத்துக் கொண்டார். இப்போது பஸ் பயணம் தானா? ஒட்டிக் கொண்டிருந்த பழைய ஸ்கூட்டர் காயலாங்கடைக்குப் போய் விட்டது போல் இருக்கு

அவரும் சத்யமூர்த்தியும் ஒரே அரசுத் துறையில் இன்ஜினியர்களாகப் பல வருடங்கள் சேர்ந்து வேலை பார்த்தவர்கள், சம வயதினர்கள், ஒரு மாத இடைவெளியில் ஒரே ஆபிசிலிருந்து ரிடையர் ஆனவர்கள். அதனால்தானோ என்னவோ தன்னை அடிக்கடி சத்யமூர்த்தியோடு ஒப்பிட்டுப் பார்க்கும் பழக்கம் ஜெயகுமாருக்கு ஏற்பட்டிருந்தது.

இருவரும் பணம் கொழிக்கும் அரசுத்துறையில் அதிகாரிகளாக இருந்தாலும் சத்யமூர்த்தி பிழைக்கத் தெரியாத மனிதராகவே கடைசி வரை இருந்து விட்டார். அந்தத் துறையில் சம்பளத்தைத் தவிர ஒரு பைசா அதிகமாக சம்பாதிக்காதவர் அனேகமாக அவர் ஒருவர் தான். அந்தத் துறையில் கையை நீட்டவே வேண்டியிருக்கவில்லை. வேலையாக வேண்டியிருந்தவர்கள் தாங்களாகவே பணமாகவும், பொருளாகவும் கொண்டு வந்து கொட்டினார்கள். அந்தத் துறையில் அனைவரும் சம்பாதித்ததில் அளவில்லை என்றாலும் ஜெயக்குமார் தன் தனி சாமர்த்தியத்தால் மற்றவர்களை விட இரட்டிப்பாக சம்பாதித்து விட்டிருந்தார். ஆனால் திறமையாகவும் கச்சிதமாகவும் வேலை செய்தாலும் சத்யமூர்த்தி மட்டும் கடைசி வரை அப்படி வரும் பணத்தையும், பொருளையும் உறுதியாக மறுக்கிற வராகவே இருந்து விட்டார்.

அந்த நேர்மை ஜெயக்குமாருக்கு முட்டாள்தனமாகவே பட்டது. மற்றவர்களும் சத்யமூர்த்தியைப் பிழைக்கத் தெரியாத மனிதர் என்றே அழைத்தார்கள். ஆனாலும் அவர்கள் அனைவருக்கும் சத்யமூர்த்தி மீது மிகுந்த மரியாதை இருந்தது. மேல் அதிகாரிகள் கூட அவரிடம் ஒரு தனி மரியாதையோடு நடந்து கொண்டனர். அதைக் கவனிக்கும் போதெல்லாம் பணம் வேண்டுமளவு கிடைத்த போதிலும் அந்தத் தனி மரியாதை தனக்குக் கிடைக்கவில்லையே என்ற பொறாமையில் ஜெயக்குமார் வெந்தார்.

ரிடையரானபின் சொந்தமாய் ஒரு பிசினஸ் ஆரம்பித்து வெற்றிகரமாக வாழ்ந்த அவருக்கு ஏனோ அப்போதும் சத்யமூர்த்தியை அலட்சியப்படுத்த முடியவில்லை. ஒவ்வொன்றிலும் அவ்வப்போது தன்னையும் சத்யமூர்த்தியையும் ஒப்பிட்டுக் கொள்ளாமல் அவருக்கு இருக்க முடியவில்லை. ஒப்பிடும் போதெல்லாம் தான் சேர்த்து வைத்திருந்த சொத்துகளை கணக்கிடுகையில் தானே வெற்றியாளன் என்றும், சத்யமூர்த்தி முட்டாள் என்றும் ஜெயக்குமாருக்குத் தோன்றும். ஆனால் சத்யமூர்த்தியோ கடைசி வரை அதை உணர்ந்ததாகவே தெரியவில்லை. அதை எப்படியாவது அவருக்கு உணர்த்தி, அவர் முகத்தில் தெரியும் பெருமிதம் கலந்த நிறைவை விலக்கி விட வேண்டும் என்று பல முறை ஜெயக்குமாருக்குத் தோன்றி இருக்கிறது.

இன்று பஸ் ஸ்டாப்பில் கூட்டத்தோடு கூட்டமாக பஸ்ஸிற்காக காத்து நிற்கும் சத்யமூர்த்தியைப் பார்க்கும் போது அந்த எண்ணம் வலுப்பட அவர் தன் விலையுயர்ந்த காரைப் பின்னோக்கி செலுத்தி அழைத்தார். சத்யமூர்த்தி

சத்யமூர்த்தி அவரைப் பார்த்து சந்தோஷப்பட்டது போல் தெரிந்தது. காரை நெருங்கியவர் கேட்டார். ஜெயக்குமார், சௌக்கியமா?

ஏதோ இருக்கேன். நீங்க எங்கே போக இங்கே நிக்கறீங்க?

வீட்டுக்குப் போகத்தான். 91 ஆம் நம்பர் பஸ்ஸுக்காக நிற்கறேன். நீங்க?



நானும் என் வீட்டுக்குத் தான் போய்கிட்டிருக்கேன். நீங்களும் வாங்களேன். பார்த்து பேசி பல காலம் ஆயிடுச்சு...

இல்லை. 91 இப்ப வந்துடுவான்

ஜெயக்குமார் கட்டாயப்படுத்தி சம்மதிக்க வைத்து காரில் அவரை ஏற்றினார். காரில் ஏறி அமர்ந்த சத்யமூர்த்தி காரினுள் இருந்த ஏ.சி காற்றை நிஜமாகவே ரசித்த மாதிரி இருந்தது.

ஜெயக்குமார் மனதினுள் சொல்லிக் கொண்டார். இப்பவாவது நீ இழந்தது என்னவெல்லாம் என்று உணர்ந்து கொள் முட்டாளே. என் வீட்டுக்கு வந்து பார்த்தால் இன்னும் எத்தனையோ புரியும்

போகும் வழியில் தங்களுடன் வேலை பார்த்தவர்களைப் பற்றி ஒருவரை ஒருவர் விசாரித்துக் கொண்டார்கள். பெரிய பங்களா போல் இருந்த தன் வீட்டின் முன் காரை நிறுத்தி இறங்கிய போது சத்யமூர்த்தி முகபாவத்தை ஜெயக்குமார் உற்றுப் பார்த்தார். சொந்தமாய் இரண்டு பெட்ரோல் ஃப்ளாட் மட்டுமே வைத்திருக்கும் சத்யமூர்த்தி முகத்தில் எந்த மாற்றமும் தெரிய வில்லை.

ஜெயக்குமார் அவரை உள்ளே அழைத்துக் கொண்டு போனார். வீட்டில் அவர் மனைவி இருக்கவில்லை. அவளும் என் மூத்த மகனும் ஒரு கல்யாணத்திற்கு பெங்களூர் போயிருக் காங்க. காலைல ஃப்ளைட்ல தான் போனாங்க சின்னவன் இப்ப யூ எஸ்ல எம்பிஏ செய்துகிட்டிருக்கான் என்று தெரிவித்தார். சத்யமூர்த்தி அப்படியா என்பது போல கேட்டுக் கொண்டார்.

என்ன சாப்பிடறீங்க? காபி, டீ, ஜூஸ்?

ஜூஸே கொடுங்க

ஒரு பெரிய கண்ணாடி தம்ளரில் ஜூஸும், பெரிய வெள்ளித் தட்டில் முந்திரி பாதாம்களையும் கொண்டு வந்து தந்து விட்டு ஜெயக்குமார் ஏ.சியை ஆன் செய்தார். இப்பவெல்லாம் ஏ.சி இல்லாமல் இருக்கவே முடியறதில்லை

அதிலேயே இருந்து பழகினதால் தான் அப்படி என்று சத்யமூர்த்தி ஜூஸ் குடித்தபடியே பொதுவாகச் சொன்னார். பிறகு இரண்டு முந்திரிகளையும், இரண்டு பாதாம்களையும் எடுத்து வாயில் போட்டுக் கொண்டவர் வெள்ளித் தட்டை சற்று தள்ளி வைத்தார்.

வாங்க வீட்டை சுத்திப் பார்க்கலாம் என்று சொல்லிய ஜெயக்குமார் சத்யமூர்த்திக்குத் தன் பங்களாவை சுற்றிக் காண்பித்தார்.

சினிமாவில் காண்பிக்கப்படுவது போல இருந்தது அவர் பங்களா. ஒவ்வொரு அழகான வேலைப்பாடும் பணம் பணம் என்றது.

ஒவ்வொன்றையும் சத்யமூர்த்தி ரசித்தாலும் அவர் முகத்தில் பொறாமை தெரியாததும், இப்போதும் தான் இழந்ததெல்லாம் என்ன என்று உணராததும் ஜெயக்குமாருக்கு என்னவோ போலிருந்தது.

பிறகு ஜெயக்குமார் சத்யமூர்த்தியைப் பற்றி விசாரிக்க ஆரம்பித்தார். இப்ப உங்க மகன் என்ன செய்யறான்?

அவன் சி ஏ முடிச்சுட்டான். தனியா ஆடிட்டிங் ப்ராக்டிஸ் செய்யறான்.

நீங்க என்ன செய்யறீங்க? எங்கேயாவது வேலைக்குப் போறீங்களா?

பையன் வேண்டாம்கிறான். இத்தனை நாள் எங்களுக்காக உழைச்சது போதும், இனி சும்மா இருங்கன்னு சொல்றான்ம்.

ஜெயக்குமாருக்கு சுருக்கென்றது. அந்த வார்த்தை அவர் குடும்பத்தினரிடமிருந்து இது வரை வந்ததில்லை.

ஆனா எனக்கு சும்மா இருக்க முடியலை. இது நாள் வரைக்கும் குடும்பத்தைத் தவிர வேற யாருக்கும் எதுவும் செய்யாமல் இருந்துட்டேன். இனியாவது நாலு பேருக்காவது உபகாரமாய் இருக்கணும், ஏதாவது செய்யணும்னு இப்ப ஏழைக் குழந்தைகளுக்கு இலவச சமா டியூசன் எடுக்கறேன்.

சத்யமூர்த்தி உற்சாகமாக அந்த ஏழை மாணவ மாணவிகளின் முன்னேற்றத்தைப் பற்றி சொல்லிக் கொண்டே போனார்.

அவர் சொல்லிக் கொடுத்த ஒரு ஏழை மாணவன் சென்ற வருடம் பத்தாம் வகுப்பு பொதுத் தேர்வில் மாநிலத்தில் மூன்றாவதாய் வந்ததைச் சொல்கிற போது அவர் குரலில் தெரிந்த பெருமிதம் ஒரு தந்தையினுடையதாக இருந்தது.

ஒரு சிறு இடைவெளி கிடைத்த போது ஜெயக்குமார் கேட்டார். உங்க ஸ்கூட்டர் என்னாச்சு

அது ஆறு மாசம் முன்னாடி ரிப்பேர் ஆயிடுச்சு. மெக்கானிக் கிட்ட போனா அவன் இதை சரி செய்ய இதுல எதுவுமே உருப்படியாய் இல்லைன்னு சொல்றான். இவ்வளவு வருஷமா இதை உபயோகிக்கறீங்கன்னு அந்த ஸ்கூட்டர் கம்பெனிக்கு தெரிவிச்சா அவங்க உங்களைக் கூப்பிட்டு கவுரவிச்சாலும் கவுரவிக்கலாம்னு சொல்றான். என்று சொல்லி விட்டு சத்யமூர்த்தி கலகலவென்று சிரித்தார்.

அதை மறைக்காமல் சிரித்துக் கொண்டே சொன்னது ஜெயக்கு மாருக்கு ஒரு மாதிரியாக இருந்தது. ஏன் நீங்க ஒரு கார் வாங்கலாமே

என் மகன் எனக்கு ஒரு கார் வாங்கித் தரணும்னு ரொம்ப நாளா சொல்லிகிட்டே இருந் தான். நான் அவன் கிட்டே சொன்னேன். எனக்கு கார் வேண்டாம்டா. இந்த வயசுக்கு மேல நான் கார்ல எங்கே போகப் போகி றேன். ஸ்டேட் ரேங்க வாங்கின அந்த ஏழைப் பையனைப் படிக்க வைக்க அவன் அப்பாவுக்கு பணமில்லை. பாவம் கூலி வேலை செய்யறவர் அவர். எனக்கு கார் வாங்க செலவு செய் யற பணத்துல அந்தப் பையன் படிக்க உதவி செய். அது போதும் னேன். இப்ப அந்தப் பையன் என் மகன் உதவியால படிக்கிறான். நல்லாவே படிக்கறான்ம்.

சொல்லிக் கொண்டே போன சத்யமூர்த்தியின் முகத்தில் தெரிந்த நிறைவான மகிழ்ச்சியை ஜெயக்குமாரால் ரசிக்க முடியவில்லை.

பேச்சை அதிக மாக வளர்த்தாமல் சீக்கிரமாகவே அவரை அவர் வீட்டில் கொண்டு போய் விட்டார். சத்யமூர்த்தி தன் வீட்டுக்குள்ளே வர அவரை அழைத் தார்.

நேரமாயிடுச்சு. இன்னொரு நாள் வர்றேன் என்று அவசரமாக அங்கிருந்து ஜெயக்குமார் கிளம்பிய போது அவர் மனதில் ஒரு இனம் புரியாத வெறுமை நிறைந்திருந்தது. சத்யமூர்த்தியிடம் வலியப் போய் பேசாமல் இருந்திருக்கலாம் என்று தோன்ற ஆரம்பித்தது.

# ஈ-ராக்கில் விளையும் தானியங்களையும் பயன்படுத்திக் கொள்ளும் ஐ.எஸ். இயக்கம்

ஷெகான், அக்.1–

ஈராக்கிலும், சிரியாவிலும் கைப்பற்றும் பகுதிகளை இணைத்து ஒரு தீவிரவாத இஸ்லாமிய அரசை ஏற்படுத்தும் திட்டத்துடன் ஐஎஸ்ஐஎஸ் தீவிரவாத இயக்கம் அங்கு போரில் ஈடுபட்டு வருகின்றது.

அல்கொய்தா இயக்கத்திலிருந்தே இந்த தீவிரவாதக் குழுவும் வளர்ச்சி பெற்றபோதும் இரு இயக்களின் செயல்பாடுகளிலும் வித்தியாசம் காணப்படுவதாக அரசியல் பார்வையாளர்கள் தெரிவிக்கின்றனர். அல்கொய்தா இயக்கத்தினர் வெடிகுண்டுத் தாக்குதல்களையும், தாக்கிவிட்டு பின்னர் தப்பிப்பதையுமே தங்களுடைய செயல்முறையாகக் கொண்டிருக்கின்றனர்.

ஆனால் ஐஎஸ் இயக்கமோ தாங்கள் கைப்பற்றும் பகுதிகளில் தங்களின் அதிகாரத்தையும் செலுத்தி அரசு நடத்துவது போன்ற ஒரு அமைப்பையும் ஏற்படுத்திக் கொள்கின்றனர். ஈராக்கின் விவசாயப் பயிர்களில் பார்லி, அரிசியுடன் கோதுமை பெரும்பான்மையான இடத்தைப் பெறுகின்றது.

கோதுமை விளையும் இடங்களில் பெரும்பாலானவற்றைத் தனது கட்டுக்குள் வைத்திருக்கும் இந்த இயக்கம் வயல்களை விட்டுவிட்டு தப்பி ஓடியவர்களைத் தொடர்பு கொண்டு அவர்களைத் திரும்பவந்து விவசாயத்தில் ஈடுபட அழைக்கின்றது.

ஆனால் இதற்கு முன்னர் அவர்கள் முஸ்லீமாக மதமாற்றம் செய்துகொண்டு 500 டாலர் தொகையை ஐஎஸ் இயக்கத்திடம் அளிக்க வேண்டும் என்று வலியுறுத்தப்படுகின்றது. இதற்கு மறுக்கும் பிற சமூகத்தினரின் வயல்களில் உள்ள தானியங்கள் இந்த இயக்கத்தினரால் எடுத்துச் செல்லப்படுகின்றன.

இதுமட்டுமின்றி, உள்ளூர் தொழிலதிபர்களிடம் வரி வசூலிப்பது, சூறையாடுதல், மேற்கத்தியவர்களைக் கடத்துவதன் மூலம் பிணைத்தொகை பெறுதல், உள்ளூர் வியாபாரிகளிடம் எண்ணெய் விற்பனையில் ஈடுபடுதல் போன்ற பல நடவடிக்கைகளாலும் தங்களுக்குத் தேவையான வருமானத்தை இந்த இயக்கத்தினர் பெறுகின்றனர் என்று கூறப்படுகின்றது. குறிப்பாக எண்ணெய் விற்பனையானது மாதந்தோறும் மில்லியன் கணக்கான வருமானத்தை அளித்து வருகின்றது.

இதனைத்தொடர்ந்தே சிரியாவில் இவர்கள் பிடியில் உள்ள எண்ணெய் வயல்களை அமெரிக்கா குறிவைத்தது என்று தகவல்கள் தெரிவிக்கின்றன. இத்தகைய தங்களின் நடவடிக்கைகளினாலேயே ஐஎஸ் இயக்கத்தினர் உலக நாடுகளிடையே அல்கொய்தாவைவிட மிகப் பெரிய அச்சுறுத்தலை ஏற்படுத்தியுள்ளனர் என்றும் அரசியல் தகவல்கள் குறிப்பிடுகின்றன.

# முக்கடலும் சங்கமிக்கும் கன்னியாகுமரி செல்வோமா!

வெளிநாட்டு சுற்றுலாப் பயணிகள் தமிழ்நாட்டில் சுற்றுலா மேற்கொள்ளும்போது மறவாமல் போகும் இடம் கன்னியாகுமரி மாவட்டம். இங்கு ஏராளமான சுற்றுலாத் தளங்கள் உள்ளன. முக்கியமாக இந்தியாவைச் சுற்றிலும் அமைந்துள்ள அரபிக் கடல், வங்காள விரிகுடா, இந்தியப் பெருங்கடல் என மூன்று கடல்பகுதிகளும் சங்கமிக்கும் இடமாகவும் இது உள்ளது. கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள முக்கிய சுற்றுலாத் தளங்களை இப்போது பார்ப்போம்.

**உதயகிரி கோட்டை**

இது நாகர்கோயில் நகரில் இருந்து 14 கிமீ தொலைவில் அமைந்துள்ளது. தொடக்கத்தில் கி.பி1600களில் கட்டப்பட்டதாகக் கருதப்படுகிறது. பத்மநாபபுரத்தைத் தலைநகரமாகக் கொண்டு திருவிதாங்கூர் அரசர்கள் ஆண்ட காலத்தில் இக் கோட்டை அவர்களுக்குப் பெரிய சொத்தாக அமைந்திருந்தது. இது பின்னர் 18 ஆம் நூற்றாண்டில் திருவிதாங்கூர் அரசர் மார்த்தாண்ட வர்மரால் மீளக் கட்டப்பட்டது.

90 ஏக்கர் (36 ஹெக்டேர்) பரப்பளவை உள்ளடக்கியுள்ள இக் கோட்டையுள் 200 அடி (79 மீட்டர்) உயரமுள்ள ஒரு குன்று உள்ளது. இதற்குள் துப்பாக்கிகளை வார்ப்பதற்கான வார்ப்பு உலை ஒன்றும் உண்டு. உதயகிரிக் கோட்டையுள் டிலனோயின் சமாதி காணப்படுகிறது.

**உலக்கை அருவி**

கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள ஓர் இயற்கை அருவியாகும். இது ஒரு சிறந்த சுற்றுலாத் தலமுமாகும். கன்னியாகுமரியில் இருந்து ஏறத்தாழ 40 கிலோமீட்டர் தொலைவில் இது உள்ளது. தோவாளை தாலுக்காவிலுள்ள அழகியபாண்டிபுரம் என்னும் ஊரில் அமைந்துள்ள இந்த அருவியில் எல்லா மாதமும் நீர் வந்து கொண்டு இருக்கும். காடுகள் வழியாகச் செல்லும் ஒதுக்கப்பட்ட பாதைகள் மூலமே இந்த அருவியை அடைய முடியும். அருவியில் குளிப்பதற்கும் இயற்கை அழகை ரசிப்பதற்குமாகவே பல சுற்றுலாப் பயணிகள் இங்கே வருகின்றனர். அருவியை சுற்றிப் பசுமையான காடுகள் கண்ணுக்கு எட்டிய தூரம் வரை தெரியும். அருவித் தண்ணீர் வரும் இடம் பார்ப்பதற்கு ஓர் உலக்கை போல் இருப்பதால் இதற்கு உலக்கை அருவி எனப் பெயர் வந்தது என்பர்.

**கற்கோயில்**

1809ம் ஆண்டு மயிலாடியில் ரிங்கிள் தௌபெ என்பவரால் தொடங்கப்பட்டது. அப்போது அதன் தலைமையகம் மயிலாடியில் செயல்பட்டு வந்தது. பின்னர் அது 1818ம் ஆண்டு நாகர்கோவிலுக்கு மாற்றப்பட்டது. அங்கு





அதற்கான அலுவலகம் கற்கோவிலுக்கு எதிரில் இருக்கும் பெண்கள் கிறித்தவ கல்லூரி வளாகத்தில் செயல்பட்டது. 1819ம் ஆண்டு லண்டன் மறைபரப்பு அலுவலகத்திற்கு எதிரில் கற்கோவிலுக்கு அடிக்கல் நாட்டப்பட்டது. 127 அடி நீளமும் 66 அடி அகலத்திலும் இந்த ஆலயம் கட்டப்பட்டது. இந்த ஆலயத்தின் அடித்தளம் முதல் மேல்தளம் வரை முழுவதும் கருங்கற்களால் கட்டப்பட்டதால் கற்கோவில் என்ற பெயர் பெற்றது. திருவிதாங்கூர், கொச்சி, தஞ்சாவூர் மற்றும் ஆங்கிலேய அரசுகளால் நிதியுதவி அளிக்கப்பட்டு இக்கோவில் உருவாக்கப்பட்டது. 1843ம் ஆண்டு இக்கோவில் வழிபாடு தொடங்கியது.

**காந்தி மண்டபம்**

கன்னியாகுமரியில் மகாத்மா காந்தியின் சாம்பல் வைக்கப்பட்ட இடத்தில் கட்டப்பட்டுள்ள இம்மண்டபம் 1956ம் ஆண்டு கட்டப்பட்டது. இம் மண்டபத்தில் உள்ள மைய கூண்டு 79 மீட்டர் உயரம் கொண்டது. இது காந்தி இறக்கும்போது அவரின் வயதைக் குறிப்பிடுவதாக உள்ளது. ஒவ்வொரு வருடமும் காந்தியடிகளின் பிறந்த நாளான அக்டோபர் 2ம் தேதி சூரிய கதிர்கள் காந்தியின் சாம்பல் வைத்திருந்த இடத்தில் விழும்படி அமைக்கப்பட்டுள்ளது இம்மண்டபத்தின் சிறப்பாகும். இது காலை 7.00 மணி முதல் மாலை 7.00 மணி வரை பார்வையாளர்களின் பார்வைக்கு திறந்து வைக்கப்பட்டுள்ளது. இதைப் பார்வையிட வரும் சுற்றுலாப் பயணிகளிடம் கட்டணம் வசூலிக்கப்படுவதில்லை.

**காளிகேசம் அருவி**

கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள மேற்கு தொடர்ச்சி மலையின் நீரூற்றுகளிலிருந்து பெருக்கெடுத்து வரும் ஆறு பூதப்பாண்டியிலிருந்து 15 கட்டை (கிலோ மீட்டர்) தொலைவில் அருவியாக பாய்கின்றது. இந்த ஆற்றில் கோடை காலத்திலும் தண்ணீர் வற்றுவதில்லை. இவ்வருவியின் அருகில் போட்டாணி குகை என்றழைக்கப்படும் குகை அமைந்துள்ளது. இதை தற்போது சுற்றுலா பயணிகள் சமையல் செய்ய பயன்படுத்துகின்றனர்.

**சிதறால் மலைக்கோட்டை**

நாகர்கோவிலிருந்து 45 கட்டை (கிலோமீட்டர்) தொலைவில் இது அமைந்துள்ளது. இந்த கோயிலின் உள்ளும், புறமும் சமணச் சிற்பங்கள் ஏராளமாக உள்ளன. இந்த குகைக் கோயில் 13 ஆம் நூற்றாண்டில் பகவதி கோயிலாக மாற்றப்பட்டது. எனினும், கோயிலுக்குள் இருக்கும் தீர்த்தங்கரர்கள் மற்றும் உப தேவதைகளின் சிற்பங்கள் எவ்வித மாற்றமும் இன்றி அப்படியே பாதுகாக்கப்பட்டு வருகிறது. நூற்றாடண்டு பழமை வாய்ந்த இந்த சமண மதக் கோவிலில் மகாவீரர், மற்றும் 23 தீர்த்தங்கர்களின் சிலைகள் பாறைகளில் செதுக்கப்பட்டிருக்கின்றன. இந்த கோவில் தொல்பொருள் ஆய்வுத் துறையின் கட்டுப்பாட்டில் பராமரிக்கப்பட்டு வருகின்றது.

**சொத்தவிளை கடற்கரை**

நாகர்கோவிலுக்கு மிக அருகில் இக் கடற்கரை அமைந்துள்ளது. இது சுற்றுலா பயணிகளை அதிகம் கவர்ந்து வருகின்றது. அழகிய நீண்ட மணல் பரப்புடன் காட்சியளிக்கும் இக்கடற்கரையில் சிறு, சிறு குடில்கள் மூலம் தமிழக சுற்றுலாத்துறை அழகுப்படுத்தியுள்ளது. காட்சிக்கோபுரம், அழகிய புல் வெளிகள், சிறுவர் பூங்காக்கள் இக்கடற்கரையின் அருகில் அமைந்துள்ளன.

**திற்பரப்பு அருவி**



குலசேகரம் பகுதியிலிருந்து 5 கி.மீ தொலைவில் திற்பரப்பு என்ற ஊரில் உள்ளது. இது குமரிக் குற்றாலம் என்றும் அழைக்கப்படுகிறது. கோதை ஆறு விழுகின்ற இவ்விடத்தில் ஒரு சிவன் கோவில் உள்ளது. இக்கோவிலில் பாண்டியர்கள் குறித்த ஒன்பதாம் நூற்றாண்டுக் கல்வெட்டு உள்ளது. தக்கனின் வேள்வியை கலைத்தபிறகு வீரபத்ர மூர்த்தியாக சிவன் இங்கு அமைந்திருப்பதாக இந்து சமய நம்பிக்கை உள்ளது. கீழ்பகுதி வட்டமாகவும் மேல்புறம் கூம்பு வடிவிலும் இக்கோவில் அமைந்துள்ளது. கன்னியாகுமரி மாவட்டத்தின் முக்கிய சுற்றுலாத்தலங்களில் ஒன்றாக இவ்விடம் திகழ்கிறது.



**பத்மநாபபுரம் அரண்மனை**

கன்னியகுமரி மாவட்டத்தின் தக்களைக்கு அருகில் பத்மநாபபுரம் என்னும் சிறிய கிராமத்தில் உள்ள ஒரு அரண்மனை ஆகும். . இது கேரளாவின் திருவனந்தபுரம் நகரத்தில் இருந்து தமிழ்நாடு மாநிலத்தின் கன்னியாகுமரி நகரத்திற்குச் செல்லும் வழியில் அமைந்துள்ளது . தமிழகப் பகுதியில் அமைந்திருந்தாலும் கேரள தொல்பொருள் துறையினரால் பராமரிக்கப்பட்டு வருகிறது. இந்த அரண்மனையைச் சுற்றி 4 கி. மீ. அளவிற்கு கிரானைட் கற்களால் ஆன கோட்டை அமைந்துள்ளது. இது மேற்குத் தொடர்ச்சி மலைகளின் ஒரு பகுதியான வெள்ளி மலை அடிவாரத்தில் அமைந்துள்ளது.

**பெருஞ்சாணி அணை**

இது கன்னியாகுமரியிலிருந்து 85 கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. இவ்வணை 1948 இல் தொடங்கப்பட்டு 1958இல் கட்டி முடிக்கப்பட்டது. அப்போது 50 இலட்சம் ரூபாய் செலவில் கட்டப்பட்டது. இந்த அணையில் உண்டாக்கப்பட்ட நீர்த்தேக்கம் 33.34 சதுர மைல் பரப்பாகும். இந்நீர்த்தேக்கம் திருவனந்தபுரத்தின் தென்கிழக்கு, 58 கி.மீ. தொலைவிலும், குலசேகரம் என்னுமிடத்திலிருந்து 10 கி.மீ. கிழக்கிலும் எழிலுடன் அமைக்கப்பட்டுள்ளது. இந்த அணை மூலம் சுமார் 6000 ஏக்கர் நிலம் பாசனம் பெறுகிறது.

இவை தவிர விவேகாநந்தர் மண்டபம், தேங்காய்ப் பட்டணம் கடற்கரை, மாத்தூர் தொட்டிப்பாலம், மாம்பழத் துறையாறு அணை, முட்டம் கடற்கரை, முக்கடல்அணை, வட்டக்கோட்டை என பல்வேறு பகுதிகள் கன்னியாகுமரி மாவட்டத்தின் சுற்றுலாத் தளங்களாக உளளன. ஒரு வாரம் முழுவதும் இந்த இடங்களைச் சுற்றிப்பார்க்கலாம்.

உல்லாச பயணம்

# லிப்-லாக் காட்சிக்கு ஓகே



எதிர்நீச்சல், வணக்கம் சென்னை, அரிமா நம்பி, இரும்புக்குதிரை, ஒரு ஊர்ல ரெண்டு ராஜா படங்களைத் தொடர்ந்து ப்ரியாஆனந்த் நடித்துள்ள படம் வை ராஜா வை. இந்த படத்தில் ப்ரியாஆனந்த்தான் நாயகி என்றபோதும், இன்னொரு முக்கிய வேடத்தில் டாப்சியும் நடிக்கிறார். அதனால் அந்த படத்தை பெரிதாக எதிர்பார்க்கவில்லை ப்ரியாஆனந்த்.

மேலும், இதுவரை தான் நடித்த படங்களில் பெரும்பாலும் வளர்ந்து வரும் ஹீரோக்களுடனேயே நடித்துள்ள ப்ரியாஆனந்த், அடுத்து மேல்தட்டு ஹீரோக்களுடன் நடித்து விடவேண்டும் என்று தீவிரமாக முயற்சி எடுத்துக்கொண்டிருக்கிறார்.

முக்கியமாக மேல்தட்டு இயக்குனர்களிடம் சான்ஸ் கேட்பதோடு தன்னை வைத்து படம் இயக்கியவர்கள் முன்னணி ஹீரோக்களை இயக்கினால் வாய்ப்பு கேட்பது எளிது என்பதால் இப்போது அரிமா நம்பி படத்தை இயக்கிய ஆனந்த் சங்கர், அடுத்தபடியாக விக்ரமை வைத்து படம் இயக்குகிறார் என்று கேள்விப்பட்டு அவரிடம் ஹீரோயின் சான்ஸ் கேட்டுள்ளாராம் ப்ரியாஆனந்த்.

மேலும், கதைக்கும் காட்சிக்கும் அவசியப்பட்டால் கூடுதல் கிளாமர் சேவை புரியவும் தான் தயாராக இருப்பதாக கோடம்பாக்கத்தில் செய்தி கசிய விட்டிருக்கும் ப்ரியாஆனந்த், தேவையென்றால் லிப்-லாக் காட்சிகளில் நடிக்கவும் ரெடியாம். ப்ரியாஆனந்தின் இந்த அறிவிப்பு இதுவரை அவரை கண்டுகொள்ளாமல் இருந்த இயக்குனர்களுக்கு அவர் மீது ஈர்ப்பை ஏற்படுத்தி விட்டுள்ளது.

# அஜீத் சொன்னா விஜய் பாட்டு ஹிட்டுதான்

இதுவரை எந்த படத்திலும் பின்னணி பாடியதில்லை அஜீத். அதனால் விஜய் பாடுவதை அவர் ரொம்பவே ரசித்து வருகிறார். ஆரம்பத்தில் இருந்தே விஜய் பாடல்களை விரும்பிக்கேட்டு வரும் அஜீத், தலைவா படத்தில் விஜய் பாடிய வாங்கண்ணா வணக்கங்ண்ணா பாடலையும், தற்போது கத்தி படத்துக்காக விஜய் பாடியுள்ள செல்பிபுள்ள பாடலையும் கேட்டு விஜய்யின் குரலில் இளைஞர்களை சுண்டியிழுக்கு வசீகரம் உள்ளது என்று கூறியுள்ளாராம்.

ஏற்கனவே வாங்கண்ணா வணக்கங்ண்ணா பாடலை கேட்டபோது இந்த பாட்டு கண்டிப்பாக ஹிட்டாகும் என்று சொன்ன அஜீத், இப்போது செல்பிபுள்ள பாடலைக்கேட்டும் இதுவும் ஹிட்டாகும் என்று கூறினாராம். அதையடுத்து இந்த பாடலும் ஹிட்டாகி விட்டதால் தலயின் வாய் முகூர்த்தம் பலித்து விட்டது என்கிறார்கள் கத்தி யூனிட்டினர்.

# 'லிங்கா'வில் த்ரிஷா



தமிழில் உள்ள எந்த ஹீரோயினைக் கேட்டாலும் அவர்களுடைய ஆசையாக ரஜினிகாந்துடன் சேர்ந்து நடிக்க வேண்டும் என்று சொல்வார்கள். அது இன்றைய புதுமுக ஹீரோயின்களின் ஆசையாகவும் இருக்கிறது.

ஆனால், திரையுலகில் பத்து வருடங்களுக்கும் மேலாக இருந்து வரும் த்ரிஷாவிற்கு மட்டும் அந்த ஆசை நிறைவேறாமலே இருக்கிறது. கமல்ஹாசனுடன் 'மன்மதன் அம்பு' படத்தில் கூட அவர் ஜோடி சேர்ந்து விட்டார். ஆனால், என்னமோ ரஜினிகாந்துடன் மட்டும் அவரால் ஜோடி சேரவே முடியவில்லை.

இதனிடையே 'லிங்கா' படத்தில் ஒரு பாடலுக்கு த்ரிஷா நடனமாட உள்ளார் என்ற செய்தி வேகமாகப் பரவி வருகிறது. சம்பந்தப்பட்டவர்கள் ஒரு பாடலுக்கு நடனமாட த்ரிஷாவை அழைத்தார்களாம்.

ஆனால், ரஜினியுடன் ஜோடியாக மட்டுமே நடிக்க வேண்டும் என்று ஆசைப்பட்டு வரும் த்ரிஷா அந்த வாய்ப்பை மறுத்துவிட்டார் என்றும் சொல்கிறார்கள். இருந்தாலும் த்ரிஷா அப்படி நடிப்பதில் தவறில்லை என்றும் சிலர் கருதுகிறார்கள். ஏனென்றால் ரஜினியுடன் ஜோடியாக நடித்த நயன்தாரா கூட அதன் பின் 'குசேலன்' படத்தில் ஒரு பாடலுக்கு நடனமாடியிருக்கிறார் என்கிறார்கள்.

சிறிய படங்களில் அப்படி ஒரு பாடலுக்கு நடமாடினால்தான் கௌரவக் குறைச்சலாக இருக்கும். ஆனால், ரஜினிகாந்த் போன்ற உச்ச நட்சத்திரத்தின் படங்களில் நடிப்பது சம்பந்தப்பட்ட நடிகைகளுக்கு கௌரவத்தைத்தான் கொடுக்கும் என்றும் அவர்கள் சொல்கிறார்கள்.

இப்போது முன்னணி நடிகைகள் பலரும் ஒரு பாடலுக்கு நடனமாடுவதை ஒரு ஃபேஷனாகவே மாற்றிவிட்ட நிலையில், அதெல்லாம் தற்போது பெரிய விஷயமாகவே பார்க்கப்படுவதில்லை என்கிறார்கள். அதனால், த்ரிஷா விரைவில் அதற்கு சம்மதம் தெரிவிக்கலாம் என்றும் சொல்கிறார்கள்.

# அட்டக்கத்தி காட்டில் அடை (பட) மழை

''அட்டக்கத்தி'' படத்தில் ஆர்ப்பாட்டமே இல்லாமல் அறிமுகமான தினேஷின் கையில் இப்போது 5 படங்கள் இருக்கிறது. குக்கூ படத்தில் அவர் பார்வையற்ற இளைஞனாக நடித்திருப்பதால் விருதுகள் ஒரு பக்கம் காத்துக் கொண்டிருக்க, மறுபக்கம் கையில் 7 படங்கள். அடுத்து ரிலீசாகபோவது வாராயோ வெண்ணிலாவேவா, திருடன் போலீசா என்று ரிலீசுக்கு ரெடியாக இருக்கிறது.

அடுத்து தனுஷ் தயாரிப்பில், வெற்றி மாறன் இயக்கத்தில், விசாரணை என்ற படத்தில் நடிக்கிறார். இதனை தன் கேரியரில் முக்கியமான படமாக நினைக்கிறார்.

அடுத்து வெற்றிமாறன் தயாரிப்பில், ராஜ்குமார் இயக்கத்தில், அண்ணனுக்கு ஜே



தெரியவில்லை.

இதில் தினேஷ் வாராயோ வெண்ணிலாவே பற்றி அதிகம் பேசுவதில்லை. அடுத்து தமிழுக்கு எண் ஒன்றை அழுத்தவும் படத்தையும் முடித்து விட்டார். திருடன் போலீஸ் சமீபத்தில் முடிந்திருக்கிறது. ஆக 3 படங்கள் என்ற படத்தில் நடிக்கிறார். அடுத்து உள்குத்து என்ற படத்திலும், திருடன் போலீஸ் பட டீமின் அடுத்த படத்திலும் நடிக்க ஒப்பந்தமாகியிருக்கிறார். இப்படி 7 படங்களுடன் தினேஷ் காட்டில் பட மழையும், பண மழையும் கொட்டிக் கொண்டிருக்கிறது.

# டிசம்பரில் துவங்குகிறது ஐஸ்வர்யாவின் 'ஜாஸ்பா' படம்

குழந்தை பெற்றபின் நடிக்காமல் இருந்து வந்த ஐஸ்வர்யா ராய், இப்போது ஒரு படத்தில் நடிக்க சம்மதம் சொல்லியுள்ளார். அது சஞ்சய் குப்தா இயக்கும் ஜாஸ்பா படம். இப்படத்தில் ஐஸ்வர்யாவுடன், இர்பான் கான் முக்கிய ரோலில் நடிக்கிறார். முன்னதாக இப்படத்தின் ஷூட்டிங் இம்மாதம் துவங்குவதாக இருந்தது.

ஆனால் தற்போது சஞ்சய் குப்தா இயக்கி வரும் மும்பை சகா படத்தின் படப்பிடிப்பு இன்னும் முடியாததால் ஜாஸ்பா படத்தின் படப்பிடிப்பு தள்ளிபோய் உள்ளது.

இதுப்பற்றி விசாரித்ததில், மும்பை சகா படத்தில் நடிக்கும் ஜான் ஆபிரஹாம், வெல்கம் பேக் என்ற படப்பிடிப்பில் பிஸியாக இருப்பதால் இப்படத்தின் ஷூட்டிங்கில் பங்கேற்க முடியாத சூழல் உள்ளதாம்.

இதனால் மும்பை சகா படத்தின் ஷூட்டிங் தாமதமாவது டன், ஜாஸ்பா படத்தின் ஷூட்டிங்கும் தாமதமாகியுள்ளதாம். இருந்தாலும் டிசம்பரில் ஜாஸ்பா படத்தின் ஷூட்டிங் உறுதியாக ஆரம்பமாகும் என்று கூறியிருக்கிறார் இயக்குநர் சஞ்சய் குப்தா.



# எனக்கு திருமணம் என்று வதந்தி பரப்புவதா?

அஞ்சலியும் ஐதராபாத்தைச் சேர்ந்த தொழில் அதிபர் ஒருவரும் காதலிப்பதாக செய்திகள் பரவின. இருவருக்கும் விரைவில் திருமணம் நடக்க இருப்பதாகவும் கூறப்பட்டது.

அஞ்சலி தற்போது சுராஜ் இயக்கும் தமிழ் படத்திலும், கன்னட படமொன்றிலும் நடித்து வருகிறார். இந்த படங்களை முடித்து விட்டு திருமணம் செய்து கொண்டு 'செட்டில்' ஆகப்போகிறார் என்றனர்.

இதனை அஞ்சலி மறுத்துள்ளார். அவர் கூறியதாவது:-

எனக்கு திருமணம் என்று தொடர்ந்து செய்திகள் பரவி வருகிறது. இதில் உண்மை இல்லை. எங்கிருந்து இந்த வதந்திகள் கிளம்புகின்றன என்று எனக்கு தெரியவில்லை. எனக்கு வயது ஆகி விடவில்லை. சினிமாவில் இன்னும் நிறைய சாதிக்க விரும்புகிறேன். என்னை விட வயது அதிகமான மூத்த நடிகைகள் பலர் திருமணம் செய்து கொள்ளாமல் இருக்கிறார்கள். சினிமாவிலும் நடித்துக் கொண்டு இருக்கிறார்கள். இந்த நிலையில் நான் ஏன் அவசரமாக திருமணம் செய்து கொள்ள வேண்டும்.

இவ்வாறு அவர் கூறினார். அஞ்சலி குறிப்பிட்ட திருமணமாகாத மூத்த நடிகைகள் என்பது அனுஷ்கா, ஸ்ரேயா, திரிஷா, நயன்தாரா என கிசுகிசுக்கப்படுகிறது.

## பாரிய கிறேன் மூலம் பொருத்தப்பட்ட றிச்மன்ட் ஹில் ஆலய உச்சிக் கோபுரம்!



கனடாவின் றிச்மன்ட் ஹில் விநாயகர் ஆலய உச்சிக் கோபுரங்கள் இரண்டு செவ்வாய்க்கிழமை மாலை பாரிய "கிறேன்" மூலம் தூக்கிப் பொருத்தப்பட்டது. ஆலய நிர்வாக சபை உறுப்பினர்கள்,அடியார்கள் அனைவரும் ஆவலுடன் பார்த்து கர கோஷம் செய்து தமது மகிழ்ச்சியை தெரி வித்துக் கொண்டனர்.

றிச்மன்ட் ஹில் ஆலயத்தில் விநாயகர், முருகன், விஷ்ணு ஆகிய மூன்று மூல மூர்த்திகள் எழுந்தருளி உள்ளனர்.

விநாயகருக்கான கோபுரம் ஏற்கனவே பூர்த்தி செய்யப்பட்டிருந்தது. முருகப் பெருமானுக்கும், விஷ்ணு பகவானுக்கும் புதிய கோபுரங்கள் கட்டப்பட்டன.

அவ்விரு கோபுரங்களினதும் உச்சிக் கோபுரங்கள் நீண்ட காலமாகப் பொருத்தப் படாதிருந்தன. நேற்றைய தினம் தான் அவை பொருத்தப்பட்டுள்ளன.

ஒரு மணி நேரத்தினுள் இரண்டு உச்சிக்கோபுரங்களும் தூக்கிப் பொருத்தப் பட்டன. அவற்றின் உச்சியில் கோபுரக் கலசங்கள் பொருத்தும் பணி தான் எஞ்சி இருக்கின்றது. அவை கும்பாபிஷேகத்தின் போது பொருத்தப்படும் என ஆலய பரிபாலன சபைத் தலைவர் திரு. அம்பிகாபதி மாணிக்கவாசகர் கூறினார்.

தற்போதைய செயலாளர் திரு.கிதம்பிராஸ், பொருளாளர் திரு.சூசா எந்தன் ஆகியோருட்பட மற்றும் இவ்வாலயம் 1985 ஆம் ஆண்டு கட்டப்பட்ட போது அத்திருப்பணியில் முக்கிய பணியாற்றிய தென் ஆபிரிக்காவைச் சேர்ந்த திரு.ராமானுஜம்பிள்ளை சுப்பிரமணியம், பரிபாலன சபையின் முன்னாள் தலைவர்களான டாக்டர் சண்முகதாஸ் கந்தையா, திரு.விக்னேஸ்வரன், திரு.இராசதுரை, திரு.செகராசசிங்கம் ஆகியோரும் இவ்வைபவத்தில் கலந்து கொண்டிருந்தனர்.




விஸ்கோஸ் ரகத் துணியில் ஆன இந்த நீளக்காற்சட்டை, அதன் வித்தியாசமான அச்சு வடிவத்தால் தனித்துத் தெரிகிறது. 80களின் 'எலிஃபன்ட் பொட்டம்' வகையில் வடிவமைக்கப்பட்டுள்ள இந்தக் காற்சட்டை அணிவதற்கு வசதியானது. அதேநேரம், விஸ்கோஸ் துணி என்பதால் கால்களிலும் சூடு தங்காது. எப்போதும் உங்கள் கால்களைக் குளிர்ச்சியாக வைத்திருக்கும்.

பெண் உடலை மைய மாக வைத்து வடிவமைக்கப் பட்டுள்ளது பெண்களுக்கான இந்தப் புதிய கைப்பை. பார்த்த மாத்திரத்தில் கவர்ந்திழுக்கும் இந்தக் கைப்பையின் மெல்லிய கைப் பிடிகள் உயரம் குறைவாக இரு ப்பதனால், அக்குளுக்குள் அடங்கி விடும். இரண்டு பகுதிகளைக் கொண்ட இக்கைப்பை அலைபேசி மற்றும் அழகுச் சாதனப் பொருட்களை மட்டுமே வைத் துக்கொள்ளலாம்.

ஒளிர் பச்சை நிறங்களிலான கற்களைக் கொண்ட இந்த ஆபரணத் தொகுதி, செப்பினால் ஆனது. கூம்பு வடிவக் காத ணிகளும், 'U' வடிவக் காதணிகளும் இரு வேறு தோற்றத்தைத் தரும். இத்தொகுதியில் அடங்கியுள்ள நெக்லஸ் பின்கழுத்தில் வரக்கூடியவாறு தடித்த செப்புக் கம்பிகளின் முகப்பில், சதுரவடிவ, சற்று அகலமான வெள்ளை மற்றும் மஞ்சள் கற்கள் கொண்டு வடிவமைக்கப்பட்டுள்ளன. நெக்லஸ் முகப்பு நுனியில் தொங்கும் கூர் வடிவப் பச்சைக் கற்கள் ஒரு புது அழகைத் தருகின்றன. பண்டைய கிரேக்க நாகரிகத் தோற்றத்தில் அமைந்துள்ள ஒரு ப்ரேஸ்லட்டும் இதில் அடங்குகிறது. இந்த ப்ரேஸ்லட் சற்று அகலப் பட்டையுடையதாகவும், கீழ் நுனியில் இறுக்கமான சங்கிலியும் பிணைக்கப்பட்டதாகும். வேறு எந்த ஆபரணத்திலும் இல்லாத ஒரு விசேட அம்சம் இந்த ஆபரணத் தொகுதியில் உள்ளது. அது என்னவென்றால், இதில் அடங்கியுள்ள அனைத்து ஆபரணங்களும், இருட்டிலும் ஒளிரக்கூடிய ரேடியம் கொண்டு அமைக்கப்பட்டுள்ளது என்பதே.

வறண்ட சருமம் கொண்டவர்க ளுக்குப் புத்துணர்ச்சியூட்டும் ஜெல் இது . 'டார்ட்டே' எனும் அழகு சாதனப் பொருள் உற்பத்தி நிறுவனத்தினால் வெளியிடப்பட்டிருக்கும் 'ஃபெஷன்ப்ருட்' எண்ணெய் மற்றும் சூரியகாந்தி எண்ணெய் அடங்கிய இந்த ஜெல், முகத்தில் தடவியதும் தானாகவே ஈரப்பதம் பெறுகின்றது. அத்துடன் சருமத்திற்குப் புதுப்பொலிவையும் ஈரப்பதத்தையும் தந்து, உங்கள் முகத்தைப் புத்துணர்ச்சியாகவே வைத்திருக்கிறது. அதேநேரம், முகத்தில் பிசு பிசுப்புத் தன்மையும் தராது.

கறுப்பு நிறப்பிரியையாநீங்கள்? அப்படியானால், இது முழுக்க முழுக்க உங்களுக்கே உரித்தானது. 'கார்ல் லாகர்ஃபெல்ட்' எனும் நிறுவனம், புத்தம் புதிதாகச் சந் தையில் இறக்கியிருக்கும் கைக் கடி காரமே இது. கடிகாரத்தின் கொள் கலனே பிரமாதமாக இருக்கிறது. அட்டகாசமான, தடித்த கருநிறப் பட் டையில், கருநிற முகப்பில், கருநிற எண் குறிகள், கருநிற முட்கள் என அனைத்தும் கருமை நிறத்தினாலேயே வடிவமைக்கப்பட்டுள்ளன. கருமை நிறம் தான் என்றாலும், எளிதாக நேரம் பார்க்கும் வகையில் வடிவமைக்கப்பட்டுள்ளது. சுறுசு றுப்பானவர்கள் அணியப் பொருத்தமானது இந்தக் கறுப்புக் கைக்கடிகாரம்.

வெள்ளை உடை யிலும் வசீகரிக்கலாம் என்பதை நிரூபிக்கும் ஜீன்ஸ் மற்றும்டொப்செட் இது. இன்றையநவநாகரீகத்திற்கேற்ற வகையில் முழங்கால் பகுதியில் சிறு வெட்டுக்கள் கொண்ட இந்த ஜீன்ஸ் கணுக்கால் வரை நீள்கிறது. இதன் மேற்புறச் சட்டை உட்சட்டை மற்றும் வெளியே 'நெற்' ரக பெனியன் போன்ற அமைப்புடையது. மெலிந்த உடல்வாகு கொண்டவர்களுக்குக் கச்சி தமாகப் பொருந்தும்.

நீலக் கற்றாழைச் சாறுடன் மேலும் பல இயற்கை எண்ணெய் வகைகள் அடங்கிய இந்த ஷம்பூ, கூந்தலுக்கு நல்ல வலுக் கொடுப்பதுடன், சூட்டையும் தணிக்குமாம். இதனால், வறண்ட கூந்தல் கொண்ட பெண்களுக்கு இது நல்ல பலனை அளிக்கும்.

உலகப் பிரபலமிக்க 'லோஃப்ளர் ரெண்டல் ட்ரீ நிறுவனம், 'பபிள் கம்' என்ற பெயரில் உருவாக்கியிருக்கும் புதிய வகை சென்டல்ஸ் இது. மிருதுவான, அகலமான மேற்புறப் பட்டைகள், கண்களுக்குக் குளிர்ச்சியான வர்ணங்களில் அமைந்து, அணிந்து கொள்ளும்பாதங்களுக்குமிருதுத்தன்மையை வழங்கும் அதேவேளை, பின்புறப் பட்டி உறுதியாகவும் இருப்பதனால் நடப்பதற்கு ஏற்ற பிடிமானத்தையும் வழங்குகிறது.

# நான்தான் கெஜ்ரிவால்! - சாருலதா மணி



கர்நாடக இசை, திரையிசை என இரட்டைக் குதிரைகளில் லாவகமாகச் சவாரி செய்யும் திறமைசாலி. கர்நாடக சங்கீதத்தினை அனைவரும் புரிந்து கொள்ள வேண்டும். அதனை அனைத்துத் தரப்பினரும் அறிந்து கொள்ள வேண்டும் என்று பாடுபடுவர் இவர். தனியார் வானொலி, தொலைக்காட்சிகளில் நிகழ்ச்சிகளைத் தொகுத்து வழங்கியுள்ளார். புதிய வித்தியாசமான முயற்சிகளில் தன்னை அதிகம் ஈடுபடுத்திக் கொள்பவர் இவர். உலகம் முழுவதும் பறந்து பறந்து நிகழ்ச்சிகளை வழங்கிவரும் இவர் தனது கருத்தை கொஞ்சம் கூட தயக்கமின்றி எடுத்துரைப்பவர். இரட்டைக் குழந்தைகளின் தாயான சாருலதா மணி ஒரு தொழில்நுட்பக் காதலர். கிண்டி அண்ணா பல்கலைக்கழகத்தில் மெக்கானிகல் எஞ்சினியரிங் முடித்துள்ளார். கர்நாடக சங்கீதத்தின் மீதுள்ள ஆர்வத்தால் சென்னை பல்கலைக்கழகத்தில் இசையில் முதுகலைப் பட்டமும் பெற்றுள்ளார். ஒரு காலை வேளையில் அவரது இல்லத்தில் நாம் சந்தித்தபோது....

***• உங்களது இசைப் பயிற்சி ஆரம்பித்தது எப்போது?***

நான் முதன்முதலில் இசையைக் கற்றுக் கொள்ள ஆரம்பித்தது எனது தாயார் திருமதி. ஹேமலதா மணி அவர்களிடம் இருந்துதான். அம்மா, வீணை சிட்டிபாபு சாரின் சிஷ்யை. ரொம்ப நல்லா வீணை வாசிப்பாங்க. அவங்க வாசிக்கிறதைக் கேட்டு வளர்ந்ததனால் எனக்கும் இசையில் ஆர்வம் ஏற்பட்டது. எனது ஏழாவது, திரு. சந்தியாவந்தனம் ஸ்ரீனிவாசராவ் அவர்களுடைய மகன் திரு. பூர்ணம் பிரகய ராவ் அவர்களிடம் முறைப்படி கர்நாடக சங்கீதம் கற்றுக் கொள்ள ஆரம்பித்தேன். மிகச் சிறந்த இசைப் பரம்பரையில் வந்தவர் அவர். அவரிடம் கற்றுக் கொண்டதால் சுத்தமான பாடாந்திரங்கள் கிடைத்தன. ராகபாவம், கமகங்கள், ஒவ்வொரு ராகத்திற்கும் என்னென்ன சிறப்பு, எப்படி ஒரு ராகத்தை 15 விநாடிகளில் அடையாளப்படுத்துவது போன்ற பல சூட்சுமங்களைக் கற்றுக்கொண்டேன். அதேபோல கல்கத்தா கிருஷ்ணமூர்த்தி சாரிடமிருந்து கர்நாடக இசையின் பல்வேறு நுணுக்கங்களைக் கற்றுக் கொண்டேன். இன்னொரு குரு திருமதி. சாவித்திரி சத்தியமூர்த்தி அவர்கள். இவர் திரு.எஸ். ராமநாதன் அவர்களின் சிஷ்யை. இவர் மூலம் கிருதிகள் எப்படிக் கொடுக்க வேண்டும், எப்படி ஸ்வரம் பாட வேண்டும், நிரவல் பாவத்தோடு எப்படிப் பாடுவது இந்த மாதிரி விஷயங்களைக் கற்றுக் கொண்டேன்.

எனது வளர்ச்சியில் பெரும்பங்கு எனது குருக்களுக்குத்தான். நமக்குள் இருக்கும் திறமையை அடையாளம் கண்டு கொண்டு அதை வெளிக்கொண்டு வருவது குருமார்கள்தான். நல்ல குருமார்கள் அமைவது நாம் செய்த புண்ணியம்.

***• எப்போதும் ஏதாவது புதிய முயற்சிகள் வித்தியாசமாகச் செய்வதேன்?***

எனக்கு எப்போதுமே ஏதாவது புதுசா செய்ய வேண்டும் என்று தோன்றும். யாரும் செய்யாததை நாம் செய்து பார்க்கவேண்டும் என்ற எண்ணம் உண்டு. என்னுடைய உடை, படிப்பு எல்லாவற்றிலுமே வித்தியாசமாக இருக்க வேண்டும் என்று எண்ணினேன். நம்முடைய தனித்தன்மையை எப்படி வெளிப்படுத்தலாம் என்ற கேள்வி என்னுள்ளே கேட்டுக் கொண்டே இருக்கும். அந்தக் கேள்விக்கான விடைதான் எனது வாழ்க்கையில் ஒவ்வொரு விஷயத்திலும் வெளிப்படுகிறது.

நாம் வித்தியாசமாக இருப்பது, நமக்கும் சரி, மற்றவர்களுக்கும் சரி பயனுள்ளதாக இருக்க வேண்டும். பைத்தியக்காரத்தனமாக இருக்கக்கூடாது. நாம் புதிதாகச் செய்வதை சந்ததிகள் அடையாளம் கண்டுகொள்ள வேண்டும். அதனால் அவர்கள் பயனடைய வேண்டும் என்பது எனது எண்ணம்.

***• கர்நாடக சங்கீதம் இன்றைய சூழ்நிலையில் எப்படி இருக்கு?***

உண்மையைச் சொல்ல வேண்டுமென்றால் கர்நாடக சங்கீதத்தை நாம் நாலு சுவர்களுக்குள்ளே தான் வைத்திருக்கிறோம். கர்நாடக சங்கீதம் பாமரனுக்குப் புரியாது. இருந்தாலும் நீங்களும் கேளுங்கள் கேட்டால் புண்ணியம் என்று தலையில் தட்டி வைக்கிறார்கள். அதுதான் இன்றைய கர்நாடக சங்கீத வித்வான்களின் ஸ்டைல்.

ஆனால் அந்தக் காலத்தில் அப்படி இருந்ததில்லை. மதுரை மணி ஐயர் அவர்களோட கச்சேரியை ரிக்ஷா இழுக்கும் தொழிலாளிகூட கேட்டு ரசித்துள்ளார்.

ஐயர் கல்பான ஸ்வரம் பாடி முடித்தால்தான் ரிக்ஷாவை எடுப்பேன் என்று சொல்லும் அளவுக்கு இசையை அப்போது கீழ்த்தட்டு மக்களுக்கும் கொண்டு சேர்த்திருக்கிறார்கள். ஆனால் இப்போதோ சபாக்களுக்குள் நாலு சுவத்துக்குள்ள நடக்கிற வித்தையாகத்தான் உள்ளது. இசைக்குத் தடைகளே கிடையாது. எல்லோருக்கும் சமமானது தான். எம்.எஸ். சுப்புலெட்சுமி அம்மா ரயிலில் பயணம் செய்யும்போது சாதாரண சகப் பயணிகளுக்காகப் பாடியுள்ளார். எளிமைதான் கர்நாடக சங்கீதம், பகட்டு இல்லை என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். இன்றோ ஞானத்தின்பால் பகட்டைக் காட்டுகின்றனர்.

நம்மிடம் ஞானம் இருந்தால் அதை மற்றவர்களும் அறிந்து கொண்டு பயன்பெறும் விதத்தில் வெளிப்படுத்த வேண்டும். என்ன சொல்கிறோம், எப்படிச் சொல்கிறோம் என்பதைத்தான் மக்கள் புரிந்து கொள்வார்கள். கர்நாடக இசையில் ஓர் ஆம் ஆத்மி பார்ட்டி என்றால் நான்தான் கெஜ்ரிவால்.

அடுத்தது கிருதிகள், தியாகராஜ கீர்த்தனைகள் பாடுகிறோம். அர்த்தத்தை இரண்டு வார்த்தைகளில் சொல்லிப் பாடினால் என்ன குறைந்துவிடும். தமிழ் பேசத் தெரிந்தவர்கள்தானே அத்தனை வித்வான்களும். ஏன் வீணாகப் பந்தா பண்ண வேண்டும். ஆனால் நான் தியாகராஜ கீர்த்தனைகள் பாடும்போது, அதன் கருத்தைச் சொல்லாமல் பாடுவதில்லை. பார்வையாளர்களின் பெரும்பகுதியினருக்கு அர்த்தம் தெரியாது. அதை நாம் சொல்லி புரிய வைக்க வேண்டும்.

சிலர் கேட்கலாம் அர்த்தம் புரிந்துதான் கீர்த்தனைகளைக் கேட்க வேண்டுமா? என்று. நான் கேட்கிறேன். அர்த்தம் புரிந்து கேட்பதால் என்ன தப்பு. ரசிகர்களுக்கும் இருக்கு ரைட்ஸ் டூ இன்ஃபர்மேஷன். அர்த்தம் சொல்லிப் பாடுவதில் தப்பே இல்லை. நான் அப்படித்தான் பாடுவேன். இதை பாசிட்டிவாக எடுத்துக் கொள்பவர்களும் உண்டு. விமர்சிப்பவர்களும் உண்டு. ஒவ்வொருவருக்கும் அர்த்தத்தை தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வம் உள்ளது. ரசிகர்களுக்கு புரியும்விதத்தில் விளக்கம் கொடுத்தால் அவர்கள் மனதில் அந்தக் கீர்த்தனை, ராகம், பொருள் எல்லாம் எளிதாகப் பதிந்துவிடும். இதனால் கர்நாடக சங்கீதத்திற்கு நன்மைதானே தவிர, வேறு இல்லை. அப்படிச் செய்யவில்லை என்றால் எல்லாமே கொஞ்சம் கொஞ்சமாக அழிந்துக் கொண்டே வரும். அதனால்தான் நான் ஒவ்வொரு கீர்த்தனைக்கும் விளக்கம் கொடுத்து பாடுகிறேன். அதுவும் மக்களிடத்தில் நல்ல வரவேற்பைப் பெற்றுள்ளது.

***• உங்களது இசைப்பயணம் என்ற கான்செப்ட் பற்றி கொஞ்சம் சொல்லுங்கள்?***

இராகங்களை எளிதில் அடையாளம் கண்டுகொள்ள உதவும் ஓர் அணுகுமுறைதான் இசைப்பயணம். சங்கீதமே தெரியாத ஒரு நபர் இந்த இசைப் பயணம் கேட்டு சங்கீதத்தின் மீதும் இராகங்களின் மீது ஈடுபாடு கொள்ள வைப்பதுதான் இசைப் பயணத்தின் பணி.

இன்றைய சூழ்நிலையில் இசையை ஒரு சிறிய வட்டத்திற்குள் அடக்கிவிட்டனர். அதனால் ஏதாவது வித்தியாசமாகச் செய்ய வேண்டும் என்று எனக்குத் தோன்றியது. அப்படித் தொடங்கியதுதான் 'இசைப் பயணம்'. ஜெயா டி.வி.யில்தான் முதலில் ஆரம்பித்தோம். ஒரு கர்நாடக சங்கீத ராகத்தை எடுத்துக் கொண்டு அதில் ஒரு பாடலை உருக்குலையாமல் பாடிவிட்டு அதே ராகத்தில் அமைந்த திரையிசைப் பாடல்கள் என்னென்ன என்று விளக்கினேன். வருடக் கணக்கில் பல நிகழ்ச்சிகள் ஒளிபரப்பானது. அந்த நிகழ்ச்சி மக்களுக்கும் பிடித்துப் போனது. எனது முயற்சிக்குக் கிடைத்த மிகப் பெரிய வெற்றியும் கூட.

இந்த முயற்சியை அப்படியே கச்சேரிகளாகவும் செய்ய ஆரம்பித்தேன். இந்தக் கச்சேரிகளின் வீடியோ யூ டியூப் சேனல்ல மிகவும் பிரபலமடைந்துள்ளது. எனக்கு அதிகம் ரசிகர்களைப் பெற்றுத்தந்துள்ளது. பைரவி ராகம் சம்பந்தமாக உள்ள வீடியோவினை இதுவரை எண்பதாயிரம் பேர்களுக்க மேல் பார்த்துள்ளனர். அதுதான் அந்த கான்செப்டுக்குக் கிடைத்த வெற்றி. இசைப்பயணம் கச்சேரிக்கு உலகம் முழுவதும் நல்ல வரவேற்பு கிடைத்துள்ளது. மிகுந்த மகிழ்ச்சியைத் தருகிறது.



***• உங்களது திரையுலகப் பிரவேசம் பற்றி....***

நான் எப்போதுமே கொஞ்சம் துணிச்சலாக செயல்படக் கூடியவள். மற்றவர்கள் சொல்கிறார்கள் என்பதற்காக எதையும் செய்யவும் மாட்டேன். செய்யாமல் இருக்கவும் மாட்டேன். எனது மனதிற்கு எது சரி என்று தோன்றுகிறதோ அதைத் தான் செய்வேன். நியாயமானவற்றைத்தான் செய்வேன். நான் செய்ததில் நியாயம் இல்லை என்றால் மற்றவரகளின் கருத்தையும் ஏற்றுக் கொள்வேன்.

சினிமாவில் பாட வேண்டும் என்ற எண்ணம் உள்ளுக்குள் இருந்தது. அந்த நேரத்தில்தான் ஜெயா டி.வி. நிகழ்ச்சி பார்த்துவிட்டு இசையமைப்பாளர் விஜய் ஆன்டெனி சார் 'நான் அவன் இல்லை' படத்தில் 'காக்கக் காக்க' என்ற ரேவதி ராகத்தில் அமைந்த பாடலைப் பாடும் வாய்ப்பினை தந்தார். அந்தப் பாட்டும் நல்ல ஹிட்டானது. அதன் மூலம் வேறொரு புகழ் வந்து சேர்ந்தது. அதனைத் தொடர்ந்து நடிகர் விஜய் படங்களான வேட்டைக்காரன், வேலாயுதம், நடிகர் சூர்யா நடித்த மாற்றான் ஆகிய படங்களில் பாடும் வாய்ப்புகள் கிடைத்தன. இப்போது அண்மையில் வெளிவந்த திருமணம் எனும் நிக்காஹ் படத்தில் 'கண்ணுக்குள் பொத்தி வைப்பேன்' என்ற பாடல் நல்ல வரவேற்பை பெற்றுத் தந்துள்ளது.

முகாரி, அமீர்கல்யாணி ராகங்களில் அமைந்த இந்தப் பாடல் ஜிப்ரான் இசையில் அமைந்த சிறந்தபாடல். நல்ல ராகம் அமைந்தால் இங்கு தெய்வம் வந்துவிடும். தெய்வம் வந்துவிட்டாலே அழகுதானே. அப்படி மிக அழகாக அமைந்த பாடல் அது.

***• வித்தியாசமான ரசிகர்கள் யாராவது உள்ளார்களா?***

நிறைய ரசிகர்கள் வித்தியாசமானவர்கள். மறக்க முடியாத நெகிழ்ச்சியான சந்தர்ப்பம் என்று பார்த்தால் இரண்டு சம்பவங்கள் சொல்லலாம். ஒருமுறை அமெரிக்காவில் கச்சேரி முடிந்ததும் ஒரு பெண்மணி ஆனந்தக் கண்ணீர் வழிய தனது கையிலிருந்த வளையலைக் கழட்டி எனக்குப் போட்டார். நான் எவ்வளவோ மறுத்தும் அவர் கேட்கவில்லை. அவங்களோட பெயர் கூட எனக்குத் தெரியாது. நியூயார்க் கச்சேரியின்போது ஒருமுறை ஒரு வயதானவரை சக்கர நாற்காலியில் வைத்துக் கூட்டிக் கொண்டு வந்தார்கள். அவரால் நடக்க முடியாது, பேசமுடியாது ஆனால் கேட்க முடியும் 500 கிலோ மீட்டர்களுக்கு மேல் பயணம் செய்து எனது கச்சேரிக்க வந்துள்ளார் என்று அவரது மகள் சொன்னபோது மிகவும் நெகிழ்ச்சியாக இருந்தது.

சாருலதா மணி, கல்யாணப் பாடல்கள், கனகதாரா ஸ்தோத்திரம், சௌந்தர்யலஹரி, அபிராமி அந்தாதி போன்றவற்றைத் தானே இயைமைத்து ஆல்பமாக வெளியிட்டுள்ளார். அடுத்ததாக ஸ்ரீ வெங்கடேச சுப்ரபாதத்தினையும் இசையமைத்துப் பாடி வெளியிட உள்ளார். உலகின் பல்வேறு இசைகளையும் விரும்பி கேட்டு மகிழும் இவருக்கு மேற்கத்திய இசையை முறைப்படி கற்றுக் கொள்ள வேண்டும் என்று ஆசையும் உள்ளது. கீபோர்ட் கற்றுக் கொள்ளும் தனது குழந்தைகள் தனக்க மேற்கத்திய இசையின் அடிப்படைகளை சுட்டிக் காட்டுவதை பெருமையுடனும் நெகிழ்வுடனும் கூறுகின்றார். தனக்கு நேரம் கிடைக்கும்போதெல்லாம் தனது குழந்தைகளுடன் நேரம் செலவழிப்பதையே அதிகம் விரும்புகிறார். தனது இசைப் பயணத்திற்கு தனது கணவரும் குடும்பத்தினரும் மிகவும் பக்கபலமாகவும் உதவியாகவும் உள்ளதாகவும் கூறி மகிழ்கிறார் சாருலதா மணி.

***நன்றி: இணையம்***

## சிதம்பர கலை மன்ற மாணவிகளை கௌரவித்த ரொறண்டோ மேயர் வேட்பாளர் டக் போட்



கனடா ஐயப்பன் ஆலய பழைய மண்டபத்தில் கடந்த 27.09.2014 சனிக்கிழமை மாலை திருமதி கௌரி பாபுவின் சிதம்பர கலை மன்ற மாணவிகளுக்கு பரிசளிப்பு விழா நடாத்தப்பட்டது.

நவராத்திரி விழாக் காலத்தின் போது நடாத்தப்பட்ட இப்பரிசளிப்பு வைபவத்தில் ரொறண்டோ நகர சபையின் மேயர் பதவி வேட்பாளரான திரு.டக் போட் பிரதம விருந்தினராகக் கலந்து கொண்டு பரிசில்களை வழங்கினார்.

பரிசளிப்பு வைபவத்துக்கு முன்னர் மாணவிகளின் வெவ்வேறு விதமான நடன நிகழ்ச்சிகள் இடம்பெற்றன. இவ்வைபவத்தில் பெருந்திரளான மக்கள் கலந்து கொண்டிருந்தனர்.

ரொறண்டோ மாநகர சபை யின் 42 ஆம் வட்டார றூஜ் றிவர் தொகுதி வேட்பாளர் திரு.வேந்தன் றமனனும் இவ்வைபவத்தில் கலந்து கொண்டிருந்தார். விழா முடிவில் அனைவருக்கும் சிற்றுண்டிகள் வழங்கப்பட்டன.

## உள்ளாடைகளில் ஆமைகளை பதுக்கி கடத்த முயன்றவர் கைது

கனடாவில் 50க்கும் மேற்பட்ட ஆமைகளை கடத்த முயன்ற நபர் ஒருவரை பொலிசார் கைது செய்துள்ளனர்.

கனடாவின் ஒன்ராறியோவை சேர்ந்த கைகூ நபர் தனது உள்ளாடையில் ஆமை களை பதுக்கி வைத்து காரில் சென்றுள்

ளார்.

இந்நிலையில் ரொறன்ரோவின் எல் லைப் பகுதியில் இவர் பயணித்தபோது அங்கிருந்த பொலிசார் இவரின் காரை நிறுத்துமாறு வழிமறைத்துள்ளனர்.

இதனையடுத்து இவரிடம் சோதனை மேற்கொண்டபோது, இவரது மேலாடை மற்றும் உள்ளாடையில் 50க்கும் மேற்பட்ட ஆமைகள் பதுக்கி வைக்கப்பட்டது தெரிய வந்துள்ளது.

அதன்பின் பொலிசார் நடத்திய விசா ரணையில், இவர் மற்றொரு கனடிய நபருடன் சேர்ந்து 200க்கும் மேற்பட்ட ஆமைகளை சீனாவின் சங்காய் நகருக்கு விமான மூலம் அனுப்பவிருந்த திட்டம் அம்பலமாகியுள்ளது.

மேலும் இவர் கடத்திய ஆமைகளில் ஒரு வகை ஆமை சுமார் 800 டொலர்கள் வரையிலான விலை மதிப்புள்ளது என பொலிசார் கூறியுள்ளனர்.

## பன்னீர்செல்வத்தை சந்திக்க ஜெயலலிதா அனுமதி கொடுக்கவில்லை

நேற்று மாலை பெங்களூர் சென்ற தமிழ்நாடு முதலமைச்சர் ஓ.பன்னீர்செல்வம் ஜெயலலிதாவை சந்திக்க பெங்களூரில் காத்திருக்கிறார். சந்திக்க ஜெயலலிதா அனுமதி தரவில்லை எனத் தகவல் தெரிவிக்கின் றன. பன்னீர்செல்வம் சிறை அருகே உள்ள ஓட்டலில் தங்கியுள்ளார். அமைச்சர்கள் நத்தம் விஸ்வநாதன், வைத்தியலிங்கம், எடப்பாடியும், பன்னீர்செல்வத்துடன் தங்கி உள்ளனர். ஜெயலலிதா அனுமதி கொடுத்த வுடன் சிறைக்கு சென்று சந்திக்க திட்டமிட்டுள்ளனர். பலமணி நேரமாக காத்திருந்து பன்னீர்செல்வம் ஏமாற்றம் அடைந்துள்ளார்.



## செட்டிநாடு வெஜிடபிள் கறி

தேவையான பொருட்கள்

பச்சை நிற கத்தரிக்காய் - 20 கிராம்
உருளைக்கிழங்கு - 200 கிராம்
பெரிய வெங்காயம் - 2
பீன்ஸ் - 100 கிராம்
முட்டைக்கோஸ் - 150 கிராம்
பட்டாணி - 150 கிராம்
எண்ணெய் - வதக்க
உப்பு - தேவைக்கேற்ப
கடுகு - 1 /4 தேக்கரண்டி
கருவேப்பிலை - சிறிதளவு

அரைத்துக் கொள்ளவும்

கசகசா - 1 1 /2 மேசைக்கரண்டி
பச்சை மிளகாய் அல்லது காய்ந்த மிளகாய் - 8
மிளகு - 1/4 தேக்கரண்டி
இஞ்சி - 1 /2 அங்குலத் துண்டு
பூண்டு - 8 பல்
சின்ன வெங்காயம் - 1 கப்
சீரகம் - 1 தேக்கரண்டி
சோம்பு - 1/4 தேக்கரண்டி

**செய்முறை**

பச்சை நிற கத்தரிக்காய், உருளைக்கிழங்கு, பெரிய வெங்காயம், பீன்ஸ், முட்டைக்கோஸ் எல்லாவற்றையும் நீளவாக்கில் அரியவும். பட்டாணி, பீன்ஸ், உருளைக்கிழங்கு, கோஸ் இவற்றை குக்கரில் வேக வைத்துக் கொள்ளவும். கடாயில் எண்ணெய் ஊற்றி கடுகு, கருவேப்பிலை, வெங்காயம் சேர்த்து வதங்கியதும், கத்திரிக்காய் சேர்க்கவும். நன்றாக வதக்கிய பிறகு. அரைத்த மசாலா உப்பு சேர்க்கவும். நல்ல வாசனை வரும் வரை வதக்கவும். பிறகு வேக வைத்த காய்கறிகளைச் சேர்த்து மிதமான தீயில் குழம்பு கெட்டியாக வரும்வரை கொதிக்க விடவும்.

* * * * * * * * * * * * * * * * * *

## சேமியா பிரியாணி

தேவையான பொருட்கள்:

சேமியா - 200 கிராம்
தக்காளி - 2
பெரிய வெங்காயம் - 1
கேரட் - 25 கிராம்
பீன்ஸ் - 25 கிராம்
பட்டாணி - 25 கிராம்
இஞ்சி -சிறு துண்டு
பூண்டு - 1 பல்

# புதிய சுவை

பட்டை - 2 துண்டு
கிராம்பு - 3
கசகசா - 1/2 தேக்கரண்டி

செய்முறை

சேமியாவை லேசாக வறுத்துக் கொள்ளவும். இஞ்சி, பூண்டு, பட்டை, கிராம்பு,



கசகசா முதலியவற்றை மெலிதாக அரைத்துக் கொள்ளவும். வாணலியில் எண்ணெய் விட்டு சோம்பு, வெங்காயம், கறிவேப்பிலை போட்டுத் தாளிக்கவும். வெங்காயம் வதங்கியவுடன் தக்காளி சேர்த்து வதக்கவும். இதனுடன் அரைத்து வைத்த மசாலாவைப் போட்டு வதக்கவும். பச்சை வாசனை போகும் வரை வதக்கவும். பிறகு காரட், பீன்ஸ், பட்டாணி மற்றும் தேவையான அளவு உப்பு, தண்ணீர் சேர்த்து காய்களை முக்கால்வாசி வேக விடவும். 200 கிராம் சேமியாவுக்கு 400 கிராம் தண்ணீர் விட்டு உப்பு சேர்த்து கொதிக்கவிடவும். தண்ணீர் கொதி வந்தவுடன் சேமியாவை அதில் கொட்டிக் கிளறி இறக்கவும்.

* * * * * * * * * * * * * * * * * *

## காஜு கத்லி

தேவையான பொருட்கள்

முந்திரிப்பருப்பு - 2 கப்
சர்க்கரை - 1 1/2 கப்
நெய் - 2 மேசைக்கரண்டி
சுடு தண்ணீர் - 3/4 கப்
சில்வர் பேப்பர் - 5 (அ) 6 சீட்டுகள்
குங்கமப்பூ - ஒரு விள்ளல்

செய்முறை

முந்திரிப்பருப்பைப் பொடித்துக் கொள்ளவும். பல பகுதிகளாகப் பிரித்து பொடித்துக் கொள்ளவும். எல்லாவற்றையும் ஒன்றாக சேர்த்துப் பொடிக்க வேண்டாம். சர்க்கரையை சுடுதண்ணீரில் கலந்து கொதிக்க விடவும். அடுப்பை மிதமான தீயில் வைத்து, குங்கமப்பூ சேர்த்து கம்பி பாகு பதம் வரும் வரை கொதிக்க விடவும். சர்க்கரைப் பாகு மிகவும் கெட்டியாகி விட்டால், சில தேக்கரண்டி சுடு தண்ணீர் சேர்த்துக்கொள்ளலாம். பாகு தயாரிக்கும்போது, இடையில் அரைத்த முந்திரிப்பருப்பை மிகவும் குறைந்த தீயில் 2, 3 நிமிடங்கள் வதக்கவும். வதக்கும்போது தூளின் நிறம் மாறக்கூடாது. முந்திரிப்பருப்பு தூளானது வெது வெதுப்பாக இருந்தால் எடுத்து விடலாம். நெய்யை உருக்கி, பாகில் சேர்க்கவும். இப்போது வறுத்த முந்திரிப்பருப்பு தூளை பாகில் கொட்டி நன்கு கலந்து ஆற விடவும். (சப்பாத்தி மா பதத்தை விட



சிறிது கெட்டியாக இருக்க வேண்டும்). முந்திரிப்பருப்புத் தூளை பாகில் சேர்க்கும்போது, மாக்கலவை சிறிது தளர்வாக இருந்தால், அடுப்பில் மாக் கலவையை வைத்து சிறிய தீயில் வைத்துக் கிளறி, தேவையான பதத்திற்குக் கொண்டு வரவும். மாக்கலவை ஆறியவுடன், நன்கு பிசைந்து செவ்வக வடிவில் 1/2 செ.மீ. அளவு தடிமனாக தேய்த்துக்கொள்ளவும். சில்வர் பேப்பரை அதன் மேல் போட்டு டைமண்ட் வடிவில் அல்லது விருப்பமான வடிவில் வெட்டிக் கொள்ளவும்.

# சிவாஜிகணேசனுக்கு எஸ்.பி.பாலசுப்பிரமணியம் பாடிய முதல் பாடல்

'சுமதி என் சுந்தரி'' படத்தில் வரும் 'பொட்டு வைத்த முகமோ'' என்ற பாடல், சிவாஜிகணேசனுக்கு எஸ்.பி.பாலசுப்பிரமணியம் பாடிய முதல் பாடல்.

'ஆயிரம் நிலவே வா'', 'இயற்கை என்னும் இளைய கன்னி'' ஆகிய பாடல்கள் மூலம் புகழ் பெற்ற பாலசுப்பிரமணியத்துக்கு, ஏராளமான படங்களில் பாட வாய்ப்பு வந்தது.

அந்தக் கால கட்டத்தில், எம்.ஜி.ஆருக்கும், சிவாஜிகணேசனுக்கும் டி.எம்.சவுந்தரராஜன்தான் பாடிக்கொண்டிருந்தார்.

ரவிச்சந்திரன், ஜெய்சங்கர், முத்துராமன் ஆகியோர் முன்னேறிக் கொண்டிருந்தனர். அவர்களுக்கெல்லாம் எஸ்.பி.பாலசுப்பிரமணியம் பாடலானார்.

சிவாஜிகணேசன் நடித்த 'சுமதி என் சுந்தரி'' என்ற படத்தில், சிவாஜிக்கு குரல் கொடுக்கும் வாய்ப்பு பாலுவுக்கு கிடைத்தது. 'பொட்டு வைத்த முகமோ'' என்ற அந்தப்பாடலை, முதலில் வேறு ஒருவர் பாடுவதாக இருந்தது. பின்னர் பாலுவை எம்.எஸ்.விஸ்வநாதன் தேர்ந்தெடுத்தார்.'சிவாஜிக்கு முதன் முதலாகப் பாடப்போகிறோம். நன்றாக அமையவேண்டுமே'' என்ற பயத்தோடு, பாடல் பதிவுக்குச் சென்றார், பாலு. அங்கே சிவாஜிகணேசன் வந்திருந்தார்.

பொதுவாக, பாடல் பதிவுக்கு சிவாஜி வருவதில்லை. சிவாஜிக்காக டி.எம்.சவுந்தரராஜன் எத்தனையோ பாடல்கள் பாடியிருக்கிறார். அப்போதெல்லாம் வராத சிவாஜி இப்போது ஏன் வந்திருக்கிறார் என்று பாலு உள்பட அனைவரும் வியப்படைந்தனர்.

பாலுவை ஒரு தனி அறைக்கு அழைத்துச் சென்றார், சிவாஜி.

'பாலு! எனக்குப் பாடப்போவதை நினைத்து, உன் ஸ்டைலை மாற்றிப் பாட முயற்சி செய்யாதே! உன் பாணியில் பாடு. நான் உன் பாட்டைக் கேட்கவேண்டும் என்பதற்காக இங்கே வரவில்லை. எனக்காக நீ உன் பாணியை மாற்றிப்பாட வேண்டும் என்று யாராவது சொல்லி உன்னைக் குழப்பி விடுவார்கள் என்று நினைத்தேன். அதனால்தான் இங்கே வந்தேன். நீ உன்



பாணியில் பாடு. அதற்கேற்றபடி நான் நடித்து விடுகிறேன்'' என்று கூறினார்.

சிவாஜி இப்படி கூறியது, பாலுவுக்கு தைரியத்தைக் கொடுத்தது. பாட்டை நன்றாகப் பாடமுடியும் என்ற நம்பிக்கை வந்தது.

சிவாஜியும், பாலுவும் வெளியே வந்தனர். எம்.எஸ்.விஸ்வநாதனிடம் ஏதோ கூறிவிட்டு, சிவாஜி அங்கே இருந்து புறப்பட்டுச் சென்றார்.

பின்னர் பாடல் பதிவு நடந்தது. எஸ்.பி.பாலசுப்பிரமணியமும், பி.சுசீலாவும் அந்தப்பாட்டை பாடி முடித்தனர். பாடல் நன்றாக வந்திருப்பதாக எம்.எஸ்.வி. கூறினார்.

சி.வி.ராஜேந்திரன் டைரக்ஷனில் உருவான 'சுமதி என் சுந்தரி''யின் படப்பிடிப்பு முடிவடைந்ததும், தொழில் நுட்பக் கலைஞர்களுக்குப் படம் போட்டுக் காட்டப்பட்டது. பாலசுப்பிரமணியம், தன் குடும்பத்துடன் சென்றிருந்தார்.

'பொட்டு வைத்த முகமோ'' பாடல் காட்சியில், பாலுவின் பாட்டுக்கு ஏற்ப சிவாஜி தன் பாணியை மாற்றி நடித்திருந்தார். சிவாஜியின் ஆற்றலைக் கண்டு பிரமித்துப்போனார், பாலு.

படம் முடிந்ததும், எல்லோரும் பாலுவை சூழ்ந்து கொண்டனர். 'பொட்டு வைத்த முகமோ பாடல் பிரமாதம்'' என்று பாராட்டினர்.

1971 ஏப்ரல் 14-ந்தேதி தமிழ்ப்புத்தாண்டு அன்று வெளிவந்து 'சுமதி என் சுந்தரி'' வெற்றிப்படமாக அமைந்தது.

தெலுங்கில் என்.டி.ராமராவ், ஏ.நாகேஸ்வரராவ் ஆகிய இருவரும் கொடிகட்டிப் பறந்த காலக்கட்டம் அது. அவர்களுக்கு கண்டசாலாதான் பின்னணியில் பாடி வந்தார். தெலுங்கு பின்னணி பாடகர்களில் 'முடிசூடா மன்னன்'' அவர்தான்.

வயதானதால், பாடுவதை குறைக்கலானார், கண்டசாலா. அப்போது பாலசுப்பிரமணியத்துக்கு வாய்ப்புகள் வரலாயின. அதிலும் ஒரு இடைஹீறு. ராமகிருஷ்ணன் என்ற இளம் பாடகர், ஏறக்குறைய கண்டசாலாவைப் போன்ற குரல் கொண்டவர். அவர் என்.டி.ராமராவுக்கு குரல் கொடுக்கலானார். கண்டசாலாவின் குரலை மறக்க முடியாத ஆந்திர ரசிகர்கள், ராமகிருஷ்ணன் குரலில் ஆறுதல் அடைந்தனர்.

தெலுங்கு காமெடி நடிகர்களுக்கு, பாலு பாட நேரிட்டது.

இந்த சமயத்தில், ஒரு எதிர்பாராத திருப்பம் ஏற்பட்டது. நடிகர் கிருஷ்ணா நடித்த படங்கள் பெரும் வெற்றி பெற்றதால், அவர் சூப்பர் ஸ்டாராக உயர்ந்தார். அவருக்கு பாலசுப்பிரமணியத்தின் குரல் வெகுவாகப் பொருந்தியது. 'இனி என் படங்களுக்கு நீங்களே தொடர்ந்து பாடுங்கள். மற்ற பிரபல நடிகர்களுக்கும் நீங்கள் பாடலாம். ஆனால், காமெடி நடிகர்களுக்குப் பாடாதீர்கள்'' என்று பாலுவிடம் கூறினார், கிருஷ்ணா.

அதைத்தொடர்ந்து கிருஷ்ணாவுக்கும், மற்ற பிரபல நடிகர்களுக்கும் பாலு பாடினார். தெலுங்கு பின்னணி பாடகர்களில் முதல் இடத்தை விரைவிலேயே பெற்றார்.

தமிழ், தெலுங்கு, கன்னடம் என்று தென்னிந்திய மொழிகளில் தினமும் இரவு, பகலாக பாடினார், பாலசுப்பிரமணியம். அவர் புகழ் நாளுக்கு நாள் உயர்ந்து கொண்டே போயிற்று.

# புதிய சுவை!

## நூடுல்ஸ் சூப்

***தேவையானவை:***

பொடியாக நறுக்கிய கேரட், முட்டைகோஸ், பீன்ஸ், காலிபிளவர் அனைத்துமாக 2 கோப்பை

வேக வைத்த சைனீஸ் நூடுல்ஸ் - 1/2 கோப்பை

இஞ்சி பூண்டு விழுது - 2 தேக்கரண்டி

நறுக்கிய வெங்காயம் - 1

சோயா சோஸ் - 2 தேக்கரண்டி

மிளகுத்தூள் - ஒரு தேக்கரண்டி

கொத்தமல்லி, வெங்காயத்தாள் - சிறிதளவு

சீனி - 1/2 தேக்கரண்டி

சோள மா - 2 தேக்கரண்டி

உப்பு தேவைக்கு ஏற்ப.

***செய்முறை:*** பாத்திரத்தில் 4 கோப்பைத் தண்ணீரைக் கொதிக்கவைத்து அதில் காய்கறிகள், இஞ்சி, பூண்டு விழுது, வெங்காயம், சீனி, உப்பு ஆகியவற்றைப் போட்டு, அரைப்பதம் வரும் வரை கொதிக்க விடவும். அரைக் கோப்பைத் தண்ணீரில் சோள மாவைக் கரைத்து அதில் சேர்த்து ஒரு நிமிடம் கொதித்ததும் இறக்கிவிடவும். பிறகு சோயா சோஸ், நூடுல்ஸ், மிளகுத்தூள், கொத்தமல்லி, வெங்காயத்தாள் சேர்த்து பரிமாறவும்.

!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!

## பார்லி பாத்

***தேவையானவை:***

பார்லி - 200 கிராம்

வறுத்த வேர்க்கடலை - ஒரு கோப்பை

பொட்டுக்கடலை - 2 தேக்கரண்டி

நறுக்கிய குடமிளகாய்

பெரிய வெங்காயம் - 1

நறுக்கிய கொத்தமல்லி - சிறிதளவு

இஞ்சி - சிறிய துண்டு (பொடியாக நறுக்கவும்)

மிளகுத்தூள் - கால் தேக்கரண்டி

நெய் - ஒரு மேசைக்கரண்டி

துருவிய கேரட் - ஒரு கோப்பை

கடுகு, உளுத்தம் பருப்பு - ஒரு தேக்கரண்டி

எலுமிச்சம்பழம் - 1

உப்பு - தேவையான அளவு.

***செய்முறை:*** பார்லியை அரை மணி நேரம் ஊற வைத்து தண்ணீரை வடிகட்டவும். கடாயில் நெய் விட்டு நறுக்கிய குடமிளகாய், வெங்காயம், இஞ்சியைப் போட்டு நன்கு வதக்கவும். நெய்யில் கடுகு, உளுத்தம்பருப்பு தாளித்து அதில் பார்லியைப் போட்டு உப்பு சேர்க்கவும். வறுத்த வேர்க்கடலை, பொட்டுக்கடலை, மிளகுத்தூள் போட்டுக் கிளறி துருவிய கேரட்டையும் சேர்த்துக் கிளறி இறக்கவும். இறக்கியதும் எலுமிச்சம்பழத்தை சாறு பிழிந்து சேர்க்கவும். நறுக்கிய கொத்தமல்லி தூவி, நன்றாகக் கலந்து பரிமாறுங்கள். சிறுநீரகப் பிரச்சினைக்கும், நீர் சம்பந்தமான நோய்களுக்கும் பார்லி சிறந்த மருந்தாகும்.

!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!!

## முட்டை பாண் உப்புமா

***தேவையான பொருட்கள்:***

பாண் - 6 துண்டுகள் (அண்ணளவாக)

முட்டை - 2

வெங்காயம் - 1

கடுகு - 1 தேக்கரண்டி

உளுந்து - 1 தேக்கரண்டி

கொத்தமல்லி

கறிவேப்பிலை

பச்சை மிளகாய் - 3

உப்பு

எண்ணெய் - தேவைக்கு

***செய்முறை:*** பாணை உதிர்த்து வைக்கவும். முட்டையுடன் மஞ்சள்தூள், சிறிது உப்புப் போட்டு நன்றாக அடித்துக் கலக்கி வைக்கவும். வெங்காயம், பச்சை மிளகாயைப் பொடியாக அரிந்துவைக்கவும். கடாயில் சிறிது எண்ணெய் ஊற்றி, காய்ந்தவுடன் கடுகு, உளுந்து, வெங்காயம், பச்சை மிளகாய், மஞ்சள் தூள், உப்பு, கறிவேப்பிலை, கொத்தமல்லி போட்டுத் தாளித்து வதக்கவும். உதிர்த்த பாண் துண்டுகளைப் போட்டுக் கிண்டவும். சிறிது வதங்கிய பின் கொஞ்சம் கொஞ்சமாக முட்டையை ஊற்றிக் கிண்டவும். முட்டை பாண் துண்டுகளுடன் நன்றாகக் கலந்த பின் இறக்கி சூடாகப் பரிமாறவும்.



!!!!!!!!!!!!!!!!!!

## பப்பாளி பழ அல்வா



***தேவையான பொருட்கள்:***

பப்பாளிப் பழத் துண்டுகள் - 3 கோப்பை, சர்க்கரை - 3/4 கோப்பை (உங்கள் தேவைக்கேற்ப), நெய் - 4 தே. கரண்டி, காய்ச்சின பால் - 1/2 கப் (உங்கள் தேவைக்கேற்ப), ஏலப்பொடி - சிறிதளவு, முந்திரி - 7, பாதாம் பருப்பு - 7



***செய்முறை:*** முந்திரி பருப்பை நெய்யில் வறுத்து சிறு துண்டுகளாக்கிக் கொள்ளுங்கள். பாதாம் பருப்பை மெலிதாக நறுக்கிக்கொள்ளவும். அடி கனமான பாத்திரத்தில் சிறிது நெய்விட்டு பப்பாளிப் பழத் துண்டுகளைப் போட்டு வதக்குங்கள். பச்சை வாடை போனதும் காய்ச்சின பாலை ஊற்றி நன்கு வேக விடவும். பப்பாளி குழைந்து வரும். அதனுடன் சர்க்கரை சேர்த்துக் கிளறி விடவும். அல்வா சுண்டி வரும் போது மீதமுள்ள நெய்விட்டுக் கிளறி வரவும்.

பாத்திரத்தில் அல்வா ஒட்டாமல் வரும் பொது முந்திரி, பாதாம், ஏலப்பொடி தூவி கிளறி இறக்கவும். பப்பாளிப் பழ அல்வா தயார். பப்பாளி நன்றாக பழுத்ததாக இருக்கவேண்டும். பப்பாளி இயல்பாகவே இனிப்பு என்பதால் சர்க்கரை அளவைக் குறைத்துக்கொள்ளுங்கள்.

## சிறுவர் முற்றம்
## Kids World

## ஆமை

**வே**டன் அன்று ஏரிக்கரை யோரத்தில் ஏதோ ஒன்றைத் தேடுகிற பணியில் ஈடுபட்டிருந்தான்.

'வா ஆமையே! வா! உன்னைத்தான் வெகு நேரமாக எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். நீ இப்போதுதான் ஏரியை விட்டே வெளியே வருகிறாயா? இனி என்னிடம் மாட்டிக் கொள்ளப் போகிறாய்! உன்னை இப்போதே பிடித்துச் செல்கிறேன்... ஹி... ஹி... ஹி...' என்று சிரித்தபடி, தன் பற்களை இளித்துக் கொண்டு ஆமையை நெருங்கினான் வேடன்.

வேடனைக் கண்டு ஆமை சற்றும் பயப்படவில்லை.

'வேடனே! என்னைப் பிடிக்க நீ யார்? என்னைப் பிடித்துக் கொன்று தின்பதற்கு உனக்கு என்ன உரிமை இருக்கிறது?' என்று துணிச்சலுடன் வேடனைப் பார்த்து ஆமை கேட்டது.

'ஆமையே! நான் உன்னை விட மேலான மனிதப் பிறவியில் இருப்பவன். எனக்கு எல்லா சக்தியும் இருக்கிறது. உன்னைக் கொன்று தின்னவும் என்னால் முடியும்! அதே நேரத்தில் உன்னை உயிரோடு விட்டுவிடவும் என்னால் முடியும். எனது பெருமைகளைப் பற்றி உனக்கு எங்கே தெரியப் போகிறது! நீ ஒரு அற்பமான பிறவி. இந்த ஏரியில் அங்குமிங்குமாக அலைந்தபடி இருக்கிற சிறிய உயிரினம் தானே நீ! உன்னிடம் நான் பேசுவதற்கு என்ன இருக்கிறது! உன் கறி சுவையாக இருக்கும்...'

'நாங்கள் உங்களைப் போன்ற மனித இனத்தை எதிர்க்கும் சக்தி இல்லாதவர்கள் என்ற ஒரே பலவீனத்தைப் பயன்படுத்திக் கொண்டு தானே, வேடர்களாகிய நீங்கள் எல்லாரும் எங்களைத் துன்புறுத்தி வருகிறீர்கள்! ஒருவேளை உங்களை நேருக்கு நேராக எதிர்க்கிற ஆற்றலை ஆண்டவன் எங்களுக்கு வழங்கியிருந்தால், நீங்கள் எங்களை இப்படித் துன்புறுத்தி கறி சமைத்து சாப்பிடுவீர்களா? இல்லை சாப்பிடத்தான் முடியுமா என்பதைக் கொஞ்சம் நினைத்துப் பாருங்கள்!'



என்று காட்டமாகக் கூறியது.

ஆமையின் பேச்சைக் கேட்டு வேடன் தடுமாற்றமடைந்தான். ஆமை பேசிய பேச்சுக்களை எல்லாம் ஒரு கணம் அவன் நினைத்துப் பார்த்த போது, அதில் ஒருவித நியாயம் இருப்பதாகவே அவன் மனதுக்குத் தென்பட்டது.

அறிவுள்ள அந்த ஆமையைக் கூர்ந்து நோக்கிய வேடன், 'ஆமையே! நீ கூறிய புரட்சிகரமான கருத்துக்களை நான் ஆதரிக்கிறேன். என்னைக் கண்டு .பயந்து ஓடாமல், என் முன்னே நின்று என்னை எதிர்த்து துணிச்சலுடன் பேசிய உன் தைரியத்திற்கு நான் தலை வணங்கி நிற்கிறேன்,' என்று கூறினான்.

அதைக் கண்ட ஆமை, 'வேடனே! நீ எனக்குத் தலை வணங்கி நிற்பதைவிட, இனி மேல் என் போன்ற உயிர்களைத் துன்புறுத்தாமல் இருந்தால் போதும்,' என்றது.

ஆமையின் பேச்சை மதித்து, தன் கையில் இருந்த வில், அம்பு, ஈட்டி, கத்தி முதலிய ஆயுதங்களைத் தூக்கி வீசியெறிந்தான் வேடன்.

'இனிமேல் எந்த உயிரையும் கொல்லக்கூடாது!' என்று தனக்குள் முடிவெடுத்துக் கொண்டான்.

## வர்ணம் தீட்டுங்கள் செல்லங்களே!



## இரண்டு படங்களுக்கும் இடையே உள்ள 6 வித்தியாசங்களைக் கண்டுபிடியுங்கள்.





படத்திலுள்ள விலங்குகளின் பெயர்கள் விடுபட்டுள்ளன. அவற்றை சரியாக எழுதுங்கள்.



மா ___



சி___கம்



யா ___



க___கு

## எப்படி படம் வரைவது?




தொகுப்பு: ராதா ராம்

## உங்களுக்குத் தெரியுமா?

### ஆர்ட்டிக் முயல்!

**ஆ**ர்ட்டிக் முயல். வட அமெரிக்காவின் குளிர்ந்த பிரதேசத்திலுள்ள மரங்களற்ற சதுப்புநில பகுதியில் வாழ்கிறது. இதன் குட்டையான கறுப்பு கோடுகளைக் கொண்ட காதுகள், குளிர்காலத்தில் உடல் வெப்ப இழப்பு ஏற்படாமல் பாதுகாக்க உதவுகிறது.

நீண்ட ரோமங்கள், குளிர் காலத்தில் குளிரை தாங்கவும், எதிரிகளின் பார்வையிலிருந்து மறைத்துக் கொள்ளவும் பயன்படுகிறது. கோடை காலத்தில், இதன் உடல் மற்றும் தலை, சாம்பல் கலந்த வெளிர் ப்ரவுன் நிறத்தில் காணப்படும். மணிக்கு 64 கிலோ மீட்டர் வேகத்தில் ஓடும். இதன் பின்னங்கால்கள், கங்காரு போன்று வலிமையானது.



## விடுகதைகள்

**ம**ணிக்கணக்காய் போடும் கணக்காய் இருந்தாலும் மனக்கணக்காய் போட்டு விடும் கணக்குப் பிள்ளை. அவன் யார்?

காடெங்கும் முளைத்த புல், அறுக்க அறுக்க வளரும். அது என்ன?

ஆண்டவனுக்கு கேட்க ஆலயத்தில் ஒலிப்பான். அவன் யார்?

செத்தப் பிறகே, சந்தைக்கு வருவான். அவன் யார்?

மழைக்கு உதவாத குடை மழைக்கால குடை. அது என்ன?

நீரில் உயிர் வாழும் நிலத்தில் சவமாகும். அது என்ன?

### விடைகள்

கால்குலேட்டர்
[illegible]
கோயில் மணி
தலை முடி
காளான்
கருவாடு

வாரம் ஒரு வி.ஐ.பி.

# அஹிம்சை விரும்பிய ஆயுதம்

வெள்ளையர்களையே கிலிகொள்ள வைத்த மாவீரர். தோற்றத்துக்கும் போராடும் குணத்துக்கும் சம்பந்தம் இல்லாதவர். மகாத்மா காந்தியை முதல் தடவையாக தேசபிதா என்று அழைத்தவர். அஹிம்சாவாதி மகாத்மாவையே வசீகரித்த ஆயுததாரி. இன்னொரு ஜன்மம் எனக்கிருந்தால், தமிழனாய்ப் பிறக்க வேண்டும் என்று ஆசைப் பட்ட இந்தியர். அவர்தான் நேதாஜி என்று இந்திய மக்களால் அன்போடு அழைக்கப் பட்ட, அழைக்கப்படும் சுபாஷ் சந்திர போஸ். இவர்தான், இரண்டாம் உலகப் போர் சமயத்தில் வெளிநாடுகளில் போர்க் கைதிகளாய் இருந்த நூற்றுக்கணக்கான இந்தியர்களை ஒன்றுதிரட்டி இந்திய தேசிய ராணுவத்தை உருவாக்கி இந்தியாவை ஆண்ட ஆங்கிலேயர்க்கு எதிராக தாக்குதல் நடத்திய இந்திய சுதந்திரப் போராட்டத் தலைவர். ஒவ்வொரு இந்தியனதும் வீர முழக்கமான ஜெய் ஹிந்த் என்ற சொற்பதத்தை நாட்டிற்கு அளித்த புரட்சியாளர் இவர்தான். ஆனால், மகத்தான இந்த வார்த்தைகளை போஸுக்கு அறிமுகப்படுத்தியவர் தமிழறிஞர் செண்பகராமன் பிள்ளை.

எனக்கு இரத்தம் கொடுங்கள். உங்களுக்கு சுதந்திரம் தருகிறேன் என்றும் சுதந்திரத்தை அனுபவிக்க வேண்டும் என்று நீங்கள் வாழ விரும்பினால் நம்மால் நிச்சயமாக வெற்றி பெற முடியாது. நமக்கு முன்னால் ஒரு நீண்ட போராட்டம் இன்னும் இருக்கிறது. இந்தியாவை வாழ வைக்க வேண்டுமென்றால் நமக்கு ஒரே ஒரு விருப்பம் மட்டும் தான் இருக்க வேண்டும். அது நாட்டிற்காக நம் உயிரையே விடுவது தான்" என்று, எந்த வித போலித்தனமோ, அரசியல் உள்நோக்கமோ, தன்னலமோ இல்லாமல் நாட்டின் விடுதலையையே குறிக்கோளாகக் கொண்டு அறைகூவல் விடுத்து மக்களை தட்டியெழுப்பியவர்.

1897 ஆம் வருடம், ஒரிசாவின் கட்டாக்கில் ஜானகிநாத் போஸ்-பிரபாவதி தேவியின் பதினான்கு குழந்தைகளில் ஒன்பதாவது குழந்தையாகப் பிறந்தவர் சுபாஷ் சந்திர போஸ். இள வயதில் விளையாட்டில் மிகுந்த சங்கோஜி.

தனது பத்தொன்பது வயதில், இந்தியர்களைத் தரக்குறைவாகப் பேசிய அவர் கல்விகற்ற கல்லூரியின் ஆங்கில விரிவுரையாளரான ஓட்டனைத் தாக்கினார் போஸ். இதுதான் அவரது புரட்சிகர சிந்தனைக்கு ஆரம்பப்புள்ளி. பின்னர் மீண்டும் சேர்க்கப் பட்டு தத்துவத்தில் முதன்மையாகத் தேர்வு பெற்றார். அவருடைய அறிவாற்றலைப் புரிந்து கொண்ட அவரது தந்தையார் அவரை அரசாங்க உத்யோகத்தில் உயர் பதவியில் பார்க்க ஆசைப்பட்டு இங்கிலாந்து அனுப்பி வைத்தார்.

1920 இல் இந்திய மக்கள் சேவை படிப்புக்கான நுழைவுத்தேர்வில் பங்கேற்று இந்தியாவிலேயே நான்காவதாக வந்தார். எனினும் ஜாலியன் வாலாபாக் படுகொலையால் மிகவும் கலங்கிய போஸ், ஏப்ரல் 1921 இல் மதிப்புமிக்க இந்திய மக்கள் சேவையிலிருந்து வெளியேறி இந்திய சுதந்திரப் போராட்டத்தில் பங்கேற்றார்.

அந்த நேரம் காந்திஜி ஒரு மக்கள் தலைவராக உருவெடுத்த நேரம். சுபாஷ் சந்திர போஸ் இந்திய தேசிய காங்கிரஸில் சேர்ந்து நாட்டுக்குத் தொண்டாற்ற காந்திஜியைச் சந்தித்தார். போஸின் பணிவான கோரிக்கையைக் கேட்டு காந்திஜி அவரை கொல்கத்தாவிலிருந்த தேசபந்து சித்தரஞ்சன் தாஸிடம் அனுப்பி வைத்தார். பிற்காலத்தில் சித்தரஞ்சன் தாஸையே குருவாக ஏற்றுக்கொண்டார் போஸ். தேசபந்து கொல்கத்தாவின் மேயராகியவுடன் போஸ் முதன்மை ஆட்சித்துறை அதிகாரியாக பதவியேற்றார். பதவியில் இருந்து கொண்டே பல புரட்சியாளர்களைச் சந்தித்துக் கொண்டிருந்தார். அதனால் அரசாங்கம் அவரை மறுபடியும் கைது செய்து சிறையில் அடைத்தார்கள். 1925ல் தேசபந்துவின் மறைவு அவரை நிலைகுலைய வைத்தது. ஆனால் மாண்டலே சிறையில் இருந்த இரண்டு வருடங்கள் அவருக்கு வேண்டிய ஊக்கத்தையும் மனபலத்தையும் கொடுத்தது.

1926ம் ஆண்டு முடிவில் வங்காள சட்ட சபைக்கு வேட்பாளராக நியமனம் பெற்றார். மே 1927ல் அவரது உடல்நலம் கருதி அவரை சிறையிலிருந்து விடுவித்தார்கள். டிசம்பர் 1927ம் ஆண்டு ஜவஹர்லாலுடன் காங்கிரஸின் கௌரவ செயலாளர் பதவியை ஏற்றார். அந்த ஆண்டு ஜவஹர்லாலும் போஸும் இந்தியாவுக்கு முழு சுதந்திரம் கோரிப் போராடவேண்டும் என்றும் காங்கிரஸ் கமிட்டியின் கட்டம் கட்டமாக சுதந்திரம் பெறும் பிரேரணைத்திட்டத்தை ஒத்துக்கொள்ள முடியாது என்றும் கூறிவிட்டார்கள். அப்போது காந்திஜி பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு காலக் கெடு கொடுக்கலாம் என்று ஒரு யோசனையை முன்வைத்தார்.

அதன் படி ஒரு வருடத்திற்குள் இந்தியாவுக்கு பிரிட்டிஷ் அரசாங்கத்தைச் சார்ந்த சுயாட்சி அந்தஸ்து வழங்க வேண்டும் என்றும் அப்படி வழங்கத் தவறினால் காந்திஜியே முன்னின்று முழு சுதந்திரத்திற்கான சட்ட மூலத்தைத் தயாரித்தளிப்பார் என்றும் யோசனை வழங்கப்பட்டது. ஆனால் எவ்வளவோ முயன்றும் சுயாட்சி அந்தஸ்து பெறமுடியவில்லை. அதன் விளைவாக அடுத்த காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் முழு சுதந்திரம் (பூர்ண ஸ்வராஜ்) வேண்டும் என்ற கோரிக்கை முன் வைக்கப்பட்டது.

1929ம் ஆண்டு தூக்கிலிடப்பட்ட மாவீரன் பகத் சிங்கின் உயிரைக் காப்பாற்ற முடியாத காங்கிரஸ் தலைவர்களின் கையாலாகத்தனம் அவரை வெகுண்டெழச் செய்தது. இந்தச் சம்பவம் அவரை வன்முறை நோக்கித் திருப்பியது. 1932ம் ஆண்டு மீண்டும் கைது செய்யப்பட்டு வியன்னாவுக்கு நாடு கடத்தப்பட்டார். மற்ற நாட்டவர்களிடம் இந்திய மக்கள் படும் துன்பங்களையும் சுதந்திரத்திற்கான நியாயங்களையும் பரப்புவதே சிறந்த வழி என்று எண்ணினார் போஸ். 1934ம் ஆண்டு நவம்பர் மாதம் The Indian Struggle என்ற புத்தகத்தை எழுதிப் பதிப்பித்தார். 1932 முதல் 1936ம் ஆண்டுக்கு இடைப்பட்ட காலகட்டத்தில் ஹிட்லர் உட்பட அனைத்து உலகப் புரட்சியாளர்களையும் சந்தித்தார். பின் தன்னுடைய புரட்சியின் வடிவத்தை ஐரிஷ் புரட்சிக் குழுவான ஸின் ஃபைனை ஒத்ததாக மாற்றியமைத்தார். 1936ம் ஆண்டு நாடு திரும்பியவரை மீண்டும் கைது செய்து 1937ம் ஆண்டு மார்ச் மாதம் விடுதலை செய்தார்கள். இதற்கிடையில் சுபாஷ் சந்திர போஸுக்கு இந்திய தேசமெங்கும் ஆதரவு கிளம்பியது. காந்திஜியே அவரைக் காங்கிரஸின் தலைமைப் பொறுப்பை ஏற்குமாறு அழைப்பு விடுத்தார். அவ்வழைப்பை ஏற்று ஹரிப்பூர் மாநாட்டிற்குத் தலைமை வகித்தார். அப்போது சாந்தி நிகேதனில் ரவீந்திரநாத் தாகூரால் தேஷ் நாயக் என்று பட்டமளிக்கப்பட்டு கௌரவிக்கப்பட்டார்.

நேதாஜி முஸோலினியை சந்தித்ததை அந்நாளைய இந்திய வைஸ்ரோய் விரும்பவில்லை என்பதை காந்திஜி அறிந்து கொண்டார். அதனால் மறுதடவை இந்தியன் தேசிய காங்கிரஸ் தேர்தலில் நேதாஜி போட்டியிட்டபோது காந்திஜி அவரை ஆதரிக்காமல் அவருக்கு எதிராக சீதாராமையாவை நிறுத்தினார். ஆனால் போஸ்தான் வென்றால். கடைசியில் கொல்கத்தா கூட்டத்தில் நேதாஜியை காங்கிரஸில் இருந்து மூன்று வருடங்கள் தடை செய்ய முடிவு செய்யப்பட்டது. இதற்கு நேரு மற்றும் தாகூர் ஆகியோரது ஆதரவும் பெறப்பட்டது.

1940ம் ஆண்டு போஸ் சாவர்கரை பம்பாயில் சந்தித்தார். அவர் போஸிடம், சிறு சிறு காரணங்களுக்காகப் போராடிச் சிறை சென்று நேரத்தை வீணடிக்க வேண்டாம் என்று கேட்டுக் கொண்டார்.

ஜப்பானில் இருந்த ராஷ் பெஹாரி போஸின் அறிவுரைப்படி சுபாஷ் சந்திர போஸ் இந்தியாவை விட்டு யாரும் அறியா வண்ணம் ஜப்பானுக்கோ, ஜெர்மனிக்கோ சென்று விடவேண்டும் என்றும் அங்கிருந்து கொண்டு இந்திய போர்க் கைதிகளை ஒருங்கிணைத்து ஒரு ராணுவத்தை ஏற்படுத்தலாம் என்றும் கூறினார். ஆனால் நேதாஜியோ இந்தியாவை விட்டுச் செல்லாமல் அப்பாவி இந்திய வீரர்களை போரில் ஈடுபடுத்துவதைக் கண்டித்தும் இந்திய மக்களின் வரிப்பணத்தையும் மற்ற செல்வங்களையும் போருக்காக செலவழிப்பதைக் கண்டித்தும் போராட்டம் நடத்தினார். அப்போராட்டத்திற்கு மக்களின் பேராதரவும் இருந்தது. இதனால் பயந்த ஆங்கிலேய அரசு அவரை மீண்டும் சிறையிலடைத்தது. இதை எதிர்த்து சிறையில் உண்ணாவிரதம் மேற்கொண்ட நேதாஜியின் உடல்நலம் உண்ணாவிரதத்தின் 11வது நாள் மோசமடைந்தது.

பிரிட்டிஷ் அரசு அவரை வீட்டுக்காவலுக்கு மாற்றுமாறு உத்தரவு பிறப்பித்தது. போஸ் 1941ம் வருடம் வீட்டுக்காவலில் இருந்து தப்பி ரஷ்யாவிற்குச் சென்றார். மார்ச் 28ம் தேதி பெர்லினை அடைந்தார்.

ஜெர்மனியின் உதவியோடு ஒரு ராணுவப்பிரிவை ஏற்படுத்தியவர் ஒரு வானொலி நிலையத்தையும் நிறுவி, அவ் வானொலி வழி இந்தியர்களை பிரிட்டிஷ் அரசுக்கு எதிராகத் தூண்டினார். இது மக்களை மிகவும் ஆவேசத்துடன் போராட ஊக்குவித்தது. பிறகு ரோமிலும் பாரீஸிலும் இந்திய மையங்களை நிறுவினார்.



அப்போது ராஷ் பெஹாரி போஸ் மற்ற தேசபக்தர்களின் துணையோடு இந்தியப் போர்க்கைதிகளைக் கொண்டு ஒரு ராணுவத்தை அமைத்து விட்டதாகவும் அதைத் தலைமை தாங்கி இந்தியாவை ஆளும் பிரிட்டிஷ் படையுடன் மோதுமாறும் அழைத்தார். அந்த அழைப்பை ஏற்று ஒரு ஜெர்மானிய கப்பலில் மிக ஆபத்தான கடற்பயணம் மேற்கொண்டு சிங்கப்பூர் வந்தடைந்தார்.

அங்கு வந்தவர் ராணுவத்திற்குத் தலைமை ஏற்றார். பின்னர் ஜப்பானியர்களின் உதவியோடு ஒரு தற்காலிக இந்திய அரசை அமைத்து, அந்த ராணுவத்திற்கு இந்திய தேசிய இராணுவம் என்ற பெயரையும் சூட்டினார். மந்திரி சபை ஒன்றை அமைத்து, கிழக்கில் வாழும் இந்தியர்களிடமிருந்தும் ஜப்பானிய அரசாங்கத்திடமிருந்தும் நிதியுதவி பெற்று அரசாங்கத்தையும் ராணுவத்தையும் நடத்தினார். மகளிர் ராணுவத்தையும் நிறுவி அதற்கு ராணி ஜான்ஸி ரெஜிமெண்ட் என்று பெயர் சூட்டினார். அந்த இரு ராணுவப் படைகளையும் கொண்டு இந்தியாவிலுள்ள பிரிட்டிஷ் துருப்புகளை விரட்டியடிக்க வேண்டும் என்பது அவரது விருப்பம்.

ஆனால் போரில் ஜப்பான் வீழ்ச்சியடைந்தது.

1945ம் ஆண்டு ஓகஸ்ட் மாதம் ஜப்பானியர்கள் சரணடைவதற்கான பேச்சுவார்த்தைகளில் ஈடுபட்டிருந்த போது இந்திய தேசிய ராணுவத்தின் எதிர்காலம் குறித்துப் பேசுவதற்காக நேதாஜி ஜப்பான் சென்றார். பாங்கொக்கிலிருந்து கிளம்பிய விமானம் ஃபோர்மோசா என்ற இடத்தில் எரிபொருள் நிரப்பிக்கொண்டு மீண்டும் கிளம்பியபோது விபத்து ஏற்பட்டது. இதில் நேதாஜி இறந்துவிட்டார் என்று கூறப்படுகிறது.

மர்மம் நிறைந்த அவரது மரணம் மிகுந்த சர்ச்சைக்குள்ளாகி இன்றைய திகதி வரை அவரது மரணம் குறித்த எந்த ஒரு ஸ்திரமான முடிவுக்கும் வர இயலாமல் இருக்கிறது. அவர் ரஷ்யாவிற்கு சென்று 1970களில் இறந்துவிட்டதாகவும், ஒரு சன்னியாசியின் வடிவில் வட இந்தியாவில் மறைமுகமாக வாழ்ந்து 1985இல் இறந்து விட்டதாகவும் பல கருத்துக்கள் உள்ளன

நேதாஜியின் மரணச் செய்தியைக் கேள்வியுற்ற காந்திஜியோ இந்தியாவிற்கு சுதந்திரம் கிடைப்பதற்கு முன் நேதாஜி இறக்க வாய்ப்பேயில்லை என்ற அதீத நம்பிக்கையோடு இருந்தார். நேதாஜி ஏதோ ஒரு காரணத்திற்காக எங்கோ தலைமறைவாக இருக்கிறார் என்றும் தக்க தருணத்தில் தாய் நாட்டிற்குச் சேவை செய்ய மீண்டும் வருவார் என்றும் நம்பிக்கை கொண்டிருந்தார். ஏனெனில் நேதாஜியின் சுதந்திர தாகத்தை முழுமையாக உணர்ந்தவர் காந்திஜி. காந்திஜியின் அஹிம்சா வழிக்கு நேர் எதிரான வழியை நேதாஜி பின்பற்றினாலும் இருவரும் ஒருவருக்கொருவர் அதிகப் பாசத்துடன் பழகி வந்தனர்.

1939ம் ஆண்டு நாட்டை விட்டு வெளியேறுவதற்கு முன்பாக நேதாஜி காந்திஜியிடம் ஒரு நாடு தழுவிய போராட்டம் நடத்துமாறு கேட்டுக்கொண்ட போது, காந்திஜி நாட்டில் பரவலான வன்முறை வெடித்து விடும் என்று காரணம் காட்டி மறுத்து விட்டார். அப்போது நேதாஜியின் நண்பர்கள் அவரே ஏன் அந்தப் போராட்டத்தைத் தொடங்கக்கூடாது என்று வினவ அதற்கு நேதாஜி ?நான் அழைத்தால் 20 லட்சம் மக்கள் என் பின்னே வரக்கூடும். ஆனால் காந்திஜி அழைத்தாலோ 20 கோடி மக்கள் திரண்டு வருவார்கள் ? என்றாராம்.

பின்னர் ஒரு முறை ?நான் எல்லோருடைய நம்பிக்கையையும் பெற்று இந்தியாவின் தலைசிறந்த மனிதனான காந்திஜியின் நம்பிக்கையை மட்டும் பெறவில்லையென்றால் அதைவிட மிகப் பெரிய சோகம் வேறொன்றுமில்லை ? என்று கூறினாராம். 1939ம் ஆண்டிற்குப் பிறகு காந்திஜியும் நேதாஜியும் சந்தித்துக்கொள்ளவேயில்லை.

தாய்வான் அதிகாரிகள் நேதாஜி இறந்ததாகச் சொல்லப்படும் திகதியில் எந்த ஒரு விமான விபத்தும் நடக்கவில்லை என்று தெரிவித்து இருக்கின்றனர். மேலும் அவர்கள் 1945ம் ஆண்டு ஓகஸ்ட் 14 முதல் செப்டம்பர் 20 வரை எந்த விமான விபத்தும் தாய்பேயில் நிகழவில்லை என்றும் திட்டவட்டமாகக் கூறியுள்ளனர். பின்னாட்களில், ரஷ்யாவிலும் பிரிட்டனிலும் இருக்கும் ஆவணக்காப்பகத்திலிருந்து பல திடுக்கிடும் தகவல்களைச் சேகரித்திருக்கிறார்கள்.

இந்திய அரசாங்கம் கூறி வந்துள்ளபடி நேதாஜி 1945ம் ஆண்டு விமான விபத்தில் இறக்கவில்லை என்று தெரிய வருகிறது. இத்தகவல்களைத் திரட்டியவர்கள் புராபிரே, ஹரி வாசுதேவன் மற்றும் ஷோபன்லால் குப்தா ஆகிய மூன்று ஆராய்ச்சியாளர்கள். அடையாளம் காண முடியாத நபர்களால் இந்த மூன்று ஆராய்ச்சியாளர்களும் மிரட்டப்பட்டதால் அவர்கள் 2004ம் ஆண்டு ஜூன் மாதம் தங்கள் ஆராய்ச்சியைத் நிறுத்த வேண்டிய கட்டாயத்திற்கு ஆளானார்கள். பின்னர் தங்கள் ஆராய்ச்சியின் முடிவுகளை கமிஷனிடம் சமர்ப்பிக்கப்போவதாகவும் அதனால் பத்திரிக்கையாளர்களுக்கு இப்போதைக்கு வெளியிட முடியாது என்றும் மறுத்து விட்டனர்.

மேலும் பிரிட்டிஷ் ஆவணங்கள்படி நேதாஜி சென்ற விமான விபத்து நடப்பதற்கு முதல் நாள் போஸ் சோவியத் நாட்டிற்குத் தப்பிச்செல்ல விருப்பம் தெரிவித்ததாக கூறப்பட்டிருக்கிறது. இன்னுமொரு அறிக்கையில் அந்த விமான விபத்தே ஒரு சூழ்ச்சி என்றும் அது திட்டமிடப்பட்டக் கட்டுக்கதை என்றும் கூறப்பட்டுள்ளது.

இதற்கு மேலும் ஆதாரமாக ஜப்பானிய நாளிதழ் ஒன்று 1945ம் ஆண்டு டிசம்பர் மாதம் 20ம் திகதி இதழில் போஸ் டோக்கியோ வழியாக சோவியத் யூனியனுக்குச் செல்வதாக செய்தி வெளியிட்டிருந்தது.

முகர்ஜி கமிஷன் அந்த மூன்று ஆராய்ச்சியாளர்களிடமுள்ள எல்லா ஆவணங்களையும் அதன் மொழிபெயர்ப்புகளையும் சமர்ப்பிக்குமாறு பணித்தது. இதற்கிடையில் இந்திய உள்துறை அமைச்சு போஸ் உடலை எரித்த சாம்பலைப் பற்றிய கோப்பையும் அவருக்கு பாரத ரத்னா பட்டம் வழங்கியது பற்றிய கோப்பையும் நாட்டின் பாதுகாப்பு கருதி கமிஷனிடம் கொடுக்க மறுத்து விட்டது. இது நேதாஜியைப் பற்றி வேறெந்த விவரமும் வெளியே வந்து விடக்கூடாது என்ற உள்நோக்கத்தோடு திட்டமிடப்பட்டச் செயல் என்று கூறுகின்றனர்.

உண்மையில் நேதாஜி சம்பந்தப்பட்ட எல்லாக் கோப்புகளுமே ஜவஹர்லால் நேரு பிரதமராக இருந்த போது அவரது நேர் கண்காணிப்பில் தான் இருந்தது என்றும் நேருவின் காரியதரிசியாக இருந்த மொஹமத் யூனுஸ் தான் அக்கோப்புக்களை கையாண்டு வந்தார் என்றும் அறியப்படுகிறது.

பிரிட்டிஷ் உளவுத்துறையின் அறிக்கை ஒன்று நேதாஜி ரஷ்யாவிற்குத் தப்பிச் செல்லுமுன் நேருவுக்கு ரகசிய கடிதம் ஒன்றை அனுப்பியதாக ஷ்யாம்லால் ஜெயின் என்பவர் உறுதிப்படுத்தியுள்ளார். அவர் கூற்றுப்படி நேரு தன்னை 1945ம் ஆண்டு டிசம்பர் மாதம் 26 அல்லது 27ம் திகதியன்று கடிதங்களைத் தட்டெழுத்துச் செய்யக் கூப்பிட்டனுப்பினார் என்றும், அப்போது கையால் எழுதப்பட்ட ஒரு கடிதத்தை நான்கு நகல்கள் எடுக்குமாறு கூறினார் என்றும் சொல்லியிருக்கிறார். அந்தக் கடிதத்தில் போஸ் ஆகஸ்ட் மாதம் 23ம் திகதி சைகானிலிருந்து விமானத்தில் மஞ்சூரியாவிற்குச் சென்று விட்டதாகவும் அங்கிருந்து ஒரு ஜீப்பில் மற்ற நால்வர்களுடன் ரஷ்யாவை நோக்கிச் சென்று விட்டதாகவும் இருந்தது என்று கூறியிருக்கிறார்.

உலகத் தமிழரின் ஒரே தலைவரான பிரபாகரன், நேதாஜியின் மேல் அதீத பற்றுக் கொண்டவர். நேதாஜி எழுதிய அனைத்துப் புத்தகங்களையும் வாசித்துத் தன்னை ஒரு உன்னத விடுதலைப் போராட்டத்துக்குத் தயார்ப்படுத்திக்கொண்டவர். இன்றைய சூழலுடன் ஒப்பிடும்போது, தலைவர் பிரபாகரனின் வாழ்க்கையும் நேதாஜியின் வாழ்க்கையும் சமாந்திரக் கோடுகளில் பயணிப்பது ஆச்சரியப்படவேண்டிய விடயம்தான்.

மாவீரர்கள் என்றும் மடிவதில்லை.

# இந்திய கோயில்கள்

## அருள்மிகு சூரியனார் கோவில்

சிறப்பு வழிபாடு - பிரதி தமிழ் மாதம் முதல் ஞாயிறன்று சிவசூர்ய பெருமானுக்கு விசேச அபிசேக ஆராதனைகள் நடைபெறுகின்றன. மகா அபிசேகம் என்று அழைக்கப்படும் இந்த வழிபாட்டில் ஏராளமான பக்தர்கள் கலந்து கொண்டு வழிபாடு செய்வார்கள். சனிப்பெயர்ச்சி, குருபெயர்ச்சி ஆகிய நாட்களில் இத்தலத்தில் மிக சிறப்பான முறையில் அபிசேக ஆராதனைகள் நடக்கும். பக்தர்கள் பெருமளவில் கலந்து கொள்வர்.

### தல சிறப்பு:

இங்கு சூரியபகவான் இடது புறத்தில் உஷாதேவியுடனும், வலது புறத்தில் பிரத்யுஷாதேவியுடனும் இரு கரங்களிலும் செந்தாமரை மலர் ஏந்தி மேற்கு பார்த்து நின்ற கோலத்தில் அருள்பாலிக்கிறார். இங்குள்ள நவகிரகங்கள் யாருக்கும் வாகனங்கள் இல்லை. வாகனங்கள் இல்லாது நவகிரக நாயகர்களாக மட்டுமே அருள் பாலிக்கின்றனர்.

### பொது தகவல்:

சங்க காலத்தில் பூம்புகாரில் இருந்த உச்சிக்கிழான் கோட்டம் என்ற சூரியன் கோயில் கடல்கோளால் அழிந்து விட்ட போதிலும் தமிழகத்தில் தஞ்சை மாவட்டத்தில் உள்ள சூரியனார் கோயில் இன்றும் பொலிவுடன் விளங்கி வருகிறது.

சூரியனார் கோயில் எனும் இத்தலம் தொன்மைச் சிறப்பாலும் புராண வரலாற்றுச் சிறப்பாலும் நவகிரகங்களுக்கென தனித்தமைந்த கோயிற் சிறப்பாலும் தோஷ நிவர்த்திக்காக ஏராளமான மக்கள் வந்து வழிபட்டு வரும் சிறப்பாலும் புகழ் வாய்ந்த தலமாகும்.

### பிரார்த்தனை

நவகிரக தலங்களில் சூரிய தலம் முதன்மையானது என்பதால் இங்கு பக்தர்கள் பெருமளவில் வருகை புரிந்து தங்கள் பல்வேறு கஷ்டங்கள் நீங்க பிரார்த்தனை செய்து கொள்கிறார்கள்.

### தோஷ நிவர்த்தி



ஏழரை ஆண்டுச் சனி, அஷ்டமத்துச் சனி, ஜென்மச் சனியால் தொடரப்பட்டவர்களும் வேறு பிற நவகிரக தோஷமுள்ளவர்களும் சூரியனார் கோயிலுக்கு வந்து பன்னிரண்டு ஞாயிற்றுக் கிழமை காலம் வரை தலவாசம் செய்து வழிபட வேண்டும். அதாவது குறிப்பிட்ட ஒரு ஞாயிற்றுக்கிழமை அதிகாலையிலிருந்து தொடர்ந்து பன்னிரெண்டாவது ஞாயிற்றுகிழமை முடிகிற வரை சுமார் இரண்டரை மாத காலம் (78 நாட்கள்) இத்தலத்திலே தங்கியிருந்து நாடோறும் நவதீர்த்தங்களிலும் நீராடி உபவாசமிருந்து திருமங்கலகுடி பிராணநாதரையும் மங்கள நாயகியையும் இத்தலத்து நாயகர்களையும் முறைப்படி வழிபட்டு வரவேண்டும்.

தத்தமது தோஷத்துக்கான பரிகாரங்களையும் செய்து வரவேண்டும். இப்படிச் செய்து வந்தால் மேற்படி தோஷங்கள் நிவர்த்தி ஆகும்.

சூரிய திசை, சூரிய புத்தி, சூரிய பார்வை, சூரிய தோஷங்கள் உள்ளவர்கள் இங்கு வந்து ஞாயிறு தோறும் வழிபடுகின்றனர்.

இத்தலத்தில் வழிபடுவதால் நவகிரக தோசங்கள் நீங்கும். காரியத் தடை விலகும்.

### நேர்த்திக்கடன்

நாடி பரிகாரம் செய்வது இங்கு விசேசம். நவகிரக ஹோமமம் செய்யலாம். சூர்ய அர்ச்சனை செய்யலாம். சர்க்கரை பொங்கல் அபிசேகம் செய்வது இத்தலத்தின் முக்கிய நேர்த்தி கடனாக கருதப்படுகிறது. நவகிரக தோசம் விலக நவகிரக அர்ச்சனை, நவகிரக அபிசேகம் செய்தல் நல்லது. தவிர அபிசேகம் அர்ச்சனை துலாபாரம், கோதுமை, வெல்லம், விளைச்சல் ஆகியவற்றறை பக்தர்கள் காணிக்கையாக செலுத்துகிறார்கள்.

குழந்தை வரம் வேண்டுவோர் தூளி கட்டி வழிபடுகிறார்கள். இறைவனுக்கு நைவேத்தியம் செய்து பக்தர்களுக்கு பிரசாதம் தரலாம். அன்னதானம் செய்தல், தவிர வழக்கமான அபிசேக ஆராதனைகள் ஆகியவற்றை இத்தலத்துக்கு வரும் பக்தர்கள் முக்கிய நேர்த்தி கடன்களாக செய்கின்றனர்.

### தலபெருமை

சூரியனுக்கு இந்தியாவில் இரண்டே இரண்டு இடத்தில் மட்டுமே கோயில் உள்ளது.

வடக்கே கோனார்க் கோயில். தெற்கே இந்த சூரியனார் கோயில். கோனார்க்கில் உருவ வழிபாடு இல்லை. ஆனால் இந்த சூரியனார் கோயிலில் உருவ வழிபாடு உள்ளது.

கருவறையில் சூர்ய பகவான் மேற்கு முகமாக பார்த்தபடி இடது புறத்தில் உஷா தேவியுடனும் வலது புறத்தில் பிரத்யுஷாதேவி எனும் சாயாதேவியுடனும் நின்றபடி திருமணக் கோலத்தில் காட்சி தருகின்றார். சூரியபகவான் தமது இரு கரங்களிலும் செந்தாமரை மலர்களை ஏந்திப் புன்முறுவலுடன் விளங்குகிறார். சூரிய பகவான் உக்கிரம் அதிகம். அதன் வீச்சை யாராலும் தாங்க முடியாது. ஆகவே அவரைச் சாந்தப்படுத்தும் பொருட்டு குருபகவான் எதிரில் உள்ளார். அதனால்தான் சூரியபகவானை வழிபட முடிகிறது.

மேலும் சூரியனை நோக்கியபடி சூரியனின் வாகனமான குதிரை (அசுவம்) இருக்கிறது. சிவலிங்கத்துக்கு முன்னே நந்தி இருப்பது போல இங்கு குதிரை இருக்கிறது.

நவகிரகங்கள் அனைத்தையும் ஒரே இடத்தில் பார்க்க கூடியதும் நவகிரகமே மூலஸ்தானமாக அமைந்த கோயில் இது. மற்ற நவகிரக தலங்களில் பரிவார தேவதைகளாக மட்டுமே உள்ளனர்.

இங்கு திருமணக்கோலத்தில் 2 மனைவியரோடு சூரியபகவான் உள்ளது சிறப்பு.

உக்கிரமாக இல்லாமல் இங்கு சாந்த சொரூபமாக சூரியபகவான் காட்சி தருவது குறிப்படித்தக்கது.

இத்தலத்தில் பிற கிரகங்கள் அனைத்துக்கும் தனி தனி சந்நிதி உள்ளது.

இங்குள்ள நவகிரகங்கள் எல்லாமே அனுகிரகம் உள்ளதாக இருக்கிறது.

இங்குள்ள நவகிரகங்கள் யாருக்கும் வாகனங்கள் இல்லை. வாகனங்கள் இல்லாது நவகிரக நாயகர்களாக மட்டுமே அருள்பாலிக்கின்றனர்.

திருவாவடுதுறை ஆதீனத்துக்கு சொந்தமான கோயில்இது.

### தல வரலாறு

காலவ முனிவர் என்பவருக்கு தொழுநோய் ஏற்பட்டது. தன் நோய் குணமடையும் வரம் வேண்டி நவகிரகங்களை வேண்டி வழிபட்டார். நவகிரக நாயகர்களும் அவர் கேட்டுக் கொண்டபடி வரமளித்தனர். இதனை அறிந்த பிரம்ம தேவன் கோபம் கொண்டார்.

சிவபெருமானின் ஆணைப்படி எல்லா உயிர்களுக்கும் பாவ புண்ணிய பலன்களை மட்டுமே கொடுக்குமாறு கட்டளையிட்டிருந்தோம். ஆனால் நீங்கள் கீழ்ப்படியாமல் வரம் தரும் அளவுக்கு மீறிச் செயல்பட்டு விட்டீர்கள். எனவே நீங்கள் பூலோகத்தில் தொழுநோய் பீடித்து உழல்வீர்களாக என சாபமிட்டார்.

அதன்படி பூலோகத்தில் வெள்ளை எருக்கு வனத்திற்கு வந்து சிவபெருமானை நோக்கி கடும் தவமிருந்தனர். அவர்கள் முன் சிவபெருமான் தோன்றி இத்தலம் உங்களுடைய தலமாக விளங்கும். பல்வகைத் துன்பங்களையும் பொறுத்துக் கொண்டு உங்களை வழிபடும் பக்தர்களுக்கு நீங்கள் அனுகிரகம் செய்வீர்களாக என அருளினார் என்பதே இத்தலத்தின் வரலாறு ஆகும்.



# கிழக்கு முதலமைச்சரைச் சந்தித்து பேசிய கனடா நாட்டு விசேட பிரதிநிதி

கனடா நாட்டின் விசேட பிரதிநிதி ஜவாத் குரோசி வெள்ளிக்கிழமை கிழக்கு மாகாண முதலமைச்சர் நஜீப் அப்துல் மஜீதை திருகோணமலையில் அமைந்துள்ள அவரது பணிமனையில் சந்தித்து விசேட பேச்சு வார்த்தை நடத்தினார்.

இச்சந்திப்பில் பிரதானமாக கிழக்கில் போருக்கு பின்னரான நிலமை, மக்களின் இயல்பு வாழ்வு, மூவின மக்களின் நல்லுறவு குறித்தும் கலந்துரையாடினார்கள்

இதன் போது முதலமைச்சர் கல்வி-சுற்றுலா மற்றும் கைத்தொழில் துறையினை மேம்படுத்துவதற்கு ஒத்துழைப்பு வழங்குமாறும், விசேடமாக அம்பாறை




மாவட்டத்தின் மருதமுனை பிரதேசத்தில் மேற்கொள்ளப்பட்டு வருகின்ற கைத்தறி (நெசவு) உற்பத்தியை நவீன முறையில் முன்னெடுப்பதோடு ஏற்றுமதி செய்வதற்கான ஒத்தாசைகளை வழங்குமாறும் கேட்டுக் கொண்டார்

இதற்கு தான் முழுமையாக ஒத்துழைப்பு வழங்குவதாக கனடா பிரதிநிதி தெரிவித்தார்.

இச்சந்திப்பில் கிழக்கு மாகாண சபை உறுப்பினரும், கிழக்குமாகாண சபை முஸ்லிம் கங்கிரஸ் குழுத் தலைவருமான தலைவருமான ஏ.எம். ஜெமீலும் கலந்து கொண்டார்.

# பிரசவத்திற்குப் பின் ஹெர்னியா அபாயம்

நவீன அறிவியல் உலகில் நாகரீக மாற்றத்தின் காரணமாக மக்களின் உணவு முறைகளிலும் நிறைய மாற்றங்கள் வந்து விட்டன. அவசரம் என்கிற பெயரில் உடல் ஏற்றுக்கொள்ளாத பலவற்றையும் உணவு என்கிற பெயரில் வயிற்றுக்குள் தள்ளி அடைத்துவிடுகின்றனர். இதன்காரணமாகவே சிறு குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை அனைவருக்கும் வயிற்று வலியில் ஆரம்பித்து குடல் இறக்கம், குடல் வால், மஞ்சட்காமாலை, குடற்புண், ஹெர்னியா எனப் பல உபாதைகளை பெரும்பாலானவர்கள் அனுபவித்து வருகின்ற னர்.

இதுபோன்ற நோய் கள் தற்போது இளம் பெண்களை மிகையாகத் தாக்கி வருவது, பெண்கள் அவதானிக்க வேண்டிய முக்கிய விடயம். முக்கியமாக ஹெர்னியா!


Dr. மாறன்

குடல்வால், பித்தப்பை நீக்குதல், சிசேரியன், கர்ப்பப்பை அகற்றுதல் போன்ற வயிற்றைக் கிழித்து செய்யும் அறுவை சிகிச்சைக்குப் பிறகு பலருக்கு ஹெர் னியா என்கிற குடல் இறக்க நோய் தாக் கும் வாய்ப்புகள் அதிகம்

இந்தமாதிரியான குடல் இறக்கத்தை இன்சிஷனல் ஹெர்னியா என்று கூறுவர். பொதுவாக வயிற்றுப் பகுதியில் சத்திர சிகிச்சை மேற்கொண்டவர்களுக்கு ஆறு மாத காலத்திற்குள் இந்த இன்சிஷனல் ஹெர்னியா வரும். இதற்குக் காரணம் சத்திர சிகிச்சைக்குப் பின்னர் உடலில் நோய்த்தொற்று ஏற்பட்டால், புரதச் சத்து குறைவு ஏற்பட்டால், ரத்தச்சோகையினால், அளவுக்கு அதிகமான வேலைப் பளு அல்லது உடற்பயிற்சியால் இந்த இன்சிஷனல் ஹெர்னியா வரலாம்.

இந்த இன்சிஷனல் ஹெர்னியாவை அல்ட்ராசவுண்ட் ஸ்கேன் மூலம் கண்டு பிடித்துவிடலாம். இதன் முக்கிய அறிகுறி வீக்கமும், வலியும். வீக்கத்தைச் சுற்றி குடல் முறுக்கிக்கொண்டு ரத்த ஓட்டம் தடைப்பட்டு இருந்தால் குடல் அழுகிப் போகும் வாய்ப்பு உண்டு. இவ்வகை ஹெர்னியாவில் குடல் முறுக்கத்தால் எந்த உறுப்பு மாட்டிக்கொண்டிருக்கிறது என்பதைப் பார்த்து கவனமாகச் செயல் படுவது மருத்துவர்கள் கடமை.

சிசேரியன் மூலம் குழந்தை பெற்றுக்கொள்ளும் பெண்களுக்கு இந்த இன்சிஷனல் ஹெர்னியா வரும் வாய்ப்பு அதிகமாக இருக்கி றது. இதற்குக் காரணம் தையல் போட பயன்படுத்தப்படும் பொருள், தையல் போடப்படும் விதம் போன்றவை முக்கிய மானவை. எந்தவகை ஹெர்னியாவாக இருந்தாலும் லேபராஸ்கோபிக் சத்திர சிகிச்சை மூலம் தீர்வு இருக்கிறது. மேலும் நோயாளியின் இதயம், சிறுநீரகம், ஈரல், ரத்தப் பரிசோதனை, சிறுநீர் பரிசோதனை என அனைத்தினது நிலைமையையும் பொறுத்து அதற்கேற்றவாறு லேபராஸ் கோபி சிகிச்சையை செய்யமுடியும்.

அதுபோலவே, குடல்வால்வு வளர்ச்சி யும் பெண்களை வெகுவாகத் தாக்குகிறது. மாதவிடாய் காலங்களில் வயிற்றுவலி வருவதுபோல் இந்த வலியின் தன்மையும் இருப்பதால், பெண்களால் இந்த வலியை வேறுபடுத்திப் பார்க்க முடியாத நிலை உள்ளது. கூர்ந்து அவதானித்தால் இந்த வலியை வித்தியாசப் படுத்தி உணர்ந்து கொள்ளலாம்.



அடிவயிற்றின் தொப்புள் பகுதியில் பொறுக்கமுடியாத வலி ஏற்படும். அந்த வலி வலதுபுறமாக கீழ்நோக்கி நகரும். வலி ஏற்படும்போது வாந்தி, பசி யின்மை தோன்றும். இவ்வாறான அறி குறிகளை அலட்சியப்படுத்தும் சந்தர்ப்பத் தில், நோய் முற்றி, உடனடியாக சத்திர சிகிச்சை மேற்கொள்ளவேண்டிய நிலை உண்டாகிறது. அதன் பின்னும் அலட்சியமாக இருந்தால், இந்நோய் மரணத்தை யும் ஏற்படுத்தலாம்.

ஐந்து வயதினருக்கு கீழ் இருப்பவர்களுக்கும், 60 வயதைக் கடந்துவிட்டவர்களுக்கும் இந்நோய் மிக பாதிப்பானதாக இருக்கும். இப்போது இளம் வயது பெண்களுக்கு அதிகம் பேருக்கு குடல் வால் வீக்கம் வருகிறது. உடனடியாக சத்திர சிகிச்சை மேற்கொள்ளாமல் தள்ளிப் போடும் பெண்களுக்கு குடல் வால்வைச் சுற்றியிருக்கும் உறுப்புகளும் அதோடு சேர்ந்துகொள்ளும். குறிப்பாக பெல்லோபியன் குழாயும் மாட்டிக்கொள்ளும் வாய்ப்பு இருக்கிறது. இதனால் கருமுட்டை கர்ப்பப்பைக்குள் போகமுடியாமல் மலட்டுத் தன்மை ஏற்படலாம்.

இப்போது லேபராஸ்கோபிக் முறையில் அதாவது சாவித்துவார சத்திர சிகிச்சை முறையில் இவற்றுக்கான சிகிச்சைகளைப் பெற்றுக்கொள்ள முடியும். அறுவை இல்லாத சிகிச்சை இது என்பதால், சத்திர சிகிச்சை முடிந்த உடனே நோயாளி எழுந்து நடக்க முடியும் என்பது இதன் தனிச்சிறப்பு. மருத்துவமனையில் தங்கும் அவசியமும் இல்லை.

ஆகையால், குடல் வால் வளரி அல்லது ஹெர்னியா போன்ற வியாதிகளுக்கான அறிகுறிகளை சரியாக அடையாளம் கண்டு அவற்றுக்கு, நவீன மருத்துவம் தந்திருக்கும் லேபராஸ்கோப்பி போன்ற மகத்துவமான சிகிச்சைகளைப் பெற்றுக்கொண்டால், உங்களையும், உங்கள் எதிர்கால சந்ததியினரையும் பாது காத்துக்கொள்ளலாம். விவரங்களுக்கு 0091 44 30113011 என்ற எண்களைத் தொடர்பு கொண்டு அறிந்துகொள்ளலாம்.

# மகப்பேறு குறைபாடும் பெண்களின் வயதும்

செயற்கை முறை கருவூட்டல் பற்றி குழந்தையில்லா தம்பதியினர்களிடையே ஒருவித பயம் இருக்கிறது. அதற்குக் காரணம், செயற்கை என்ற ஒரு வார்த்தையே. இயற்கையாகத் தரிக்காத குழந்தையை செயற்கையாகக் கருத் தரிக்கச் செய்தால், அக்குழந்தை ஆரோக்கியமானதாக இருக்குமா என்பதே இந்தப் பயத்துக்கு மூல காரணம் - இப்படிச் சொன்னவர், சென்னையில் இயங்கிவரும் கர்ப்பரட்சாம்பிகை கருத்தரிப்பு மையத்தின் நிர்வாகியும் பிரபல செயன் முறைக் கருத்தரிப்பு நிபுணருமான டொக்டர் ப்ரியா கண்ணன். செயற்கை முறைக் கருத்தரிப்பு பற்றிய சமூகத்தின் விழிப் புணர்வு எவ்வாறு இருக்கிறது என்று கேட்டபோதே அவர் இவ்வாறு தெரிவித்தார். அவர் மேலும் தெரிவிக்கும்போது...

சுவிட்சர்லாந்து நாட்டில் பிறக்கும் குழந்தைகளில் இரண்டு வீத மான குழந்தைகள் செயற்கை முறை கருவூட்டலில்தான் பிறக்கின்றன என்று மருத்துவ ஆய்வுகள் தெரிவிக் கின்றன.

இப்படி உணர்ந்துகொண்டவர்களுக்கும் கூட, உடனடியாக செயற்கை முறைக் கருத்தரிப்பை மருத்துவர்கள் சிபாரிசு செய்வதில்லை. இத்தகைய குறைபாடுகளுடன் வரும் தம்பதியினரிடம் முதற்கட்ட பரிசோதனைகள் நடத்தப்படுகின்றன. இதில் பெரும்பாலான தம்பதியினருக்கு உரிய மருந்துகள், சிகிச்சைகள் கொடுக்கப்பட்டு இயற்கையான முறையிலேயே குழந்தை பாக்கியம் உண்டாக்கும் முயற்சி எடுக்கப்படும்.

எடுத்துக்காட்டாக, சிலருக்கு ஹார்மோன் பிரச்சினைகள் இருக்கலாம். தைரொய்ட் பிரச்சினைகள் இருக்கலாம். இதுபோன்ற சிக்கல்களுக்கு உரிய சிகிச்சை எடுத்துக்கொண்டாலே குழந்தைப்பேறு உண்டாகிவிடும்.




ஆனால் சிகிச்சைக்குப் பிறகும் கருத் தரிக்கும் வாய்ப்பு தள்ளிக்கொண்டே போகும் தம்பதியினருக்கே இறுதியில் செயற்கை முறை கருவூட்டல் சிகிச்சை மேற்கொள்ளப்படுகிறது. சில தம்பதியினர் ஆரம்பத்திலேயே செயற்கைக் கருவூட்டலை விரும்புகின் றனர். ஏனென்றால் அவர்க ளுக்கு காலம் தாழ்த்துவதில் விருப்பமில்லாமல் இருக்கலாம்.


Dr. ப்ரியா கண்ணன்

பல பெண்கள், முப்பத் தைந்து வயது வரை, குழந்தை பிறக்கலாம் என்ற நம்பிக்கையில் மருத்துவப் பரிசோதனைக்குத் தம்மை உட்படுத்திக்கொள்ளாது விட்டுவிடுகிறார்கள். ஆனால், இது அறிவார்ந்த செயலல்ல. ஏனெனில், இன்றைய பெண்களில் கணிசமானோருக்கு 35 வயதிற்கு உள்ளாகவே மாத விடாய் நின்று விடுகிறது. இதை ப்ரீ மெச்சூர் மெனோபாஸ் என்கிறோம். ஆயினும் கருத்தரிப்பதற்கான ஏனைய வாய்ப்பு கள் அவர்களுக்கு இருக்கும் நிலையில், மாத விடாய் நின்றவர்களுக்கும் கூட அவர்களின் உறவுவழி பெண்களுடைய சினைமுட்டையை எடுத்து கருத்தரிக்கச் செய்கிறோம்.

பொதுவில், மகப்பேற்றுக் குறைபாடுகளுக்கு 30 வீதம் பெண்களும், 30 வீதம் ஆண்களும், 30 வீதம் இருபாலரும் மீதி 10 வீதம் ஆணிலும், பெண்ணிலும் தென்படாத ஆனால் பரிசோதனைகளின் மூலம் கண்டறியக்கூடிய காரணங்களாக இருக்கின்றன. ஆண்களைப் பொறுத்த மட்டில் விந்து தொடர்பான சிக்கல்கள், சர்க்கரை நோய் பாதிப்பு, புகையிலைப் பொருட்களைப் பயன்படுத்துதல், வெப்பம் சம்பந்த மான இடங்களில் பணியாற்றுதல், பரம் பரை ரீதியான குறைபாடுகள், மதுப் பழக்கம் போன்ற காரணங்க ளால் குழந்தையின்மை பாதிப்பு ஏற்படுகிறது. பெண் களுக்கு கர்ப்பப்பை, சினைப்பை, பலோப்பியன் குழாய் போன்ற இனப் பெருக்க மண்டலங்களில் ஏற் படும் குறைபாடுகள், பாதிப் புகள், அடைப்புகள் மற்றும் பொலிஸிஸ்டிக் ஓவரி, தைரொய்ட் கட்டிகள் கிருமித் தொற்று உள்ளிட்ட பாதிப்புகளுடன் மரபு ரீதி யான குறைபாடுகள் மற்றும் உடற் பரு மன் போன்ற காரணங்களால் குழந்தை யின்மை ஏற்படுகிறது.

குறிப்பாக குழந்தையின்மை குறை பாடு உள்ள பெண்களில் 45 வீதத்தினருக்கு கருமுட்டை தொடர்பான குறை பாடுகளே அதிகம் காணப்படுகின்றன. கருத்தடை சாதனங்களைப் பயன் படுத்துவோரில் 20 வீதத்தினருக்கு இதனால் பாதிப்புகள் வரலாம். எளிய சிகிச்சைகள் மூலம் இதைச் சரிசெய்யலாம். என்ன சிகிச்சை என்பதை அறிய 0091 98418 13123, 0091 87544 98680 என்ற எண்களைத் தொடர்புகொள்ளுங்கள்.



# சீனத் தலையீடுகளை முறியடிக்க வியூகம் வகுக்கிறதா இந்தியா?



சீன ஜனாதிபதி ஷீ ஜின்பிங்கின் கொழும்பு பயணத்தை அடுத்து, இலங்கையில் சீனாவின் செல்வாக்கு உயர்ந்திருப்பதை, இந்தியா அதிருப்தியுடன் நோக்கத் தொடங்கியுள்ளது.

கடந்த புதன்கிழமை கொழும்பில் நடந்த நிகழ்வு ஒன்றில் பேசிய இந்திய தூதுவர் யஸ்வந்த் குமார், சின்ஹா, இலங்கையில் இந்தியா மேற்கொள்ளும் திட்டங்களுக்கு உரிய அங்கீகாரம் அளிக்கப்படுவதில்லை என்று வருத்தத்துடன் குறிப்பிட்டிருந்தார். குறிப்பாக வடக்கே இந்திய பயணிகளுக்கு உள்ளூர் ஊடகங்கள் உரிய முக்கியத்துவம் வழங்கவில்லை என்று தெரிவித்தார்.

சாதாரணமாக அவர் அவ்வாறு குறிப்பிட்டிருந்தால் பரவாயில்லை. கிழக்கு குறித்தே இங்கு முக்கியமாக கவனம் செலுத்தப்படுவதாகவும் அவர் குறிப்பிட்டிருந்தார். கிழக்கிற்கு முக்கியத்துவம் அளிக்கப்படுவதாகவும் அவர் குறிப்பிட்டிருந்தார்.

கிழக்கிற்கு முக்கியத்துவம் அளிக்கப்படுவதாக இந்திய தூதுவர் குறிப்பிட்டது, சீனாவைத் தான்.

அண்மையில் சீன ஜனாதிபதி ஷீ ஜின்பிங் கொழும்பு வந்திருந்த போது, இலங்கையுடன் கிட்டத்தட்ட 5 பில்லியன் டொலர் வர்த்தகத்துக்கான உடன்பாடு செய்து கொள்ளப்பட்டது.

இதில் பெரும்பாலானவை சீனாவின் கடன்கள் தான் கொழும்பு துறைமுக நகரத்தின் கட்டுமானத்துக்காக மட்டும், சீனா 1.4 பில்லியன் டொலரை செலவிடவுள்ளது.

ஆனால் இந்தியாவை பொறுத்தவரையில் பெரும்பாலும் தமது உதவிகள் நன்கொடைகளாகவே உள்ளன என்றும், கடன்கள் அல்ல என்பதையும் இந்திய தூதுவர் சுட்டிக்காட்டியிருக்கிறார்.

இந்தியாவுக்கும் இலங்கைக்கும் இடையில் பல விடயங்களில் கருத்து வேறுபாடுகள் அதிகரித்து வருகின்ற நிலையில், சீனாவுக்கும் இலங்கைக்கும் இடையில் நெருக்கம் அதிகரித்து வருகின்றது.

குறிப்பாக, பாதுகாப்பு விடயத்தில் சீனாவுக்கும் இலங்கைக்கும் இடையில் ஏற்பட்டுள்ள புதிய நெருக்கம் இந்தியாவை கவலை கொள்ள வைத்திருக்கிறது.

இம்மாத நடுப்பகுதியில் சீன அதிபர் கொழும்பு வந்திருந்த போது இரு நாடுகளுக்கும் இடையிலான பாதுகாப்பு உறவுகளையும், ஒத்துழைப்புகளையும் மேலும் விரிவாக்கிக் கொள்வது குறித்த இணக்கப்பாடு காணப்பட்டது.

அதில் முக்கியமானது, உதவி அல்லது பிரதி அமைச்சர் மட்டத்திலான பாதுகாப்பு உறவுகளை வலுப்படுத்திக் கொள்வது குறித்து சீனாவுக்கும் இலங்கைக்கும் இடையில் ஏற்பட்டுள்ள உடன்பாடு ஆகும். இந்த இணக்கப்பாடு அமையவே கடந்த வாரம் பாதுகாப்பு செயலாளர் கோத்தாபய ராஜபக்ச சீனாவுக்குச் சென்றிருந்தார்.

கடந்த செவ்வாய்கிழமை பெய்ஜிங்கில் சீனாவின் மத்திய இராணுவ ஆணைக்குழுவின் உதவித் தலைவர் ஜெனரல் சூ குய்லியாங்குடன் கோத்தாபய ராஜபக்ச பாதுகாப்பு மற்றும் இராணுவ ஒத்துழைப்புகளை வலுப்படுத்துவது குறித்து பேச்சுவார்த்தை நடத்தியிருந்தார்.

ஜெனரல் சூ குய்லியாங் கடந்த மே மாத நடுப்பகுதியில் தான் இலங்கைக்குப் பயணம் மேற் கொண்டு இரு தரப்பு பாதுகாப்பு உறவுகளுக்கு புதிய அடிதளத்தை இட்டுச் சென்றிருந்தார்.

குறிப்பாக, சீனாவின் வான் பொறியியல் ஏற்றுமதி இறக்குமதி கூட்டுத்தாபனத்தின் சார்பில் திருகோணமலையில் விமான பராமரிப்பு நிலையத்தை அமைப்பதற்கான திட்டம் இவருடையது தான்.

இவரது வருகைக்கு பின்னர் எட்டப்பட்ட உடன்பாட்டுக்குப் பின்னரேயே விமான பராமரிப்பு நிலையத்தை அமைப்பதற்கு அமைச்சரவையில் அனுமதி அளிக்கப்பட்டது.

ஆனால் அதற்குள் இந்தியா விழித்துக் கொண்டது.

புதுடில்லி சென்றிருந்த இந்திய வெளிவிவகார அமைச்சர் ஜி.எல்.பீரிஸிடம் திருகோணமலையில் சீன நிறுவனத்தின் விமான பராமரிப்பு நிலையத்தை அமைக்க இடமளிக்கப்பட்டுள்ளதா? என்று இந்திய வெளிவிவகார அமைச்சர் சுஸ்மா சுவராஜ் கேள்வி எழுப்பியிருந்தார்.

இந்தியாவின் நலனுக்கு விரோதமாக துறைமுகங்களையோ விமான நிலையங்களையோ வேறு நாடுகளுக்கு வழங்க மாட்டோம் என்று 1987ம் ஆண்டு இந்திய பிரதமர் ராஜீவ் காந்திக்கு அப்போதைய ஜனாதிபதி ஜே.ஆர்.ஜயவர்தன் கடிதமூலம் உறுதியளித்திருந்தார்.

அந்தக் கடிதம் இந்திய – இலங்கை உடன்பாட்டின் ஒரு அங்கமாகவே இருக்கிறது அதை மீறுவது இலங்கைக்கு ஆபத்தை ஏற்படுத்தும் உன்று இராஜதந்திரிகள் பலரும் சுட்டிக்காட்டியிருந்தனர்.

இந்நிலையில் சீனாவின் வான் பராமரிப்பு நிலையத்தை திருகோணமலை தவிர வேறு எங்காவது அமைக்க அரசாங்கம் திட்டமிட்டுள்ளது.

பெரும்பாலும் ஹிங்குராகொடவில் இது அமைக்கப்படலாம் என்று கூறப்படுகிறது.

அதேவேளை சீன ஜனாதிபதியின் வருகையின் போது இலங்கை கடற்படைக்கு போர்க்கப்பல் ஒன்றை வழங்குவது குறித்தும் இணக்கம் காணப்பட்டதாக தகவல்கள் வெளியாகின.

அது மட்டுமின்றி எவ் 17 ரகத்தைச் சேர்ந்த தண்டர்போல்ட் எனப்படும் ஜெட் போர் விமானங்களை வழங்குவதற்கும் சீனா விருப்பம் கொண்டுள்ளது.

அதாவது இலங்கையை முற்றிலும் சீனாவில் தங்கியுள்ள நாடாக மாற்றுவதே அந்த நாட்டின் திட்டமாகும்.

கடற்படை விமானப்படை இராணுவம் என்று எல்லாவற்றிலும் சீனாவின் ஆயுத பாடங்களை புகுத்துவதன் மூலம் நிரந்தரமாகவே இலங்கை தன் மீது சார்ந்திருக்க வேண்டிய நிலையை ஏற்படுத்த முனைகிறது சீனா.

அதற்கு கோத்தாபய ராஜபக்சவின் அண்மைய பயணம், முக்கியமானதொரு அடிக்கல்லாகும்.

சீனாவின் இந்தத் திட்டம் நிறைவேறினால், சீனாவுக்கு இரண்டு வித இலாபம் கிடைக்கும்.

ஒன்று வர்த்தக ரீதியானது அடுத்தது பாதுகாப்பு ரீதியானது. இந்த இரண்டு நலன்களுமே இந்தியாவுக்கு ஆபத்தானது.

இவ்வாறாக சீனாவின் வியூகத்துக்குள் இலங்கை சிக்கிக் கொள்ளத் தொடங்கியுள்ள நிலையில் இந்தியாவுக்கும் இலங்கைக்கும் இடையிலான உறவுகளில் விரிசல்கள் அதிகமாகி வருகின்றன.

சீனாவின் தலையீடுகளால் மட்டுமின்றி 13வது திருத்தச்சட்டத்தை நடைமுறைப்படுத்துவது உள்ளிட்ட இந்தியாவுக்கு கொடுக்கப்பட்ட வாக்குறுதிகளைக் காப்பாற்றுவதற்கும் இலங்கை தவறியுள்ளது.

நரேந்திர மோடி அரசாங்கம் பதவிக்கு வந்த பின்னர் கடந்த நான்கு மாதங்களில் ஜனாதிபதி மஹிந்த ராஜபக்சவிடமும் வெளிவிவகார அமைச்சர் ஜி.எல்.பீரிசிடமும் இதுபற்றி பேசப்பட்டுள்ளது.

ஆனால் தமது நிலைப்பாட்டை மாற்றிக் கொள்ளும் எண்ணம் அரசாங்கத்திடம் இல்லை. இந்நிலையில் நியூயோர்க்கில் ஐ.நா பொதுசபைக் கூட்டத்திலன் பக்க நிகழ்வாக நடக்கும் சந்திப்பிலும் ஜனாதிபதி மஹிந்த ராஜபக்சவிடம் 13வது திருத்தச்சட்டத்தை நடைமுறைபடுத்துவதற்கு இந்திய பிரதமர் நரேந்திர மோடியால் அழுத்தம் கொடுக்கப்படும் என்ற எதிர்பார்ப்பு எழுந்துள்ளது.

இதற்கிடையே பெரும்பாலும் சத்தமேயில்லாமல் கொழும்பில் இருந்து ஒருவர் கடந்த வாரம் புதுடில்லி சென்றிருந்தார்.

அவர் தான் முன்னாள் அமைச்சர் மிலிந்த மொறகொட. அவர் ஜனாதிபதி ராஜபக்சவின் ஆலோசகர் என்பது குறிப்பிடத்தக்கது.

அமெரிக்கா மற்றும் இந்தியாவுடனான உறவுகளில் நெருக்கடி ஏற்படுகின்ற போது அவற்றை தீர்க்கும் மறைமுக பணிகளில் ஈடுபட்டு வருபவர்தான் மிலிந்த மொறகொட.

இவருக்கு இரு நாடுகளிலும் செல்வாக்குள்ள நண்பர்கள் அதிகம் உள்ளனர். இரு நாடுகளிலும் ஆட்சியாளர்களுக்கு நெருக்கமான ஆலோசனைகளை வழங்குகின்ற சிந்தனையாளர் குழாம் மத்தியில் இவருக்கு தொடர்புகள் உள்ளன.

இந்திய அரசாங்கத்தின் அழைப்பின் பேரில் புதுடில்லி சென்ற மிலிந்த மொறகொட கடந்த 22ம் திகதி இந்தியாவின் தேசிய பாதுகாப்பு ஆலோசகர் அஜித்குமார் டோவலை சந்தித்து பேசியதாக கூறப்படுகிறது.

இந்திய வெளிவிவகார அமைச்சர் சுஸ்மா சுவராஜ் மற்றும் இந்தியாவின் வெளிவிவகார செயலர் சுஜாதா சிங் ஆகியோரும் இவரது சந்திப்பு பட்டியலில் இடம்பெற்றிருந்தனர். எனினும் இந்த சந்திப்புகள் நடந்தனவா என்பதை உறுதிப்படுத்த முடியவில்லை.

இந்திய அரசாங்கத்தின் அழைப்பின் பேரில் மிலிந்த மொறகொட புதுடில்லி சென்றிருந்தது சாதாரண விடயமல்ல. அதுவும் கோத்தாபய ராஜபக்ச சீனா சென்றிருந்த போதே இவர் புதுடில்லிக்கு அழைக்கப்பட்டிருந்தார்.

கோத்தபாயவின் சீன பயணம் பற்றிய தகவலை அரசாங்கம் அதிகார பூர்வமாக வெளியிடவில்லை.

சீன செய்தி நிறுவனங்கள் தான் அதை பகிரங்கப்படுத்தின. கோத்தபாய சீனா சென்றிருந்த நிலையில் சீனாவுடனான உறவுகள் நெருக்கமடைந்துள்ள நிலையில் மிலிந்த மொறகொட புதுடில்லிக்கு மேற்கொண்ட பயணம் முக்கியத்துவம் பெறுகிறது.

ஏற்கனவே கடந்த பெப்ரவரி மாதம் மிலிந்த மொறகொட புதுடில்லி சென்று அப்போதைய இந்திய தேசிய பாதுகாப்பு ஆலோசகர் சிவ்சங்கர் மேனனை சந்தித்தார்.

அதற்கு பின்னர் தான் ஐ.நா மனித உரிமைகள் பேரவையில் இலங்கைக்கு எதிரான தீர்மானத்துக்கு ஆதரவளிக்க மறுத்தது இந்தியா.

தற்போது மிலிந்த மொறகொடவை புதுடில்லிக்கு அழைத்திருப்பது இந்தியாதான். எனவே சீனாவுடன் இலங்கை கொண்டுள்ள நெருக்கத்தை உடைப்பதற்காக இவர் பயன்படுத்தப்படவுள்ளாரா? அல்லது வேறேதும் திட்டத்துக்காக அழைக்கப்பட்டுள்ளாரா? என்று தெரியவில்லை.

ஆனால் இலங்கையின் சீன தலையீடுகளை இந்தியா விரும்பாதுள்ள நிலையில் மிலிந்த மொறகொடவை பயன்படுத்தி தனக்கு சாதகமான நிலையை உருவாக்க இந்தியா முனையலாம் ஆனால் அது எந்தளவுக்கு பயனளிக்கும் என்று தெரியவில்லை.

# கரு உண்டாவதை தடுக்குமா ஆணுறைகள்?

ப்ராஜன், மிஸிஸாகா.

கேள்வி: எதிர்வரும் பெப்ரவரி மாதம் எனக்குத் திருமணம் நிச்சயித்திருக்கிறார்கள். முதலிரவை முழுமையாக்க ஏதேனும் ஆலோசனைகள் தர முடியுமா?

பதில்: நிச்சயமாக. முதலிரவு என்றால் கலவியில் ஈடுபடுதல் என்ற எண்ணமே இன்று பலரிடமும் காணப்படுகிறது. ஆயினும், அந்த இரவுதான், சுமார் ஐம்பது வருடங்கள் வரை நீளப்போகும் உங்கள் திருமண வாழ்க்கையின் துவக்கம். அந்தத் துவக்கத்தை இனிதே துவக்கி விட்டீர்களானால், பெருமளவு பிரச்சினைகளைத் தவிர்க்கலாம். ஆண், பெண் - இருபாலருக்கும் பொதுவாக இந்த ஆலோசனைகள் அமைகின்றன.

முதலிரவு நடக்கப் போகும் இடத்தைப் பற்றி உங்கள் வீட்டாருடன் பேசுங்கள். கல்யாணம் நடைபெறும் மண்டப அறையிலா, ஹோட்டலிலா, வீட்டிலா என்று கேளுங்கள். புதிய இடம் உங்களுக்குப் படபடப்பை ஏற்படுத்தும் என்று நீங்கள் உணர்ந்தால், நீங்கள் விரும்புகிற இடத்தை அவர்களிடம் தெரிவியுங்கள். வீட்டில் முதலிரவு நடைபெறுவதைப் பெரும்பாலும் தவிர்ப்பது நல்லது. அது உங்களுக்கு முழுச் சுதந்திரத்தை அளிக்கும்.

பெண், முதலிரவு தினத்தன்று மாதவிடாய் வராமலிருக்கத் தேவையான நடவடிக்கைகளை எடுக்க வேண்டும். மாதவிடாயைத் தள்ளிப்போடவென்றே மருந்துகள் தற்போது சந்தையில் உண்டு. ஆயினும், அவை பற்றி மருத்துவருடன் கலந்தாலோசியுங்கள். நீங்களாக ஏதேனும் மருந்து எடுத்துக்கொள்வது அபாயமானது.

முதலிரவை திருப்தியாக அனுபவிக்க விரும்பினால், அன்றைய தினம் அதிகம் சாப்பிட வேண்டாம். சாப்பிடும் உணவும் நெடி குறைந்ததாக இருக்குமாற்போல் பார்த்துக்கொள்ளுங்கள். அதேநேரம், அதீத முன்னெச்சரிக்கையாக சாப்பிடாமலும் சென்றுவிடவேண்டாம்.

அன்றைய இரவை ஆரம்பிப்பதற்கு சற்று முன்னதாக ஒருமுறை குளித்துவிடுங்கள். அது உங்களைப் புத்துணர்ச்சியாக்கும் அதேவேளை, தேவையற்ற வாசனையையும் துர்நாற்றத்தையும் போக்கிவிடும். குளித்தபின், காது மடலின் பின்புறம் மிகக் குறைவாக வாசனைத் திரவியத்தைப் பூசிக்கொள்ளுங்கள். குளிப்பதால் உடல் சற்று ஈரலிப்பாக இருப்பது நீடித்த உறவுக்குப் பேருதவியாக இருக்கும். பெண்கள், குளித்த பின் அதீத ஒப்பனையைத் தவிர்த்து விடுவது நல்லது.

பெரும்பாலும், நமது கலாச்சாரப்படி முதலிரவன்று வேட்டி, சேலைதான் அணிவர். ஆயினும், சேலையாக இருந்தாலும் வேறு ஆடை வகையாக இருந்தாலும் அது உடலை உறுத்தாமல் இருக்கவேண்டும். நகைகளையும் குறைவாகவே அணிந்து கொள்ளுங்கள். முக்கியமாக, கூரிய முனைகளைக் கொண்டதும், கனமானதுமான நகைகள் வேண்டாம். அது, முக்கியமான தருணங்களில் காயங்களை ஏற்படுத்திவிடக்கூடும் என்பதோடு, உங்கள் கவனத்தை திசைதிருப்பிவிடவும் கூடும். அதுபோலவே, படுக்கை அலங்காரங்கள், படுக்கை விரிப்புகள் என்பவற்றிலும் உங்களுக்கு நெருடலை ஏற்படுத்தக்கூடிய எந்தவிதமான வஸ்துவும் இல்லை என்பதையும் உறுதிப்படுத்திக்கொள்ளுங்கள்.

முதலிரவன்றே உறவில் ஈடுபட்டுத்தானாக வேண்டும் என்று அவசியமில்லை. நீங்கள் இருவரும் ஒருவருக்கொருவர் அறிமுகமில்லாதவர்கள் எனில், முதலில் உங்கள் விருப்பு, வெறுப்புகளைப் பற்றிப் பேச அந்த இரவை உபயோகப்படுத்திக் கொள்ளலாம். பேச்சின் பின், பரஸ்பரம் இருவரும் உறவுப்புள்ளிக்கு வந்தபின், சிறிது நேரத்தை முன்விளையாட்டில் செலவழித்தபின் கலவியில் இறங்கலாம். அதைவிடுத்து உணர்ச்சி வேகத்தில் உடனடியாக உறவில் ஈடுபட முயற்சிக்காதீர்கள்.

முதல் முறை உறவில் ஈடுபடும் பெண்களுக்கு வலி இருக்கலாம். அதைப் பற்றியே நினைப்பது வலியை இன்னும் அதிகமாக்கத்தான் செய்யும். வலி இருக்கும் என்று நினைப்பவர்கள், வலியையும், வறட்சியையும் குறைக்க பெட்ரோலியம் ஜெல்லி அல்லது தேங்காய் எண்ணெய் உபயோகிக்கலாம்.

உங்களுக்குள் உங்கள் முதலிரவு பற்றி ஒரு எதிர்பார்ப்பு இருக்கும். உங்களது அனுபவம் அதை மிஞ்சவும் செய்யலாம். ஏமாற்றமாகவும் அமையலாம். போகப் போக அது சரியாகி விடும்.

இவையனைத்தையும் விட முக்கியமாக, தேவையற்றவர்களின் அனாவசிய அனுபவங்களையும், அறிவுரைகளையும்



கேட்டுக் குழப்பிக் கொள்ளாதீர்கள். ஒவ்வொருவரது அனுபவம் ஒவ்வொரு மாதிரியாக இருக்கும். இங்கே குறிப்பிடப்பட்டிருப்பவை பொதுவாகக் கவனம் செலுத்தவேண்டிய குறிப்புகளே.

★★★★★★★★★★★★★★★★★★

ரிக் கோவாஸ், ஒட்டாவா.

**கேள்வி: நான் இன்னும் திருமணமாகாதவன். எனக்கு நண்பிகள் அதிகம். அதனால் பாதுகாப்பான உறவுக்காக மட்டுமன்றி கரு உண்டாவதைத் தவிர்ப்பதற்காகவும் ஆணுறைகளையே பயன்படுத்தி வருகிறேன். ஆனாலும், அவை நூறு சதவிகிதம் பாதுகாப்புத் தராது என்று கேள்விப்படுகிறேன். அது உண்மைதானா?**

(இந்தக் கேள்வி ஆங்கிலத்தில் கேட்கப்பட்டிருந்தது. வாசகர்களுக்காகத் தமிழாக்கம் செய்யப்பட்டிருக்கிறது. இதைக் கேட்டவர் இதை நிச்சயம் வாசிப்பார் என்று நம்புகிறோம்)

பதில்: நம்மில் பலர் ஆணுறையை நம்பலாம் என்று நம்பி ஏமாந்து போவார்கள், சிக்கலில் மாட்டிக் கொள்கிறார்கள்.

குழந்தைப் பிறப்பைத் தடுக்க மட்டுமல்லாமல், எச்ஐவி முதலான பாலியல் நோய்களைத் தடுக்கவும் முக்கிய சாதனமாக விளங்குவது ஆணுறைகள். பெரும்பாலான ஆணுறைகள் சிறப்பாகவே இருக்கும். ஆனால் ஆணுறைகளை முழுமையான பாதுகாப்பாக கருத முடியுமா என்றால் இல்லை என்றே சொல்லவேண்டும். அதாவது 85 சதவீத அளவுக்குத்தான் ஆணுறைகளை நம்பலாம். ஆணுறைகளைப் பயன்படுத்தினால் கர்ப்பமாவதைத் தடுக்க முடியும் என்று உறுதியாக கூற முடியாது என்பது நிபுணர்களின் வாதம்.

பின், இதற்கு என்னதான் செய்யலாம்?

பாதுகாப்பான உடலுறவுக்குத் தயாராகிவிட்ட பின்னர் ஆணுறைகளைப் பயன்படுத்தி வழக்கம் போல உறவில் ஈடுபடுங்கள். உறவு முடிந்ததும், கர்ப்பத்தடை மாத்திரைகளை தவறாமல் எடுத்துக்கொள்ளுங்கள். இவற்றைப் பயன்படுத்துவது குறித்து முன்பே மருத்துவர்களிடம் உரிய ஆலோசனை எடுத்துக் கொள்ள வேண்டியது அவசியமாகும். அதே சமயம், இதை ஒரு பழக்கமாக மாற்றிக் கொள்வதையும் தவிர்ப்பது மிக மிக அவசியம்.

ஆணுறைகள் லேட்டக்ஸ் அல்லது பொலியுரிதீன் என்ற வேதிப் பொருளால் தான் தயாரிக்கப்படுகிறது. இதன் மூலம் எர்பஸ், சிலமிடியா அல்லது ட்ரைகோமோனியாஸிஸ் போன்ற சில பாலியல் நோய்களைத் தடுக்க முடியும். அதேசமயம், தோல் மூலம் பரவும் நோய்கள், குறிப்பாக ஆண் மற்றும் பெண் உறுப்புகள் மூலம் பரவும் நோய்களை அது தடுக்க முடியாது.

அதேபோல விலங்குகளின் திசுக்களிலிருந்து தயாரிக்கப்பட்ட ஆணுறைகளையும் பயன்படுத்துவதைத் தவிர்ப்பது அவசியம்.

எச்ஐவியை முழுமையாக ஆணுறைகள் தடுக்கும் என்று கூற முடியாது. ஆண் அல்லது பெண் இருவரில் யாராவது ஒருவருக்கு எச்ஐவி பாதிப்பு இருந்தால், ஆணுறைகளைப் பயன்படுத்தினால் கூட அது பரவும் வாய்ப்பு உள்ளது.

பாதுகாப்பான, முறையான உடலுறவே நோய்களைத் தேடிப்போகாமல் தடுத்துக்கொள்ள ஒரே வழி. சில நேரம் ஆணுறைகள் பாதியிலேயே கிழிய வாய்ப்புண்டு. இதனால் விந்தணுக்குள் பெண்ணுறுப்பை ஊடுறுவிச் செல்லும் வாய்ப்புகள் உண்டு. சிலர் சரிவர ஆணுறையைக் கையாளத் தெரியாமல் பயன்படுத்தலாம். அல்லது, ஆண்குறியில் இருந்து ஆணுறை கழன்றுவிடவும் வாய்ப்பு உள் ளது.

எனவே உடலுறவு க்குத் திட்டமிடும்போது பாதுகாப்பான முறையில் அதை அமைத்துக் கொள்வதே நல்லது. அதைவிட இலகுவானது, பாலியல் பங்குதாரராக ஒருவரையே தேர்ந்தெடுப்பது.

★★★★★★

கே.எஸ்.,
அல்பேர்ட்டா.

**கேள்வி: எனக்கு வயது 28. எனக்குத் திருமணமாகி இரண்டு ஆண்டுகள் ஆகின்றன. கொஞ்ச நாட்களாக என்னுடனான தாம்பத்திய உறவைத் தவிர்ப்பதாகத் தோன்றுகிறது. ஆனால், வீட்டில் இருந்தபடியே இணையதளம் மூலமாகத்தான் உழைக்கிறார். ஆகையால், வேறு தொடர்புகள் இருக்கவும் வாய்ப்புகள் இல்லை. என்ன செய்வதென்று புரியவில்லை.**

பதில்: கவலைப்படாதீர்கள். அப்படி இருப்பதால் மட்டும் அவருக்கு செக்ஸ் உறவில் நாட்டம் இல்லை என்று அர்த்தம் இல்லை. நாம்தான் எதையும் கேட்டு வாங்கவேண்டுமா, அவளாகக் கேட்கட்டுமே என்ற எண்ணத்தினால் கூட அப்படி இருக்கக் கூடும். இல்லாவிட்டால் ஏதாவது தயக்கமாகக் கூட இருக்கலாம். எனவே, அவரின் மனதில் என்ன உள்ளது என்பதை சின்ன சின்ன சில்மிஷங்கள் மூலம் நாம் அறிந்து உறவுக்குள் புகலாம்.




நீங்கள் இப்படிச் செய்து பாருங்கள்.

சொக்கவைக்கும், உணர்ச்சியைத் தூண்டக்கூடிய உள்ளாடைகளுக்கு மாறுங்கள். நிச்சயம் உங்களவர் திசை திரும்புவார். சிலவேளைகளில், உங்களை ஒரே மாதிரியாகப் பார்த்துக்கொண்டிருப்பதால் - அதுவும் வீட்டிலேயே இருந்து வேலை செய்வதால் - உங்களை வித்தியாசமாகக் காட்டுங்கள்.

ஒரு பின் அந்திப்பொழுதில் ஒரு குளியல் போட்டு தலையில் ஈர மேனியாக அவர் முன்னால் நடமாடுங்கள். ஆடைகள் சற்றுக் குறைவாகவும், நழுவி விழும் நிலையில் இருந்தாலும் பரவாயில்லை. எப்பொழுதும் பார்த்த மனைவிதான் என்றாலும், அந்த நிலையில் உங்களைப் பார்க்கும்போது அவருக்கு நிச்சயமாக ஆசை முளைவிடும்.

முடிந்தவரை படுக்கை அறையில் கருப்பு அல்லது சிவப்பு நிற உடையை அணியுங்கள். பாலுணர்வைத் தூண்டுவதில் இந்த இரண்டு நிறங்களுக்கும் ஏகப்பட்ட பங்கு இருக்கிறது. உங்களவரை நெருங்கி உட்கார்ந்து, அல்லது படுத்தபடி பாலுறவைப் பற்றியோ, இரட்டை அர்த்த வசனங்களையோ பேசுங்கள், சைகைகளைச் செய்யுங்கள். ஏதேனும் காயம் அல்லது வலி இருப்பதாக அங்கங்களைக் காட்டுங்கள். பேச்சை விட சைகைகளுக்கு நிறைய சக்தி உண்டு. எனவே இது நிச்சயம் பயன்கொடுக்கும்.

நெருங்கி உட்கார்ந்து கைகளால் அவரைத் தழுவுங்கள் மென்மையாக. சின்னச் சின்ன வருடல்கள், முத்தம், ஒற்றை விரலால் உடல் முழுவதும் நர்த்தனம் செய்யுங்கள். இப்படிச் சின்ன சின்னதாக செய்து உங்களவருக்கு ஆசை மூட்டுங்கள்.

இதுவே ஆணாக இருக்கும் பட்சத்தில், பெண்ணின் உடலிலேயே உணர்வுகளைத் தூண்டக்கூடிய சில முக்கிய இடங்களில் முதுகும் ஒன்று. அங்கு உங்களது கை விரல்களை சில விநாடிகள் விளையாட விட்டால், நிச்சயம் பலன் கிடைக்கும்.

உங்கள் மனைவியின் காது மடல்களுடன் சில நிமிடம் விளையாடுங்கள். நெருங்கிச் சென்று லேசாக முணுமுணுத்தபடி பேசினாலே அவருக்கு நிச்சயம் அவருக்கு ஆசை கிளம்பி விடும்.

சின்னச் சின்னதாக முத்தமிடுவது நிறைய பலன் தரும். பெண்ணின் கழுத்தில் நிறைய விஷயம் இருக்கிறது. கைகளால் அங்கு நீங்கள் நர்த்தனம் ஆடினால், கழுத்தின் பின்பக்கத்தில் லேசாக முத்தமிட்டால், வரு டிக் கொடுத்தால், மயங்காத பெண்ணும் மயங்குவர். உடனடி உறவுக்கான அனுமதி இந்த இடத்தில்தான் கிடைப்பதாக செக்ஸோலஜிஸ்ட்கள் கூறுகிறார்கள்.

உங்களவரின் கால்களை இதமாகப் பிடித்து விடுங்கள். பாதங்களில் மசாஜ் செய்யுங்கள், விரல்களை சொடுக்கி எடுங்கள்-வலிக்காமல். குதிகால், பாதம், முழங்காலின் பின்பகுதி ஆகியவற்றில் உங்கள் விரல்கள் விளையாடும் விதத்தைப் பொறுத்து வேகமான உறவுக்கு உத்தரவாதம் கூடும்.



**அந்தரங்க அற்புதம்**

கட்டுரை தொடர்பான தங்களுடைய கருத்துக்களையும் உங்களுக்குத் தேவைப்படும் அந்தரங்க ஆலோசனைகளையும் அனுப்ப வேண்டிய முகவரி

அந்தரங்க மனவள ஆலோசகர்:
அந்தரங்க அற்புதம் பகுதி

மின்னஞ்சல்:
antharangaminfo@gmail.com

# தொழில்நுட்பம்

## சின்னப்புள்ளி, 100 கோடி பக்கங்கள்!




**க**ணனிகளில் தகவல்களைச் சேமித்து வைக்க ஹார்ட் டிஸ்க் எனப்படும் நினைவுத்தகடு பயன்படுத்தப்படுகிறது. இதே போல செல்போன்கள், டிஜிட்டல் கெமராக்கள் போன்றவற்றில் தகவல்களைப் பதிவு செய்ய மெமரி கார்ட் வசதி உள்ளது. கொள்திறனுக்கு ஏற்ப இந்த நினைவுத்தகடுகள் கிடைக்கின்றன.

ஆரம்ப காலகட்டங்களில் இந்த நினைவுத்தகடுகள் அள வில் பெரிதாக இருந்தன. தொழில்நுட்பம் வளரவளர சிறிய தபால் முத்திரை அளவே உள்ள மெமரி கார்டில் பல நூறு பக்கங்கள் உள்ள தகவல்களைச் சேமிக்கும் வசதி உருவானது. இப்போது நானோ தொழில்நுட்பம் கண்டுபிடிக்கப்பட்ட பிறகு இதை விடப்பல மடங்கு சேமிப்பு வசதி, ஆனால் மிகச் சிறிய மெமரி கார்ட் என்ற அளவில் முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது.

இந்த வகையில் வந்துள்ள புதிய தொழில்நுட்பம் தான் நானோ டொட்ஸ். அமெரிக்காவின் வடக்கு கரோலினா பகுதியைச் சேர்ந்த விஞ்ஞானிகள் இந்த நானோ டொட் தொழில்நுட்பத்தைக் கண்டுபிடித்துள்ளனர்.

நானோ தொழில்நுட்பத்தில் தயாரிக்கப்பட்டுள்ள இந்த மெமரி கார்ட் என்பது ஒரு சதுர அங்குலம் அளவில் இருக்கும். இந்தச் சிறிய சிப்பில் லட்சக் கணக்கான நானோ டாட்கள் இடம் பெற்று இருக்கும். இவை காந்த தொழில்நுட்பத்தில் இயங்கும். அடுத்த கட்டமாக லேசர் தொழில்நுட்பத்தில் இதை இயக்கும் வகையில் ஆய்வுகள் நடக்கிறது. இந்த ஆய்வுகள் வெற்றி பெற்றால் இதைவிட அதிகளவில் தகவல்களைச் சேமிக்கும் வகையில் ஹார்ட் டிஸ்க்குகள் மற்றும் மெமரி கார்ட்கள் தயாரிக்கப்படும்.

## விண்வெளிப் பழமாகும் ஸ்ட்ரோபெர்ரி



**ஸ்**ட்ராபெர்ரி பழத்தின் சிறப்பு அதன் சுவைதான். தக்காளி போன்று இனிப்பும், லேசான புளிப்பும் கலந்த வினோத சுவையுடையது. தோற்றத்திலும் கொஞ்சம் கொல்லாம்பழம், கொஞ்சம் ஆப்பிள் கலந்ததுபோல் இருக்கும். தற்போது ஸ்ட்ராபெர்ரிப் பழத்துக்கு புதிய பெருமை கிடைத்துள்ளது.

விண்வெளி என்பது விசித்திர சூழல் கொண்டது. அங்கு உயிரினங்கள் வசிக்கவோ, தாவரங்கள் செழிக்கவோ வழியில்லை. ஆனால் விண்வெளியில் செயற்கை சூழலில் தாவரங்களை வளர்க்கும் முயற்சியில் விஞ்ஞானம் நீண்டகாலமாக முயன்று வந்துள்ளது. தக்காளி, சர்க்கரை வள்ளிக்கிழங்கு, காட்டாமணக்கு என்று பல தாவரங்களை வளர்த்து சோதிக்கப்பட்டு உள்ளது. அதில் தாவரங்களுக்கு நல்ல வளர்ச்சியும், விளைச்சலும் கிடைப்பதுடன் கூடுதல் சுவையும் இருப்பது ஆய்வில் தெரியவந்துள்ளது.

இந்த வரிசையில் ஸ்ட்ராபெர்ரி பழத்தை விண்வெளியில் வெகுசுலபமாக வளர்க்கலாம் என்று தற்போது கண்டுபிடிக்கப்பட்டு உள்ளது. எளிதான பராமரிப்பு, குறைந்த ஆற்றல் செலவிலேயே ஸ்ட்ராபெர்ரி செடியை விண்வெளியில் வளர்க்க முடியும். அமெரிக்காவைச் சேர்ந்த பெர்டியூ பல்கலைக்கழக ஆய்வாளர் கேரி மிட்செல் பல்வேறு வகை தாவரங்களை ஆய்வுக்கு உட்படுத்தி இதை கண்டுபிடித்துள்ளார்.

ஹசீஸ்கேப்ஹ வகை ஸ்ட்ராபெர்ரி பழம் விண்வெளியில் வளர்க்க ஏற்றதாக தெரிகிறது. எதிர்காலத்தில் விண்வெளி (உணவுப்) பழவகை என்றால் அது ஹஸ்ட்ராபெர்ரி' என்ற சிறப்பு கிடைத்தால் ஆச்சரியப்படுவதற்கில்லை!

## பெய்யெனப் பெய்யும் மழை!



**வி**ஞ்ஞானம் ஏற்கனவே செயற்கை மழை பெய்விக்கும் முறையைக் கண்டுபிடித்திருந்தது. குறிப்பிட்ட அளவில் பெரிதான இயற்கை மேகத்திரள் இருந்தால்தான் இந்த முறையில் மழை பெய்விக்க முடியும்.

தற்காலத்தில் காலம் தவறிப் பெய்து வரும் மழை, தண்ணீரின் அவசியத்தை நன்கு உணர வைத்திருக்கிறது. எனவே விரும்பிய நேரத்தில் மழையை வரவழைக்க வேறு வழி உண்டா? என ஆராய்ந்த விஞ்ஞானிகள் தற்போது முக்கியக் கட்டத்தை எட்டி உள்ளனர். அதாவது செயற்கையாக மேகத்தை உருவாக்க முடியும் என்று ஆய்வாளர்கள் கண்டுபிடித்திருக்கிறார்கள். இதனால் மழையை விரும்பும் நேரத்தில் வரவழைக்கலாம் என்ற நம்பிக்கை பிறந்திருக்கிறது.

சுவிட்ஸர்லாந்து நாட்டின் ஜெனிவா பல்கலைக்கழக விஞ்ஞானிகள் குழு இந்த சாதனையை நிகழ்த்தி இருக்கிறது. அவர்கள் ஆய்வகத்தில் மேகத்தை உருவாக்கும் முயற்சியில் வெற்றி கண்டுள்ளனர். இதற்காக-24 பாகை செல்சியஸ் குளிர்ந்த நீர் நிரம்பிய கொள்கலன் வழியாக அகச்சிவப்புக் (இன்ஃப்ராரெட்) கதிர்களைச் செலுத்தினார்கள். அப்போது நீர்த்திவலை ஆவியாகி மேகம் உருவானது. இதை சாதாரண கண்களாலும் பார்க்க முடிந்தது. ஆய்வக நிலையில் மட்டுமல்லாது வெளிப் பரப்பிலும் இந்த சோதனை வெற்றி பெற்றது.

ஆய்வுக் குழுவைச் சேர்ந்த ஜெரோம் காஸ்பாரியன் கூறியதாவது:-

லேசர் கதிரானது அணுக்களில் உள்ள எலக்ட்ரோனை ஒடுக்குவதன் மூலம் ஹைட்ராக்சைல் என்ற வேதிப்பொருள் அதிகளவில் உருவாவதை ஊக்குவிக்கிறது. இது தொடர்ந்து செயற்பட்டு சல்பர் மற்றும் நைட்ரஜன்-டை-ஒக்சைட் உருவாகிறது. இதுபோன்ற நிகழ்வுகளால் நீர்மூலக்கூறுகள் அடர்த்தி குறைந்து நீராவி நிலைக்குச் சென்று மேகம் உற்பத்தியாகிறது. இதைக் கண்கூடாகப் பார்க்கலாம். எங்கள் ஆய்வில் விண்வெளியில் 60 மீட்டர் உயரத்தில் மேகம் உருவாக்கிக் காட்டப்பட்டது. 50 மைக்ரோமீட்டர் (ஒரு மீட்டரில் 10 லட்சத்தில் ஒரு பங்கு என்பது தான் மைக்ரோமீட்டராகும்) அகலமுள்ள நீர் மூலக்கூறு அடர்த்தி குறைந்து ஆவியாகும்போது 80 மைக்ரோமீட்டராக விரிவடைகிறது. எனவே குறைந்த அளவு நீரைப் பயன்படுத்தி அதிகமாக மேகத்திரளை ஏற்படுத்த முடியும்.

இவ்வாறு அவர் கூறினார். இனி, வள்ளுவன் வாக்குபோல 'பெய்' எனப் பெய்யும் மழை!

## ஒரு வானம்! மூன்று சூரியன்கள்!



**பூ**மியில் இருந்து 149 ஒளியாண்டு தூரத்தில் இருக்கும் எச்.டி. 188753 என்ற நட்சத்திரத்தை வியாழன் போன்ற ஒரு ராட்சத வாயுக்கோள கிரகம் மிக நெருக்கமாக மூன்றரை நாட்களுக்கு ஒருமுறை சுற்றி வருகிறது.

இந்தக் கிரகம் சூரியனிலிருந்து பூமி இருக்கும் தூரத்தைக் காட்டிலும் இருபது மடங்கு குறைவான தூரத்தில் அதன் நட்சத்திரத்தை வலம் வந்துகொண்டிருக்கிறது. இந்தக் கிரகம் வலம் வந்துகொண்டிருக்கும் மைய நட்சத்திரத்தை, வேறு ஒரு ஜோடி நட்சத்திரங்கள் சுற்றுகின்றன. இதில் அதிசயம் என்னவென்றால், அந்த இரு நட்சத்திரங்களும் ஒன்றையொன்று 156 நாட்களுக்கு ஒருமுறை சுற்றிக்கொண்டு இருக்கின்றன. இந்த இரட்டை நட்சத்திரங்கள், சூரியனை சனி - யுரேனஸ் கிரகங்கள் சுற்றி வரும் தொலைவில் அந்த மைய நட்சத்திரத்தை 25.7 ஆண்டுகளுக்கு ஒருமுறை சுற்றுகின்றன.

இந்தக் கிரக அமைப்பை ஆராய்ச்சியாளர்கள் விண்வெளி சர்க்கஸ் என்று அழைக்கின்றனர். மேலும், இந்த மூன்று நட்சத்திரங்களும் வெவ்வேறு நிறமாக இருக்கின்றன. பிரதான நட்சத்திரம் மஞ்சள் நிறத்திலும், தொலைவில் வலம் வந்துகொண்டிருக்கும் நட்சத்திரங்கள் செம்மஞ்சள் மற்றும் சிவப்பு நிறத்திலும் இருக்கின்றன.

எனவே இந்த வாயுக்கோள கிரகத்தின் சந்திரனில் இருந்து பார்ப்போருக்கு வானில் அதிசயக் காட்சியாக மூன்று சூரியன்கள் தெரியும். மேலும் மூன்று சூரியன்களும் மஞ்சள், சிவப்பு, செம்மஞ்சள் என்று வெவ்வேறு நிறங்களில் இருப்பதால் வானம் வர்ணஜாலமாகக் காட்சிஅளிக்கும். தினமும் மூன்றுமுறை சூரிய உதயங்களும், அஸ்தமனங்களும் நிகழும். அதைப் போல வெப்பமும் மூன்று மடங்கு அதிகமாக இருக்கும்.

## உங்களுக்குப் பதிலாக வேலைக்குப் போகும் ரோபோ!



**இ**ன்றைய சூழலில் வேலை, வேலை என்று எந்திர கதியில் இயங்கும் மனிதன் சீக்கிரமே களைப்படைந்து விடுகிறான். இந்நேரத்தில் பல நிகழ்ச்சிகளில் கலந்து கொள்ள வேண்டிய நெருக்கடி ஏற்படுகிறது. சிக்கலான இத்தகைய நேரங்களில் உங்களுக்குப் பதிலாக ஆஜர் ஆகப் போகிறது இந்த ரோபோ.

இதைப் பயன்படுத்தி உங்கள் வேலைகளைச் செய்ய வைக்கலாம். நீண்ட நேரம் நடக்கும் கூட்டங்களில் இந்த ரோபோவைக் கலந்து கொள்ளச் செய்து தேவையான விவரங்களைப் பெறலாம். உறவினர்களின் சுப நிகழ்ச்சிகளில் பங்கெடுக்கச் செய்து வீடியோ கொன்பரன்ஸ் முறையில் உறவுகளிடம் நட்பு பரிமாறிக் கொள்ளலாம்.

நீங்கள் இருக்கும் இடத்தில் இருந்தே இந்த ரோபோவை இயக்க முடியும் என்பதுதான் இதன் சிறப்பு. கலிபோர்னியாவின் சிலிகான் வெலி பகுதியில் இந்த ரோபோ வடிவமைக்கப்பட்டுள்ளது.

போப் கிறிஸ்டோபர் என்பவர் இதை உருவாக்கி இருக்கிறார். க்யூ.பி. ரோபோ (Q.B. Robot) என இதற்குப் பெயரிடப்பட்டுள்ளது.

வேலைகளைச் சிறப்பாக செய்து முடிப்பதற்காக இந்த ரோபோவில் பல சிறப்பு வசதிகள் இருக்கிறது. அதில் குறிப்பிடத்தக்கது இந்த ரோபோவின் உயரம். சாதாரணமாக 3 அடி உயரத்தில் இருக்கும் ரோபோ ஒரு வேலையைச் செய்யும்போது, தேவைப்பட்டால் தன் உயரத்தை கழுத்தை நிமிர்த்துவதன் மூலம் 5.7 அடியாக உயர்த்தி பணியைச் செய்து முடிக்கும்.

கண்கள் போல், பார்க்கும் திறனுக்காக 5 எம்.பி. கேமரா பொருத்தப்பட்டுள்ளது. நெற்றி இருக்கும் இடத்தில் சிறு திரை உள்ளது. இதில் எஜமானர் படம் தெரியும். இதன் முலம் கொன்பரன்ஸ் முறையில் பேச முடியும். காதுபோல கேட்கும் வேலையைச் செய்ய 3 மைக்ரோபோன்கள் உள்ளன.

வயரில்லா தொழில்நுட்பத்தில் இணைப்பு கொடுக்கப்பட்டிருப்பதால் வீட்டில் இருந்து செல்போன், கணினி மூலம் தொடர்பு கொள்ளலாம். கொன்பரன்சிங் முறையில் மற்றவர்களுடன் தொடர்பு கொள்ளவும், ஒரு வேலையைச் செய்ய வைக்கவும் முடியும்.

பல்வேறு பணிகளில் ஈடுபடும் தொழிலதிபர்கள் மற்றும் அதிகாரிகளுக்கு இந்த ரோபோ வசதியாக இருக்கும். இதன் விலை சுமார் 7 லட்சம் ரூபாய்.

## சத்தமில்லாத பேசும் செல்போன்

**பொ**து இடங்களில் செல்போனில் பேசுபவர்களில் சிலர் உரக்கப் பேசி ஊரையே கூட்டி விடுவார்கள். அவர்களின் அந்தரங்க தகவல்களை பிறர் கேட்டுக்கொண்டிருக்கிறார்களே என்ற கவலையின்றி சத்தம் போட்டுப் பேசுவார்கள்.

தற்போது இந்தப் பிரச்சினைக்குத் தீர்வு காண புதிய தொழில்நுட்பத்தை ஜெர்மனியில் உள்ள காரல் ஸ்ருகி தொழில்நுட்ப நிலையம் கண்டுபிடித்துள்ளது. இதன்படி உங்கள் உதடு அசைவை வைத்தே நீங்கள் என்ன பேசப்போகிறீர்கள் என்பதைக் கண்டுபிடித்து எதிர்முனைக்கு உங்கள் குரலில் தெரிவிக்கும் மென்பொருள் உருவாக்கப்பட்டுள்ளது. எலக்ட்ரோ மையோகிராபி எனப்படும் தொழில்நுட்பம் மூலம் இது இயங்குகிறது. முகத்தில் உதடு மற்றும் தாடைப் பகுதியில் பொருத் தப்படும் சென்சார் கருவிகள் உதடு மற் றும் முக அசைவை வார்த்தையாக மொழி மாற்றம் செய்கிறது. இந்தப் பணியைச் செய்ய சிறப்பு மென்பொருள் உருவாக்கப்பட்டுள்ளது. பின்னர் இந்த வார்த்தைகளை தொலைபேசி இணைப்பு வழியாக எதிர் முனையில் உள்ளவர்களுக்கு அனுப்பப்படுகிறது. இது தவிர ஸ்பீக்கர் மூலமும் இந்த பேச்சை கேட்கலாம். இந்த நவீன கண்டுபிடிப்பின் மூலம் வாய் பேச இயலாதவர்கள் மற்றும் பக்கவாத நோய்த் தாக்குதலால் பேச முடியாதவர்கள் பலன் பெறலாம். இவர்களின் உதட்டு அசைவின் மூலம் இவர்கள் என்ன பேசுகிறார்கள் என்பதை மற்றவர்கள் புரிந்துகொள்ள முடியும்.

# தீர்ப்பும், தீர்ப்பை தொடர்ந்தும்... உள்ளே-வெளியே!

பதினெட்டு வருடங்களாக இழுத்தடிக்கப்பட்டு ஒருவழியாக தீர்ப்பு வழங்கப்பட்டாகிவிட்டது. குற்றம் நிரூபிக்கப்பட்டால் இத்தகைய ஒருதீர்ப்பு வரும் என்பதை எல்லோரும் எதிர்பார்த்தே இருந்தனர்.

ஜெயலலிதா அம்மையார் உட்பட.ஆனால் இந்திய திருநாட்டில் ஊழல் குற்றங்கள் இப்படி நிரூபிக்கப்பட்டு தண்டனையும் அளிக்கப்பட்டு சிறைக்கு அனுப்பப்படுவது அரிதிலும் அரிது என்பதால் இந்த தீர்ப்பு ஒரு அதிர்வலையை ஏற்படுத்தியதை மறுக்கமுடியாது.

தீர்ப்பு அளிக்கப்பட்டு எல்லோரும் 'நீதியின் முன் அனைவரும் சமம்','நீதி வென்றுவிட்டது' போன்ற கருத்துகளை சொல்லிக்கொண்டு இருக்கும் அதே தருணத்தில் இந்தியாவின் மூத்த வழக்கறிஞரும் சட்ட நிபுணருமான ராம் ஜெத்மலானி இந்த தீர்ப்பை வெளிப்படையாக விமர்சித்தும் இருக்கிறார்.

பாய்ந்தடித்து கொண்டு கர்நாடகா அரசின் முதலமைச்சர் சீதா ராமையா 'இந்த தீர்ப்புக்கும் கர்நாடக அரசுக்கும் எந்த சம்பந்தமும் இல்லை' என்று பத்திரிகையாளர் மாநாட்டில் தெரிவித்தும் விட்டார்.(நம்புகின்றோம்)

தீர்ப்பை பற்றி சொல்லும் போது, தமிழகத்தில் பாஜக வின் எதிர்காலம் பிரகாசமாக இப்போது தோன்றுகிறது என்று சொன்னதுடன் நிற்காமல் இந்த தீர்ப்பு தமிழகத்தில் மிகப்பெரிய மாற்றங்களை ஏற்படுத்தும் என்று சொல்லி இருப்பது இனி பாஜக தமிழக அரசியலில் ஒரு ரவுண்ட் வர உள்ளதையே காட்டுகின்றது.

இரண்டாவதாக, ஆளும் கட்சி என்ற முறையில் பாஜகவுக்கு ஜெயலலிதா அம்மையார் ஏராளம் இக்கட்டுகளை ஏற்படுத்தி வந்துள்ளதால் ஜெயலலிதா அம்மையார் இல்லாத ஒரு தமிழகத்தையே அவர்கள் விரும்புகிறார்கள்.

உதாரணத்துக்கு என்னதான் பாஜக கட்சி சிங்களத்துடன் கைகோர்த்து உறவாட முனைந்தாலும் அதற்கு வேட்டு வைத்து அதிரடியான தீர்மானங்களை சட்டசபையில் நிறைவேற்றி பாஜக வின் வெளியுறவு கொள்கையை நெளிய வைத்துள்ளது பாஜக வுக்கு அவ்வளவு உவப்பான சமாச்சாரம் இல்லை.

மேலும், தினமும் சிங்கள கடற்படையால் கொல்லப்படும் தமிழக மீனவர்களுக்காக ஜெயலலிதா அம்மையார் முழுதான முரண்போக்கையே பாஜக வின் மத்திய

மேலும் தமிழகத்தில் பாஜக, ஆர்எஸ்எஸ் அமைப்புகளை சேர்ந்த பலர் (ஓடிட்டர் ரமேஸ் உட்பட) வெட்டிக் கொல்லப்பட்டதில் பாஜக தலைமை ஜெயலலிதா மீது பலத்த விமர்சனங்களை வைத்ததையும் மறந்துவிட முடியாது.

காங்கிரசைவிட 8வீதம் அதிகமான வாக்கு களை பெற்று மூன்றாவதாக வந்துள்ள பாஜக தமிழகத்தில் கால் ஊன்ற ஜெயலலிதா இல்லாத தமிழகம் வேணும் அவர்களுக்கு.

இன்னும் ஒரு முக்கிய தரப்புக்கு ஜெயலலிதா இல்லாத தமிழகம் தேவை. அவர்கள் இப்போதைய நீதிமன்ற தீர்ப்பை வெகுவாக களிப்புடன் நோக்குகிறார்கள். அது சிங்கள தேசம்.

சிங்களத்துக்கு எதிரான பொருளாதார தடை,பொது வாக்கெடுப்பு என்று ஜெயலலிதா நிறைவேற்றிய தீர்மானங்களை அவர் அமுல் நடாத்துகின்றாரோ இல்லையோ அவை சிங்கள ஆட்சியாளர்க்கும், சிங்கள பொதுசனத்துக்கும் பெரிய ஒரு தொண்டையில் சிக்கிய முள்போலவே இருக்கிறது..

சிங்களத்துக்கு அருகில் உள்ள ஒரு மாநிலம் ஏறத்தாழ போர் பிரகடனம் போன்ற சிங்களம் மீது செலுத்த தொடங்கிய பிறகு தமிழகம் பற்றிய விமர்சனங்களை முன்வைப்பதில் அதீத எச்சரிக்கை உணர்வுடன் இருப்பதை காணமுடிகிறது.

அப்படி இருந்தும் சீண்டிப் பார்த்து பலத்த மூக்குடைவுகளும் சிங்களத்துக்கு ஏற்பட்டதுண்டு. அண்மைய சிறீலங்கா பாதுகாப்பு இணையத்தில் ஜெயலலிதா பற்றிய கருத்தும் படமும் தமிழகத்தில் ஏற்படுத்திய எதிர்ப்பு–கோப அலையை சொல்லலாம்.

நிச்சயமாக சிங்கள தேசத்தின் ஆளும்–எதிர் கட்சிகள் எதுவுமே ஜெயலலிதா போன்ற ஒரு சிறீலங்கா எதிர்ப்பாளர் பக்கத்து தமிழகத்தில் ஆட்சியில் இருப்பதை விரும்பவே மாட்டார்கள்.

தீர்ப்பு வெளிவந்து இருபத்துநாலு மணித்தியாலத்துக்கிடையில் சிறீலங்கா மீன்பிடி அமைச்சர் 'இனிமேல் தமிழக மீனவர்கள் பற்றி மத்திய அரசுடன் சுமூகமாக கதைக்கலாம் என்று சொல்லி இருப்பதும்

சிறீலங்கா ஊடகங்கள் மகிழ்வுடன் செய்தி வெளியிட்டு இருப்பதும் இதனையே காட்டுகின்றது.

இங்கேதான் நாம் ஒன்றை கவனிக்க வேண்டும்.

எமது பொது எதிரியும் இனக்கொலை அரசுமான சிங்கள அரசுக்கு ஒரு தீவிர எதிர்ப்பாளர் ஜெயலலிதா அம்மையார். அது எமக்கு மிக முக்கியம்.

ஜெயலலிதா 2009 யுத்தம் இறுதிக்கட்டத்தில் நகர்ந்து கொண்டிருக்கும் போது, இனஅழிப்பு நடந்து கொண்டிருக்கும் போது 'யுத்தம் என்றால் இதுவெல்லாம் சகஜம்' என்று அறிக்கைவிட்டது முதல் ஓரிரு நாட்களுக்கு முன்னர்கூட 'விடுதலைப் புலிகளால் தனது உயிருக்கு ஆபத்து' என்று நீதிமன்றில் கூறியது வரை எதனையும் இந்த இனம் மறந்துவிடவில்லை.

ஆனாலும், இப்போதைய நிலையில் சிங்கள தேசத்துடன் அனைவரும் ஒருவிதமான வெல்வெட் துணியால் தட்டும் அணுகுமுறையையே சர்வதேசம் செய்துவரும் நிலையில் தடாலடியாக என்றாலும்கூட நிறைவேற்ற முடியாதவை என்றாலும்கூட 'ராஜபக்சவை தண்டிக்க வேண்டும்' என்பது போன்ற தீர்மானங்களை ஏழு கோடி மக்களை கொண்ட ஒரு மாநிலம் ஏகமனதாக நிறைவேற்றுகிறது என்றால் அத்தகைய ஒரு ஆளாக ஜெயலலிதா தேவைதான்.

தமிழகத்தில் தோன்றும் மாபெரும் மக்கள் எழுச்சிதான் எமது மக்களின் எழுச்சிக்கும் அதனூடாக விடுதலைக்கும் இப்போதைக்கு இருக்கின்ற ஒரே வழி. அதற்காக வேணும் சிங்களத்துக்கு முழுக்க முழுக்க எதிரான உணர்வு கொண்ட ஒரு ஆட்சி தமிழகத்தில் தேவை. இப்போதைக்கு அது ஜெயலலிதா தான்.

இந்த நீதிமன்ற தீர்ப்பை ஒருவேளை அடுத்த தீர்ப்புகள் நீக்கி விடலாம். ஜெயலலிதாவே மீண்டும் முதல்வராகவும் வரவும் கூடும். அப்படி வந்தால், அவர் இப்போதைய தன் நிலைப்பாடுகளை ( ஈழத்தமிழர் விடுதலை சம்பந்தமாக) மாற்றிக் கொள்ள வேண்டும் என்பதுதான் எமது எதிர்பார்ப்பு.

எப்படி 2013 மார்ச் 8ம் திகதி ஒரு மாணவர் எழுச்சி தமிழீழ மக்களுக்கு ஆதரவாக எழுந்து தமிழகமே உணர்வெழுச்சி கொண்டதுபோல இனியும்கூட தமிழக உணர்வான மாணவர்கள் மேற்கொள்ளும் போது வரும்காலத்தில் ஜெயலலிதா ஆதரவளிக்க வேண்டும்.

தமிழகத்தில் மூன்று பத்தாண்டுகளுக்கும் மேலாக அகதிகளாக வாழும் ஈழத்தமிழர்களுக்கு உரிய உரிமைகளும்,சமமான கல்வி உரிமையும் வழங்க வேண்டும்.

தமிழக சட்டமன்றில் நிறைவேற்றிய தீர்மானங்களை அமுல்படுத்த, அல்லது அதனை ஏற்றுக்கொள்ள வைக்க மத்திய அரசை வலியுறுத்த வேண்டும்.

சிறைகளிலும், கட்டாய தடுப்பு முகாம்களிலும் தடுத்து வைக்கப்பட்டிருக்கும் ஈழத் தமிழ் உறவுகளை நிபந்தனை இன்றி விடுவிக்க வேண்டும்.

**ச.ச.முத்து**

இதற்கிடையில் ஜெயலலிதா சிறைக்குள் களி உருண்டையும்,சாம்பாரும் சாப்பிட்டார், இல்லை இல்லை ஆனந்த பவனம் உணவு விடுதியில் இருந்துதான் அவருக்கு சாப்பாடு செல்கிறது என்ற நேரலை செய்திகளை தருவதில் ஊடகங்கள் வெகுவாக போட்டியில் இறங்கியுள்ளன.

ஓ.பன்னீர்செல்வம் அதிமுக சட்டசபை உறுப்பினர்களால் ஏகமனதாக தெரிவு செய்யப்பட்டு அடுத்த முதல்வர் ஆகின்றார். மறக்காமல் கையில் பெரிய சைஸ் ஜெயலலிதா அம்மையார் படமும் வைத்தபடியே போஸ் கொடுக்க அவர் தவறவில்லை.(நவீன பரதன்??)

ஆனால் இந்த ஆக்கத்தின் நோக்கம் ஜெயலலிதா இல்லாத அரசியல் தமிழகத்திலும் அதனை அண்டியும் (இலங்கைதீவிலும்) எப்படி இருக்கும் என்று ஒரு பறவைப்பார்வை பார்ப்பதுதான்..

முதலில்,ஜெயலலிதா அம்மையார் இல்லாதது யாருக்கு மகிழ்வு என்று பார்த்தால், முதல் மகிழ்வு கருணாநிதிக்கு தான்.

எப்படி எம்.ஜி.ராமச்சந்திரன் உயிருடன் இருக்கும் வரைக்கும் தமிழக அரியணையில் ஏறவே முடியாது என்ற நிலை தோன்றி இருந்ததோ அவ்வாறே இந்த பாராளுமன்ற தேர்தலுக்கு பின்னர் ஜெயலலிதா அம்மையார் இருக்கும் வரைக்கும் தமிழக அரியணை கருணாநிதிக்கு மட்டுமல்ல திமுகவுக்குகூட கிடையாது என்ற நிலையே உருவாகி இருந்தது.

பிறகு, தனித்து நின்றே ஜெயலலிதா அம்மையாரின் அதிமுக 44.3 வீத வாக்குகளை பெற்றது தமிழக வரலாற்றிலேயே முதன்முறை. அதிலும் அதிமுக வுக்கும் திமுக வுக்கும் வித்தியாசம் ஏறத்தாழ 20 வீதம். நினைத்தே பார்க்க முடியாதது என்ற நிலையில் கருணாநிதிக்கு இது மகிழ்வு. குதூகலம்.(இந்த பேருவகையை 2ஜி அலைக்கற்றை இடைபுகுந்து குழப்பாமல் விட்டால் சரி)

அடுத்து,பாஜக வுக்கு ஜெயலலிதா அம்மையார் இல்லாத தமிழகம் மிகத்தேவை. பாராளுமன்ற தேர்தலில் அமோக வெற்றியீட்டிய பாஜக அடுத்த இரண்டரை மாதங்களுள் வடக்கு மாநிலங்களில் நடந்த இடைத்தேர்தல்களில் தமது பலமான மாநிலங்களில்கூட மண்கவ்வி இருப்பது தென்னிந்திய மாநிலங்களின் மீது அவர்களுக்கு ஒரு பெரிய கவனம் வந்துள்ளது.

இம்முறை தமிழகத்தில் வெற்றி பெற்ற ஒரே ஒரு பாஜக பாராளுமன்ற உறுப்பினரும் அமைச்சருமான ராதாகிருஸ்ணன் இந்த அரசுடன் கடந்த காலத்தில் தொடர்ந்து வந்திருக்கிறார்.

ஏன், இந்த தீர்ப்பு வருவதற்கு முதல்நாள்கூட இந்திய ரெயில்வே அமைச்சர் ' ஜெயலலிதா ஒருவிதத்தில்கூட ஒத்துழைப்பு தருகிறார் இல்லை' என்று சொல்லி இருப்பது

தீர்மானங்களை ஏகமனதாக நிறைவேற்றுவது ' சுற்றிவர கடல், இன்னொரு புறம் தமிழர்கள் என்று' ஒடுங்கிப்படுத்திருந்த துட்டகைமுனுவின் நிலையை மீள நினைவுக்கு கொண்டு வந்திருக்கும்.



ஜெயலலிதா பாஜக உடன் ஒருவிதமான முரண்போக்கையே தொடர்ந்திருக்கிறார்.

அதனால்தான் ஜெயலலிதாவின் மீதான இன்னொரு வழக்கான 1990களில் மூன்று வருடங்கள் வருமானவரி தாக்கல் செய்யவில்லை என்ற வழக்கில் வருகின்ற புதன்கிழமை சென்னை பொருளாதார குற்ற நீதிமன்றத்தில் நேரடியாக ஆஜராக வேண்டும் என்று அறிவித்திருப்பது பாஜக மத்திய அரசு ஜெயலலிதா மீது நெருக்குதல்களை ஆரம்பித்து விட்டிருந்ததையே காட்டுகின்றது.

பொதுவாக வருமானவரி வழக்கு தாக்கல் செய்யாது விட்டால் பின்னர் அதற்கான அபராத தொகையை கட்டும்படி கேட்டு கட்டினால் அத்துடன் அது முடிந்துவிடும். ஆனால் இப்போது சென்னை நீதிமன்றத்தில் இதனை வழக்காக மத்திய நிதிஅமைச்சு ஏற்படுத்தி இருப்பது நெருக்குதலை ஜெயலலிதாவுக்கு கொடுக்க மோடி அரசு ஆரம்பித்துவிட்டது என்பதையே காட்டியது.

என்னதான், அது ஒரு மாநிலம், அதன் சட்டத் தீர்மானங்கள் எதுவும் சிங்களத்தை பாதிக்காது என்று சொன்னாலும்கூட பங்களாதேஸ் விடுதலையின் போது மேற்கு வங்க மாநிலத்தின் தீர்மானமே பின்னர் இந்தியாவை, இந்திரா பிரியதர்சினியை படை அனுப்பி வங்காள விடுதலைக்கு வித்திட்டது என்ற அடிப்படையையும் மறக்க முடியாதல்லவா சிங்களத்தால்.

சர்வதேச நெருக்குதல்களைகூட சுலபமாக ஊதித்தள்ளி நடைபோடும் சிறீலங்காவுக்கு ஜெயலலிதா அண்மைக்காலமாக சிங்கள தேசம் மீது காட்டும் எதிர்ப்பு உணர்வு ஜீரணிக்க முடியாமல் இருக்கிறது.

ஒருகாலத்தில் சரத் பொன்சேகா போன்ற இனக்கொலையாளிகள்கூட 'தமிழக அரசியல்வாதிகளை கோமாளிகள்' என்று விமர்சித்துவிட்டு செல்லலாம் என்ற நிலைமையே இருந்தது.

ஆனால் ஜெயலலிதா கடும்போக்கை

## எக்ஸெல் தொகுப்பில் பெர்சனல் தகவல்களை மறைக்க

எக்ஸெல் தொகுப்பில் புதிய ஒர்க்ஷீட்களை உருவாக்கி, அவற்றில் டேட்டாவினைப் பதிகையில், அந்த ஒர்க்ஷீட் பைலில், நம்முடைய பெர்சனல் தகவல்களும் இணைக்கப்படுகின்றன. பைல் ப்ராப்பர்ட்டீஸ் என்ற வகையில் இவை பதியப்படும். இதனால், பைல் ஒன்றை யார் உருவாக்கியது போன்ற தகவல்கள் அனைவருக்கும் தெரிய வரும். இந்த தகவல்களை ஒவ்வொரு பைலின் ப்ராப்பர்ட்டீஸ் சென்று நீக்கலாம். ஒவ்வொரு பைலாக இதனை மேற்கொள்வதைக் காட்டிலும், ஒர்க்ஷீட்கள் உருவாகும்போது இத்தகைய தகவல்களை இணைக்காமல் இருக்க செட்டிங்ஸ் மேற்கொள்ளலாம்.

இதற்கு Tools >Options என முதலில் தேர்ந்தெடுக்கவும். இங்கு Options டயலாக் பாக்ஸ் கிடைக்கும். இங்குள்ள டேப்களில் Security டேப்பினைத் தேர்ந்தெடுக்கவும். இப்போது கிடைக்கும் விண்டோ பிரிவில் Remove Personal Information from File Properties on Save என்று இருப்பதைப் பார்த்து, அதில் டிக் அடையாளத்தை ஏற்படுத்தவும். அடுத்து ஓகே கிளிக் செய்து அனைத்தையும் மூடவும். இனி பெர்சனல் தகவல்கள் சேர்க்கப்பட மாட்டா.



எக்ஸெல் 2007 பயன்படுத்துபவர்கள், கீழே குறிப்பிட்ட வழிகளில் செயல்படவும்.

இந்த தொகுப்பில் Document Inspector என்று ஒரு வசதியைக் காணலாம். இதன் மூலம் பைல் ஒன்றின் பல தகவல்களைப் பார்க்கலாம். Office பட்டன் கிளிக் செய்து, Prepare | Inspect Document எனச் செல்லவும். இப்போது கிடைக்கும் டாகுமெண்ட் இன்ஸ்பெக்டர் டயலாக் பாக்ஸில், கண்காணிப்பில் இருக்க வேண்டிய விஷயங்களைத் தேர்ந்தெடுத்துப் பின்னர் Inspect என்பதில் கிளிக் செய்திடவும்.

எக்ஸெல் ஒர்க் புக்கில் இருக்கும் பெர்சனல் தகவல்களைக் காட்டி, அவற்றில் எவை எல்லாம் இருக்கக் கூடாது என்ற விருப்பத்தைத் தேர்ந்தெடுக்கும்படி கேட்கும். அவ்வாறே செயல்படலாம்.

## விநாடிக்கு பத்தாயிரம் ஜிபி டேட்டா அனுப்பும் ஷேடோ இன்டர்நெட்

அமெரிக்காவில், கூகுள் நிறுவனம், அங்குள்ள வீடுகளுக்கான இன்டர்நெட் இணைப்பில், விநாடிக்கு 10 கிகா பிட் டேட்டா பரிமாற்ற வேகத்தினைத் தர முடியும் என்று இலக்கு வைத்து முயற்சிகளை எடுத்து வருகிறது.

இது இன்றைய இணைய வேகத்தினைப் போல ஆயிரம் மடங்கு அதிகமாகும். பலர் இது அறிவியல் கதைகளில் மட்டுமே இருக்கும் என எண்ணுகின்றனர். ஆனால், நாசா விண்வெளி மைய விஞ்ஞானிகளுக்கு இந்த வேகம் நத்தை வேகத்திற்கு இணையானதாகும். ஏனென்றால், அவர்கள், விநாடிக்கு பத்தாயிரம் கிகா பைட்ஸ் டேட்டா பரிமாற்றத்தைத் தரக்கூடிய ஷேடோ இன் டர்நெட் என்னும் அமைப்பை உருவாக்கி வருகின்றனர்.

பொதுமக்கள் பயன்படுத்தும் இன்டர்நெட் அமைப்பினை, நாசா பயன்படுத்துவதில்லை. உகுணனுஞு (உணனுஞூஞ்தூ குஞிடி னுணஞ்னு மீனுஞுதீணினூடு) என்னும் ஷேடோ நெட்வொர்க் ஒன்றை இந்த மைய விஞ்ஞானிகள் பயன்படுத்துகின்றனர். தனிப்பட்ட முறையில் அமைக்கப்பட்ட குழாய்கள் கட்டமைப்பில் இந்த டேட்டா பரிமாற்றம் நடைபெறுகிறது. தற்போது இவற்றின் மூலம் விநாடிக்கு 91 கிகா பிட்ஸ் டேட்டா பரிமாறப்படுகிறது. இதுதான், உலகிலேயே அதி வேக இணைய டேட்டா பரிமாற்றமாகும்.

நாசா இந்த வேக கட்டமைப்பினைப் பொதுமக்கள் பயன்பாட்டிற்குத் தரப்போவதில்லை. உகுணனுஞு நெட்வொர்க்கினை அமெரிக்காவின் ஈனு ணீச்ஞூஞுட்னுணஞு ணிஹூ உண னுஞூஞ்தூ துறை இயக்கி வருகிறது.

அவர்கள் மேற்கொண்டுள்ள திட்டங்களில், பெரும் அளவில் டேட்டா பரிமாற்றம் செய்திட வேண்டியுள்ளது. இவற்றை ஹார்ட் டிஸ்க் வழியாக மாற்றிக் கொள்வதில் ஏற்படும் நேர விரயத்தைத் தடுக்க, இந்த அதிவேக நெட்வொர்க் பயன்படுத்தப்படுகிறது.

விஞ்ஞான ஆய்வுகள் நம் பூகோள அமைப்பினால் தாமதப்படக் கூடாது என்ற குறிக்கோளுடன் இந்த அதிவேக கட்டமைப்பு உருவாக்கப் பட்டதாகவும், இதன் வேகத்தினை அதிகரிக்க தொடர்ந்து ஆய்வுகள்

மேற்கொள்ளப்படுவதாகவும், இந்த துறை நிர்வாகி கிரிகோரி பெல் தெரிவித்துள்ளனர்.

பின்னொரு காலத்தில் இது பொதுமக்கள் பயன்பாட்டிற்கும் கிடைக்கும் என்று எதிர்பார்ப்போம்.

# சானியா மிர்சா, சீமாவுக்கு தங்கம்!
# ஆசிய விளையாட்டில் அபாரம்



ஆசிய விளையாட்டு வட்டு எறிதலில் இந்தியாவின் சீமா புனியா, தங்கம் வென்று அசத்தினார். டென்னிஸ் கலப்பு இரட்டையர் பிரிவில் சானியா மிர்சா, தங்கம் கைப்பற்றி னார்.

தென் கொரியாவில் உள்ள இன்ச்சான் நகரில், 17வது ஆசிய விளையாட்டு நடக்கிறது. இதன் பெண்களுக்கான வட்டு எறிதலில் இந்தியா சார்பில் கிருஷ்ண பூனியா, சீமா புனியா பங்கேற்றனர். அதிகபட்சமாக 61.03 மீ., தூரம் எறிந்த இந்தியாவின் சீமா புனியா முதலிடம் பிடித்து தங்கப் பதக்கத்தை கைப்பற்றினார். சமீபத்தில் முடிந்த கிளாஸ்கோ காமன்வெல்தில் இவர், வெள்ளிப் பதக்கம் வென்றார். மற்றொரு இந்திய வீராங்கனை கிருஷ்ண பூனியா 55.57 மீ., தூரம் எறிந்து நான்காவது இடம் பிடித்து பதக்கம் வெல்லும் வாய்ப்பை கோட்டைவிட்டார்.

***சானியா ஜோடி தங்கம்:***

டென்னிஸ் கலப்பு இரட்டையர் பைனலில் இந்தியாவின் சானியா மிர்சா, சாகேத் மைனேனி ஜோடி, சீனா தைபேவின் பெங், சங் ஜோடியை 6–4, 6–3 என, மிகச் சுலபமாக வீழ்த்தி தங்கம் வென்றது.

***ஜெய்ஷா வெண்கலம்:***

பெண்களுக்கான 1500 மீ., ஓட்டத்தின் பைனலில், பந்தய தூரத்தை 4 நிமிடம், 13.46 வினாடிகளில் கடந்த இந்தியாவின் ஜெய்ஷா, மூன்றாவது இடம் பிடித்து வெண்கலம் வென்றார். இப்போட்டியில் பங்கேற்ற மற்றொரு இந்திய வீராங்கனை சைனி அஜித் மார்கோஸ் (4 நிமிடம், 17.12 வினாடி) ஐந்தாவது இடம் பிடித்தார்.

***நவீன் வெண்கலம்:***

ஆண்களுக்கான 3000 மீ., 'ஸ்டீபிள்சேஸ்' ஓட்டத்தின் பைனலில், பந்தய தூரத்தை 8 நிமிடம், 40.39 வினாடிகளில் கடந்த இந்தியாவின் நவீன் குமார் மூன்றாவது இடம் பிடித்து வெண்கலம் வென்றார்.

***இந்திய ஜோடி வெள்ளி:***

ஆண்களுக்கான டென்னிஸ் இரட்டையர் பிரிவு பைனலில், இந்தியாவின் சனம் சிங், சாகேத் மைனேனி ஜோடி, தென் கொரியாவின் யங்யு லிம், ஹியான் சுங் ஜோடியை சந்தித்தது. இதில் இந்திய ஜோடி 5–7, 6–7 என்ற நேர் செட் கணக்கில் போராடி தோல்வி அடைந்து, வெள்ளிப் பதக்கத்தை கைப்பற்றியது. இப்பிரிவுக்கான வெண்கலப் பதக்கத்தை இந்தியாவின் யூகி பாம்ப்ரி, திவிஜ் சரண் ஜோடி வென்றது.

***பஜ்ரங் வெள்ளி:***

ஆண்களுக்கான மல்யுத்தம் 'பிரீஸ்டைல்' 74 கி.கி., எடைப்பிரிவில் பங்கேற்ற இந்தியாவின் பஜ்ரங், காலிறுதிக்கு முந்தைய சுற்றில் மங்கோலியாவின் டமன்பிலக்கை வீழ்த்தினார். பின், காலிறுதியில் தஜிகிஸ்தானின் உஸ்மோன்ஜோடாவை வீழ்த்திய பஜ்ரங், அரையிறுதியில் ஜப்பானின் டகட்சுகாவை தோற்கடித்தார். அடுத்து நடந்த பைனலில், கடைசி வரை போராடிய பஜ்ரங் 4–6 என ஈரானின் மசோவ்திடம் தோல்வி அடைந்து, வெள்ளிப் பதக்கத்தை கைப்பற்றினார்.

***நர்சிங் வெண்கலம்:***

ஆண்களுக்கான மல்யுத்தம் 'பிரீஸ்டைல்' 74 கி.கி., எடைப்பிரிவில் நடந்த வெண்கலப் பதக்கத்துக்கான போட்டியில், இந்தியாவின் நார்சிங் யாதவ் 10–7 என ஜப்பானின் ஷிமடாவை வீழ்த்தி, வெண்கலம் வென்றார்.

***டென்னிசில் ஐந்து பதக்கம்***

ஆசிய விளையாட்டு டென்னிசில் இம்முறை இந்தியாவுக்கு 5 பதக்கம் கிடைத்தது. கலப்பு இரட்டையரில் சானியா, மைனேனி ஜோடி தங்கம், ஆண்கள் இரட்டையரில் மைனேனி, சனம் சிங் ஜோடி வெள்ளி, அடுத்து, ஒற்றையரில் யூகி பாம்பரி, ஆண்கள் இரட்டையரில் யூகி பாம்ப்ரி, திவிஜ் சரண், பெண்கள் இரட்டையரில் சானியா மிர்சா, பிரார்த்தனா என, 3 வெண்கலம் கிடைத்தது.

இதுகுறித்து சானியா மிர்சா, 27, கூறியது:

இன்ச்சான் போட்டிக்காக சிறந்த அணியுடன் இங்கு வரவில்லை. இளம் வீரர், வீராங்கனைகளுடன் தான் வந்தோம்.

இவர்கள் என்னை விட 7 முதல் 8 வயது இளையவர்கள். எனது தங்கைகளைப் போல உள்ளனர். இவர்கள் எந்த உதவி கேட்டாலும் செய்து தர தயாராக உள்ளேன்.

இவர்களுடன் சேர்ந்து மொத்தம் 5 பதக்கம் வென்றது மிகவும் மகிழ்ச்சியாக உள்ளது. மொத்தத்தில் இந்திய டென்னிசிற்கு இது சிறப்பான வாரமாக அமைந்து விட்டது.

இது அடுத்த ஆசிய விளையாட்டிலும் (2018) தொடரும் என நம்புகிறேன்.

***திடீர் முடிவு:***

கடைசி நேரத்தில் இங்கு வருவது என்று எடுத்த முடிவு சரியானது தான். இதன் முக்கிய நோக்கம், இந்தியா அதிக பதக்கம் வெல்ல உதவ வேண்டும் என்பது தான். இதை சரியாக செய்து விட்டேன்.

ஏனெனில், நான் பங்கேற்ற பெண்கள், கலப்பு இரட்டையில் 2 பதக்கம் (தலா ஒரு தங்கம், வெண்கலம்) பெற்றுள்ளேன். இதுவரை பங்கேற்ற 4 ஆசிய விளையாட்டிலும் சேர்த்து, 8 பதக்கம் (2 தங்கம், தலா 3 வெள்ளி, வெண்கலம்) வென்றது உற்சாகம் தருகிறது.

இவ்வாறு சானியா மிர்சா கூறினார்.

# அரையிறுதியில் ஹோபர்ட் அணி

சாம்பியன்ஸ் லீக் தொடரின் அரையிறுதிக்கு ஹோபார்ட் அணி முன்னேறியது. நேற்று நடந்த லீக் போட்டியில் பார்படாஸ் அணியை 6 விக்கெட் வித்தியாசத்தில் வீழ்த்தியது.

மொகாலியில் நடந்த சாம்பியன்ஸ் லீக், 'பி' பிரிவு லீக் போட்டியில் வெஸ்ட் இண்டீசின் பார்படாஸ், ஆஸ்திரேலியாவின் ஹோபார்ட் அணிகள் மோதின.

தோகார்டி ஜாலம்:

முதலில் பேட் செய்த பார்படாஸ் அணிக்கு முனவீரா (18), மெக்கன்சி(0), ரீபர்(6) ஏமாற்றினர். தோகார்டி 'சுழலில்' கார்டர்(42), பிராங்க்ளின் (12), ஹோல்டர் (5), ஆஷ்லே நர்ஸ் (1) சிக்கினர். மற்றவர்களும் சொதப்ப, பார்படாஸ் அணி 19.4 ஓவரில் 113 ரன்களுக்கு ஆல்–அவுட்டானது.

எளிய இலக்கை விரட்டிய ஹோபார்ட் அணிக்கு டங் டக்(0), பெய்ன்(18) நிலைக்கவில்லை. பிலிஜார்டு(21) நம்பிக்கை தந்தார். பின் அபாரமாக ஆடிய சோயப் மாலிக்(39௦), வெல்ஸ்(23௦) சேர்ந்து வெற்றியை உறுதி செய்தனர். 18.2 ஓவரில் 4 விக்கெட்டுக்கு 117 ரன்கள் எடுத்து சுலப வெற்றி பெற்ற ஹோபார்ட் அணி(12 புள்ளி) அரையிறுதிக்கு தகுதி பெற்றது.

# தங்கம் வென்றார் யோகேஷ்வர்: ஆசிய மல்யுத்தத்தில் அசத்தல்

ஆசிய விளையாட்டு மல்யுத்தப் போட்டியில், 28 ஆண்டுகளுக்கு பின் இந்தியாவுக்கு தங்கம் பெற்று தந்தார் யோகேஷ்வர் தத்.

தென் கொரியாவில் உள்ள இன்ச்சான் நகரில், 17வது ஆசிய விளையாட்டு நடக்கிறது. ஆண்களுக்கான மல்யுத்தப் போட்டியின் 'பிரீஸ்டைல்' 65 கி.கி., எடைப்பிரிவில் யோகேஷ்வர் தத் பங்கேற்றார். காலிறுதியில் வடகொரியாவின் ஜின்யோக் காங்கை வீழ்த்திய யோகேஷ்வர் தத், அரையிறுதியில் சீனாவின் கடாய் ஏர்லனபைக்கை தோற்கடித்தார். அடுத்து நடந்த பைனலில் அசத்திய யோகேஷ்வர் 3–0 என தஜிகிஸ்தானின் ஜலிம்கான் யுசுபோவை வீழ்த்தி, தங்கம் வென்றார்.

இதன்மூலம் 28 ஆண்டுகளுக்கு பின், ஆசிய விளையாட்டு மல்யுத்தப் போட்டியில் இந்தியாவுக்கு தங்கம் கிடைத்தது. முன்னதாக 1986ல் சியோலில் நடந்த ஆசிய விளையாட்டில், இந்தியாவின் கர்தார் சிங் தங்கம் வென்றார். தவிர இது, ஆசிய விளையாட்டில் யோகேஷ்வர் வென்ற இரண்டாவது பதக்கம். கடந்த 2006ல் தோகாவில் நடந்த ஆசிய விளையாட்டில் பங்கேற்ற இவர், 'பிரீஸ்டைல்' 60 கி.கி., எடைப்பிரிவில் வெண்கலம் வென்றார். கடந்த 2012ல் லண்டனில் நடந்த ஒலிம்பிக்கில் வெண்கலம் வென்ற இவர், சமீபத்தில் முடிந்த கிளாஸ்கோ காமன்வெல்த் விளையாட்டில் தங்கத்தை கைப்பற்றினார்.

குஷ்பிர் வெள்ளி:

பெண்களுக்கான 20 கி.மீ., நடை போட்டியில் பங்கேற்ற இந்தியாவின் குஷ்பிர் கவுர், பந்தய து□ரத்தை ஒரு மணி நேரம், 33 நிமிடம், 07 வினாடிகளில் கடந்து இரண்டாவது இடம் பிடித்தார். இதன்மூலம், ஆசிய விளையாட்டு 20 கி.மீ., நடை போட்டியில் வெள்ளி வென்ற முதல் இந்திய வீராங்கனை என்ற பெருமை பெற்றார். இவர், இந்த ஆண்டு ஜப்பானில் நடந்த ஆசிய நடை போட்டி சாம்பியன்ஷிப்பில் வெண்கலம் வென்றார்.

# கேமரா திருட்டு: ஜப்பான் வீரர் வெளியேற்றம்

ஜப்பான் நீச்சல் வீரர் நயோயா பத்திரிகையாளரின் 'கேமராவை' திருடியதால் ஆசிய விளையாட்டிலிருந்து வெளியேற்றப்பட்டார்.

தென் கொரியாவில் உள்ள இன்ச்சானில் ஆசிய விளையாட்டு நடக்கிறது. இதன் 100 மீ., பிரஸ்டிரோக் பைனலில் ஜப்பான் வீரர் நயோயா டெமிட்டோ, 25, நான்காவது இடம் பெற்றார். இந்நிலையில், இவர் பத்திரிகையாளர் ஒருவரின் 'கேமராவை' திருடியதாக புகார் எழுந்தது. இதனையடுத்து இன்ச்சான் போலீசார் விசாரித்ததில் திருடியதை நயோயா ஒப்புக் கொண்டார். இதனையடுத்து உடனடியாக ஆசிய விளையாட்டிலிருந்து வெளியேற்றப்பட்டார்.

இது குறித்து ஜப்பான் ஒலிம்பிக் கமிட்டி வெளியிட்ட அறிக்கை: எங்கள் அணியின் நயோயா நீச்சல்குளத்தின் அருகிலிருந்த 'கேமராவை' கடந்த 25ம் தேதி திருடி விட்டதாக, இன்ச்சான் போலீசார் எங்களிடம் தெரிவித்தனர். இதை நயோயாவும் ஒத்து க்கொண்டுள்ளார். இவர் ஒழுங்கு விதிமுறையை மீறியுள்ளதால், உடனடியாக ஆசிய விளையாட்டிலிருந்து வெளியேற்றப்பட்டார். போலீசாருக்கு எங்கள் தரப்பிலிருந்து முழு ஒத்துழைப்பு வழங்குவோம். இவ்வாறு அதில் தெரிவிக்கப்பட்டுள்ளது.

# பயஸ் ஜோடி சாம்பியன்

கோலாலம்பூரில், மலேசிய ஓபன் டென்னிஸ் தொடர் நடந்தது. இதன் இரட்டையர் பிரிவு பைனலில், இந்தியாவின் பயஸ், போலந்தின் மார்சின் மட்கோவ்ஸ்கி ஜோடி, பிரிட்டனின் ஜமி முர்ரே, ஆஸ்திரேலியாவின் ஜான் பீர்ஸ் ஜோடியை சந்தித்தது.

முதல் செட்டை 3–6 என இழந்த பயஸ் ஜோடி, பின் எழுச்சி கண்டு 'டை–பிரேக்கர்' வரை சென்ற 2வது செட்டை 7–6 எனக் கைப்பற்றியது. வெற்றியாளரை நிர்ணயிக்கும் 'சூப்பர் டை–பிரேக்கரில்' 10–5 என வென்றது. முடிவில் பயஸ்–மார்சின் ஜோடி 3–6, 7–6, 10–5 என்ற செட் கணக்கில் வெற்றி பெற்று, சாம்பியன் பட்டத்தை கைப்பற்றியது.

நிஷிகோரி சாம்பியன்:

ஒற்றையர் பிரிவு பைனலில், ஜப்பானின் கெய் நிஷிகோரி, பிரான்சின் ஜுலியன் பென்னடியுவை 7–6, 6–4 என்ற நேர் செட் கணக்கில் வீழ்த்தி, சாம்பியன் பட்டம் வென்றார்.

# விளையாட்டு உலகம்

## கபடியில் 2வது வெற்றி

ஆண்களுக்கான கபடி போட்டியில் இந்திய அணி, பாகிஸ்தான், தாய்லாந்து, வங்கதேசம் அணிகளுடன் 'ஏ' பிரிவில் உள்ளது. முதல் போட்டியில் வங்கதேசத்தை வீழ்த்திய இந்திய அணி, நேற்றைய 2வது போட்டியில் தாய்லாந்தை சந்தித்தது. அபாரமாக ஆடிய இந்திய அணி 66–27 என்ற கணக்கில் வெற்றி பெற்றது. இன்று நடக்கும் மூன்றாவது மற்றும் கடைசி லீக் போட்டியில், இந்தியா, பாகிஸ்தான் அணிகள் மோதுகின்றன.

◦ பெண்களுக்கான கபடியில் இன்று இந்தியா, தென் கொரியா அணிகள் மோதுகின்றன. முதல் போட்டியில் இந்திய அணி, வங்கதேசத்தை வீழ்த்தியது.

## கூடைப்பந்து: இந்தியா வெற்றி

பெண்களுக்கான கூடைப்பந்து 5–8வது இடத்துக்கான போட்டியில் இந்தியா, மங்கோலியா அணிகள் மோதின. இதில் அசத்தலாக ஆடிய இந்திய அணி 68–50 என்ற கணக்கில் வெற்றி பெற்றது. இதன்மூலம் நாளை நடக்கவுள்ள 5–6வது இடத்துக்கான போட்டியில் இந்தியா, கஜகஸ்தான் அணிகள் மோதுகின்றன.

பைனலில் இந்திய அணி

ஆண்களுக்கான 4ｘ400 மீ., 'ரிலே' ஓட்டத்தின் தகுதிச் சுற்றில், பந்தய து□ரத்தை 3 நிமிடம், 05.60 வினாடிகளில் கடந்த இந்திய அணி 2வது இடம் பிடித்து பைனலுக்கு முன்னேறியது. இந்தியா சார்பில் ஆரோக்கியராஜிவ், முகமது, ஜோசப் ஆப்ரகாம், ஜிதின் பால் பங்கேற்றனர்.

நிகில் ஏமாற்றம்

ஆண்களுக்கான உயரம் தாண்டுதல் பைனலில், அதிகபட்சமாக 2.15 மீ., தாண்டிய இந்தியாவின் நிகில் சிற்றரசு, 16வது இடம் பிடித்து ஏமாற்றினார். பக்ரைனின் பர்ஷாம், 2.35 மீ., உயரம் தாண்டி முதலிடம் பிடித்தார்.

மயோகா சோதப்பல்

பெண்களுக்கான நீளம் தாண்டுதலில், அதிகபட்சமாக 6.23 மீ., தாண்டிய இந்தியாவின் பிரஜுஷா 8வது இடம் பிடித்தார். மற்றொரு இந்திய வீராங்கனை 6.12 மீ., தாண்டி, 9வது இடம் பிடித்து ஏமாற்றினார். அதிகபட்சமாக 6.55 மீ., தாண்டிய இந்தோனேஷியாவின் மரியா நடாலியா லோன்டா, முதலிடம் பிடித்து தங்கம் வென்றார்.

பவான் குமார் தோல்வி

ஆண்களுக்கான மல்யுத்தம் 'பிரீஸ்டைல்' 86 கி.கி., எடைப்பிரிவு காலிறுதிக்கு முந்தைய சுற்றில், இந்தியாவின் பவான் குமார் 10–0 என நேபாளத்தின் சுமிரை வீழ்த்தினார். அடுத்து நடந்த காலிறுதியில் ஈரானின் மெய்சாமிடம் தோல்வி அடைந்த பவான் குமார், 'ரெபேஜஸ்' வாய்ப்பில் 1–3 என சீனாவின் பெங் ஜாங்கிடம் வீழ்ந்தார்.

காலிறுதியில் விகாஸ்

ஆண்களுக்கான குத்துச்சண்டை 'மிடில் வெயிட்' 75 கி.கி., 'ரவுண்ட்–16' போட்டியில், இந்தியாவின் விகாஸ் கிருஷ்ணன் 3–0 என்ற கணக்கில், கிரிகிஸ்தானின் அஜாமத்தை வீழ்த்தி, காலிறுதிக்கு முன்னேறினார்.

◦ ஆண்களுக்கான 'பிளை வெயிட்' 52 கி.கி., காலிறுதியில், இந்தியாவின் கவுரவ் பிதுரி 0–3 என உஸ்பெகிஸ்தானின் ஜோய்ரோவிடம் தோல்வி அடைந்தார்.

◦ ஆண்களுக்கான 'வெல்டர்' 69 கி.கி., காலிறுதியில், இந்தியாவின் மன்தீப் ஜாங்ரா 0–3 என தாய்லாந்தின் அபிசெட்டிடம் வீழ்ந்தார்.

◦ ஆண்களுக்கான 'லைட் ஹெவி வெயிட்' 81 கி.கி., காலிறுதியில், இந்தியாவின் குல்தீப் சிங் 0–3 என ஈரானின் ஈஷானிடம் தோல்வி கண்டார்.

வாலிபால்: இந்தியா தோல்வி

ஆண்களுக்கான வாலிபால் 'பிளே–ஆப்' போட்டியில், இந்தியா, கத்தார் அணிகள் மோதின. இதில் இந்திய அணி 0–3 (20–25, 20–25, 20–25) என்ற கணக்கில் தோல்வி அடைந்தது.

சரத் கமல் ஏமாற்றம்

ஆண்களுக்கான டேபிள் டென்னிஸ் கலப்பு இரட்டையர் போட்டியில், இந்தியாவின் அஜந்தா சரத் கமல், கதக் ஜோடி 0–3 என தாய்லாந்து ஜோடியிடம் தோல்வி அடைந்தது.

◦ மற்றொரு கலப்பு இரட்டையரில், இந்தியாவின் அந்தோனி அமல்ராஜ், மாதுரிகா பட்கர் ஜோடி 3–0 என மங்கோலிய ஜோடியை தோற்கடித்தது.

◦ பெண்கள் இரட்டையர் போட்டியில், இந்தியாவின் அன்கிதா தாஸ், கதக் ஜோடி 3–0 என பாகிஸ்தான் ஜோடியை வீழ்த்தியது.

◦ மற்றொரு பெண்கள் இரட்டையரில் இந்தியாவின் மாதுரிகா பட்கர், நேகா அகர்வால் ஜோடி 3–0 என மாலத்தீவு ஜோடியை வென்றது.

## வெள்ளி வென்றார் குஷ்பிர் கவுர்: நடை போட்டியில் அசத்தல்

ஆசிய விளையாட்டு 20 கி.மீ., நடை போட்டியில், இந்திய வீராங்கனை குஷ்பிர் கவுர் வெள்ளிப் பதக்கம் வென்றார். டென்னிஸ் போட்டியில் இந்திய வீரர் யூகி பாம்ப்ரி வெண்கலம் வென்றார்.

தென் கொரியாவில் உள்ள இன்ச்சான் நகரில், ஆசிய விளையாட்டு நடக்கிறது. இதில் பெண்களுக்கான 20 கி.மீ., நடை போட்டியில் பங்கேற்ற இந்தியாவின் குஷ்பிர் கவுர், பந்தய தூரத்தை ஒரு மணி நேரம், 33 நிமிடம், 07 வினாடிகளில் கடந்து இரண்டாவது இடம் பிடித்தார். இதன்மூலம், ஆசிய விளையாட்டு 20 கி.மீ., நடை போட்டியில் வெள்ளி வென்ற முதல் இந்திய வீராங்கனை என்ற பெருமை பெற்றார்.

இர்பான் ஏமாற்றம்: ஆண்களுக்கான 20 கி.மீ., நடை போட்டியில் பங்கேற்ற இந்தியாவின் இர்பான், பந்தய தூரத்தை ஒரு மணி நேரம் 23 நிமிடம், 18 வினாடிகளில் கடந்து 5வது இடம் பிடித்தார். மற்றொரு இந்திய வீரர் கணபதி கிருஷ்ணன், தவறுதலாக ஓடியதால் தகுதி நீக்கம் செய்யப்பட்டார்.

வில்வித்தையில் ஏமாற்றம்: பெண்களுக்கான வில்வித்தை 'ரிகர்வ்' பிரிவு 3வது இடத்துக்கான போட்டியில், இந்தியா, ஜப்பான் அணிகள் மோதின. இதில் இந்திய அணி 4–5 என்ற கணக்கில் தோல்வி அடைந்து, வெண்கலம் வெல்லும் வாய்ப்பை இழந்தது.

யூகி பாம்ப்ரி வெண்கலம்: ஆண்களுக்கான டென்னிஸ் ஒற்றையர் பிரிவு அரையிறுதியில், இந்தியாவின் யூகி பாம்ப்ரி 6–3, 2–6, 1–6 என்ற செட் கணக்கில் ஜப்பானின் யோஷிஹிடோ நிஷியோகாவிடம் தோல்வி அடைந்தார். இதன்மூலம் வெண்கலப் பதக்கத்தை உறுதி செய்தார்.

# அறிவின் சுடரே வருக! வேதநாயகியே அருள்க!

அன்ன வாகன தத்துவம் : வேதத்தில் சரஸ்வதிக்கு வாகனமாக அன்னம் குறிப்பிடப்பட்டுள்ளது. பாலையும், தண்ணீரையும் கலந்து வைத்தாலும், நீரை விட்டு விட்டு பாலை மட்டும் அருந்தும் அன்னத்தைப் போல, உலகில் நன்மை, தீமை இரண்டும் கலந்திருந்தாலும், தீமையை விடுத்து, நன்மையை மட்டும் மனிதன் ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பது இதன் தத்துவம். தென்னகத்தில் சரஸ்வதிக்குரிய வாகனம் மயில்.

இதன் தோகையில் வட்டவடிவில் கண்கள் இடம்பெற்றிருக்கும். படிப்பவன், இரு கண்களால் மட்டும் இல்லாமல் ஆயிரமாயிரம் கண்களோடு, புதியவற்றைக்கற்றுத் தெளிய வேண்டும் என்பது இதன் தத்துவம்.அன்னத்தில் இருக்கும் சரஸ்வதியை 'ஹம்ஸ வாஹினி' என்றும், மயில் மீதிருக்கும் சரஸ்வதியை 'வர்ஹ வாஹினி' என்றும் அழைப்பர். ரவிவர்மா ஓவியங்களில் சரஸ்வதிக்கு மயிலே வாகனமாக உள்ளது.ஐந்து கலைமகள்: மகாசரஸ்வதி, வீணா சரஸ்வதி, வஜ்ர சாரதா, ஆர்ய சரஸ்வதி, வஜ்ர சரஸ்வதி என்னும் ஐந்துவகை கலைமகள் வழிபாடு புத்த

சமயத்தில் இடம் பெற்றுள்ளது. மகாசரஸ்வதி வெண்மை நிறம் கொண்டவள். இரு கரங்களிலும் வீணை ஏந்தி, வலதுகரத்தில் அபய முத்திரையும், இடக்கரத்தில் வெண் தாமரையும் இடம் பெற்றிருக்கும். வஜ்ர வீணா சரஸ்வதி

கல்வியை வழங்குபவளாக தன் இருகரங்களில் வீணையைத் தாங்கியபடி இருக்கிறாள். வஜ்ர சாரதா இடதுகையில் புத்தகமும், வலதுகையில் தாமரை மலரும் வைத்திருக்கிறாள்.

ஆர்ய சரஸ்வதி வழிபாடு நேபாளத்தில் காணப்படும் வடிவம். வலதுகரத்தில்



செந்தாமரை மலரும், இடக்கரத்தில் புத்தகமும் தாங்கி இருக்கிறாள். வஜ்ர சரஸ்வதி மூன்று முகங்களையும், ஆறு கரங்களையும் கொண்டவளாகத் திகழ்கிறாள். இந்த தேவியின் கரங்களில் தாமரை, சுவடி, கத்தி, கபாலம், கரம், கலசம் ஏந்தியிருப்பாள். இவளை புத்தமதத்தினர் 'மஞ்சுஸ்ரீ'என அழைப்பர்.

சரஸ்வதி பூஜையன்று பக்தியுடன் இந்த வழிபாட்டை படிப்பவர்கள் சரஸ்வதிஅருளால் கல்வி, தொழில் வளர்ச்சி

பெறுவர்.

◦ ஆயகலைகள் அறுபத்து நான்கினையும் அருளும் கலைமகளே! வெண்பளிங்கு போல தூய வடிவம் கொண்டவளே! மணம் கமழ்கின்ற தாமரை போன்ற மலர்க்கரம் பெற்றவளே! நல்லவர் நாவில் குடிகொண்டவளே! உன்

திருவடிகளைச் சரணடைகின்றோம்.

◦ வெண்தாமரை மலரில் வீற்றிருப்பவளே! கவிஞர் பாடும் பாமாலையில் மனம் மகிழ்பவளே! சிருஷ்டிக்கடவுளான பிரம்மதேவனின் துணைவியே! கையில் ஜபமாலை தாங்கியிருப்பவளே! வீணை இசைப்பதில் மனம்

மகிழ்பவளே! எங்கள் வாழ்வு மலர நீ துணை நிற்க வேண்டும்.

◦ வேதம் நான்கினுக்கும் வித்தாக இருப்பவளே! மூங்கில் போன்ற தோள்களைக் கொண்டவளே! வெள்ளை அன்னத்தை வாகனமாக உடையவளே! குயில் போன்ற இனிய குரலும், இளமான் போன்ற சாயலும் கொண்டவளே! உன்னருளால் எங்களுக்கு வாக்கு வன்மை உண்டாக வேண்டும்.

திருவடியைப் பணிந்தவர்க்கு கலைஞானம் அருளும் சரஸ்வதியே! சகல கலாவல்லியே! வித்தையின்

இருப்பிடமே! மேதா விலாசமே!அறியாமை போக்கும் அறிவின் சுடரே! கலைப்பெட்டகமே! வேதநாயகியே! நீயே சிறந்த கல்வியறிவும், அதற்குரிய புகழ்மிக்க வாழ்வும்தந்தருள வேண்டும்.

# மேல் முறையீடு சாத்தியம்: மூத்த வழக்குரைஞர்கள் கருத்து

சொத்துக் குவிப்பு வழக்கில் முதல்வர் ஜெயலலிதா மேல் முறையீடு செய்வதற்கான சாத்தியக் கூறுகள் உள்ளன என்று மூத்த வழக்குரைஞர்கள் கருத்து தெரிவித்துள்ளனர்.

அவ்வாறு செய்யப்படும் மேல் முறையீட்டில் வெற்றி பெற்றால் அடுத்த நிமிஷமே ஜெயலலிதா மீண்டும் முதல்வராக வாய்ப்பு உள்ளது எனவும் அவர்கள் தெரிவித்துள்ளனர்.

பெங்களூரு சிறப்பு நீதிமன்ற உத்தரவால், சிறைத் தண்டனையான நான்கு ஆண்டுகளும், அதைத் தொடர்ந்து ஆறு ஆண்டுகளும் முதல்வர் ஜெயலலிதா தேர்தலில் போட்டியிட முடியாது என பல்வேறு தரப்பினரும் கருத்து தெரிவித்து வருகின்றனர். சிறப்பு நீதிமன்றம் பிறப்பித்த இந்த உத்தரவு மட்டுமே இறுதியானது அல்ல. இதற்கு மேல் இரண்டு மேல் முறையீடுகள் உள்ளன.

இது தொடர்பாக மூத்த வழக்குரைஞர் ஒருவர் கூறியது:

முதல்வருக்கு அளிக்கப்பட்ட இந்தத் தீர்ப்பை அனைவரும் ஒரு பக்கமாகவே பார்க்கின்றனர். இதற்கு மற்றொரு பக்கமும் உள்ளது. இந்தத் தீர்ப்பை ரத்து செய்யக் கோரியும், ஜாமீன் வழங்கக் கோரியும் முதல்வர் உள்பட நான்கு பேரும் உயர் நீதிமன்றத்தில் மேல் முறையீடு செய்ய முடியும். அந்த மேல் முறையீட்டை விசாரணை செய்து, சிறப்பு நீதிமன்றத்தின் உத்தரவுக்குத் தடை விதித்து உடனடியாக ஜாமீன் வழங்கவும் வாய்ப்பு உள்ளது. உயர் நீதிமன்றம் மேல் முறையீட்டு மனுவை தள்ளுபடி செய்தால், உச்ச நீதிமன்றத்தில் மேல் முறையீடு செய்யலாம். அதன் மீது உச்ச நீதிமன்றம் தீர்ப்பு வழங்கலாம். எம்.எல்.ஏ.க்கள், அமைச்சர்கள் மீது நாடு முழுவதும் நிலுவையில் உள்ள வழக்குகளை உடனடியாக விசாரணை செய்து முடித்து வைக்க வேண்டும் என மத்திய சட்டத்துறை அமைச்சர் ரவிசங்கர் பிரசாத் ஏற்கெனவே உத்தரவிட்டுள்ளார்.

அதன் மூலம், முதல்வர் தாக்கல் செய்யும் மேல் முறையீட்டு வழக்கு குறைந்தபட்சம் மூன்று முதல் அதிகபட்சம் ஆறு மாதங்களுக்குள் முடித்து வைக்கவும் வாய்ப்பு உள்ளது. அவ்வாறு மேல் முறையீடுகளில் முதல்வருக்கு வழங்கப்பட்ட தண்டனை ரத்து செய்யப்பட்டால், அடுத்த நிமிஷமே முதல்வர் ஜெயலலிதா மீண்டும் பதவியில் அமர முடியும்.

அதனால், இந்தத் தீர்ப்பை இறுதியாக நினைத்து 10 ஆண்டுகள் தேர்தலில் போட்டியிட முடியாது எனக் கூறுவது மிகவும் தவறானது என்றார் அவர்.

இது தொடர்பாக மற்றொரு மூத்த வழக்குரைஞர் கூறியது: கர்நாடக உயர் நீதிமன்றத்துக்கு விடுமுறை என்பதால், நீதிக்கும் விடுமுறை வழங்கப்பட்டு விட்டதாகக் கருத முடியாது.உயர் நீதிமன்றத் தலைமை நீதிபதியிடம், வழக்கின் தன்மை, அதன் முக்கியத்துவம் குறித்து எடுத்துரைத்து சிறப்பு அனுமதி பெற முடியும்.

அவ்வாறு தலைமை நீதிபதியிடம் அனுமதி பெற்று உடனடியாக மேல் முறையீடு செய்யலாம். மேல் முறையீட்டு நீதிமன்றத்தைப் பொருத்து முதல்வருக்கு ஜாமீன் கிடைப்பது அமையும். அதனால், சிறப்பு நீதிமன்றத் தீர்ப்பை வைத்து மட்டும் எந்த ஒரு முடிவும் எடுக்கக் கூடாது.

# சொத்துக் குவிப்பு வழக்கின் தீர்ப்பு ஜெயலலிதாவின் அரசியல் எதிர்காலத்தை பாதிக்காது: சோ கருத்து



முதல்வர் ஜெயலலிதாவுக்கு அளிக்கப்பட்ட தீர்ப்பால் அவரது அரசியல் எதிர்காலத்தை பாதிக்காது என்று எழுத்தாளர் சோ தெரிவித்துள்ளார்.

இதுகுறித்து அவர் மேலும் கூறியதாவது:

சொத்துக் குவிப்பு வழக்கில் ஜெயலலிதாவுக்கு 4 வருட சிறை தண்டனை விதிக்கப்பட்டதால் அது அவரது அரசியல் எதிர்காலத்தை பாதித்துள்ளதாக பரவலான கருத்து வெளியாகி உள்ளது. ஆனால் ஜெயலலிதா இந்த சோதனைகளிலிருந்து மீண்டு வருவார் என்று கூறினார்.

ஜெயலலிதாவுக்கு அளிக்கப்பட்டிருக்கும் 4 வருட சிறை தண்டனை உண்மையில் அவருக்கு பெரும் பின்னடைவுதான். இதற்காக அவரை அரசியலில் இருந்து முழுமையாக ஒதுக்கிவிட முடியாது.

ஜெயலலிதாவின் அரசியல் வாழ்க்கை முடிந்துவிட்டதாக சிலர் எதையோ நினைத்து எண்ணிக் கொண்டிருக்கிறார்கள். அந்த சிக்கலில் இருந்து மீண்டுவர ஏராளமான சட்டவழிகள் உள்ளன. எனவே அவர் மீண்டு வருவார்.

மேலும் ஜெயலலிதாவுக்கு வழங்கப்பட்டுள்ள தண்டனையின் தன்மை தமிழக மக்களிடம் அவர்மீது பெரியளவில் அனுதாபத்தை ஏற்படுத்தி உள்ளதுதான் உண்மை. இதுவரை இப்படியொரு அனுதாபம் யாருக்கும் கிடைத்ததே இல்லை.

ஜெயலலிதாவுக்கு ஏற்பட்டுள்ள இந்த பின்னடைவு நிச்சயமாக அவருக்கு பாதிப்பு இல்லை. தமிழகத்துக்குத்தான் பாதிப்பை ஏற்படுத்தும். இது கடந்த திமுக ஆட்சியில் நடந்த அரசியல் நிகழ்வுகளை கருத்தில் கொண்டால் புரியும் என்று தெரிவித்தார்.

# ஜெயலலிதாவுக்கு 4 ஆண்டு சிறை: தீர்ப்புக்கு ராம்ஜெத்மலானி எதிர்ப்பு

சொத்துக் குவிப்பு வழக்கில் ஜெயலலிதாவுக்கு 4 ஆண்டு சிறை தண்டனையோடு 100 கோடி ரூபாய் அபாரதம் விதித்து பெங்களூர் சிறப்பு நீதிமன்றம் நேற்று தீர்ப்பளித்தது.

தீர்ப்பைத் தொடர்ந்து அரசியல் கட்சி தலைவர்கள் உப்பட பலர் தங்களது கருத்தை தெரிவித்து வருகின்றனர். இந்நிலையில் சொத்துக் குவிப்பு வழக்கில் ஜெயலலிதாவுக்கு வழக்கப்பட்ட தீர்ப்புக்கு மூத்த வழக்கறிஞரான ராம்ஜெத்மலானி கடும் கண்டனம் தெரிவித்துள்ளார். இதுகுறித்து அவர் கூறியதாவது, ஊழல் தடுப்பு சட்ட விதிகளின்படி இந்த தீர்ப்பு வழங்கப்படவில்லை என்றும் அபாராதம் விதித்ததில் நீதிபதி ஜான் மைக்கேல் டி குன்ஹா நீதிக் கோட்பாடுகளை மீறிவிட்டார் என்றும் கூறியுள்ளார்.



மேலும் இந்திய அரசியல் அமைப்பு சட்டத்தின் வழக்கறிஞர் என்ற முறையில் இந்த தீர்ப்பை எதிர்ப்பதாக கூறிய அவர் ஜெயலலிதாவுக்கு இந்த தீர்ப்பை வழங்கியதன் மூலம் நீதிபதி ஜான் மைக்கேல் டி குன்ஹா நீதித்துறையில் மிகப்பெரிய தவறை செய்துவிட்டார் என்று தெரிவித்துள்ளார்.

# பா.ஜ.,வுக்கு தமிழகத்தில் உச்சநிலை பொன்.ராதாகிருஷ்ணன் ஆருடம்

''திராவிட கட்சிகள் சந்தித்து வரும் வழக்குகளால், தமிழகத்தில் பா.ஜ.,வின் வளர்ச்சி, உச்ச நிலைக்கு செல்லும்,'' என, மத்திய அமைச்சர் பொன். ராதாகிருஷ்ணன் தெரிவித்தார்

மதுரையில் நிருபர்களிடம், அவர் கூறியதாவது:கடந்த இரு நாட்களாக தமிழகத்தில் நடக்கும் சம்பவங்கள், போலீஸ் துறைக்கு களங்கம் ஏற்படுத்தியுள்ளது. வேடிக்கை பார்க்கும் போலீசாரின் செயல் கண்டிக்கத்தக்கது.

ஜெ.,வுக்கு எதிரான தீர்ப்பு குறித்து, மூத்த வழக்கறிஞர் ராம்ஜெத்மலானி வெளிப்படையான கருத்து தெரிவித்திருப்பது தவறு; அது அனுமதிக்கக் கூடியதும் அல்ல.தி.மு.க.,வுக்கு எதிராக '2ஜி' ஸ்பெக்ட்ரம் வழக்கு, அ.தி.மு.க.,வுக்கு எதிராக சொத்து குவிப்பு வழக்கு என, திராவிட கட்சிகளின் இந்த நிலை, தமிழகத்தில், விரைவில் பா.ஜ.,வின் வளர்ச்சியை உச்சநிலைக்கு கொண்டு செல்லும்.

மோடி பிரதமராக பொறுப்பேற்ற பின், சீன பட்டாசுகள் இந்தியாவிற்குள் வரவில்லை. ஆபத்தான சீன வெடிகளை பதுக்கி வைப்பதை தடுப்போம்.இவ்வாறு, அவர் கூறினார்.

# மருந்து சீட்டில் முதல்வர் முடிவு!

டுத்த முதல்வராக யாரை தேர்ந்தெடுப்பது என்பது குறித்து, ஜெயலலிதாவின் முடிவை அறிய முயன்ற அமைச்சர்களுக்கு, மருந்து சீட்டும், மாத்திரைகளும் கை கொடுத்தன என்ற, சுவாரசிய தகவல் வெளியாகி உள்ளது.

நேற்று முன்தினம், ஜெயலலிதாவுக்கு எதிராக தீர்ப்பு வந்ததை அமைச்சர்கள் யாரும் எதிர்பார்க்காத நிலையில், அடுத்தகட்ட நடவடிக்கைகள் குறித்து திக்குத் தெரியாமல் திணறிக் கொண்டு இருந்தனர். அதனால், நீதிமன்ற வளாகத்தை விட்டு அவர்கள் நகரவே இல்லை. அன்று மாலை 6:30 மணிக்கு, ஜெயலலிதாவை, பரப்பன அக்ரஹாரா சிறையில் அடைத்த பின்னும் அவர்கள் அங்கிருந்து கிளம்பவில்லை. சிறையில் ஜெயலலிதாவை சந்தித்துப் பேசுவதற்காக காத்திருந்தனர். சிறைக்கு செல்வதற்கு முன், ஓ.பன்னீர்செல்வத்தை அழைத்த ஜெயலலிதா, 'எல்லா மந்திரிகளும் இங்கே இருக்க வேண்டாம்; சீனியர்ஸ் மட்டும் இருங்கள். மற்றவர்களை சென்னைக்கு உடனடியாக போகச் சொல்லுங்கள்' என்று, கூறியதாக கூறப்படுகிறது.

அப்போது, அடுத்த முதல்வர் யார் என்பது பற்றி ஜெயலலிதா அப்போது பேசவில்லை. அமைச்சர்களும், அவரை தொந்தரவு செய்யக்கூடாது என்று, அதை வலியுறுத்தவில்லை.ஜெயலலிதா உத்தரவை அடுத்து, பாதி அமைச்சர்கள் இரவோடு இரவாக சென்னை திரும்பி விட்டனர். ஓ.பன்னீர்செல்வம், நத்தம் விஸ்வநாதன், வைத்திலிங்கம், எடப்பாடி பழனிச்சாமி, எம்.சி.சம்பத் உள்ளிட்ட சீனியர் அமைச்சர்கள் மட்டும் பெங்களூரில் தங்கியிருந்தனர்.

இதே நேரத்தில், மத்திய உள்துறை அளைச்சர் ராஜ்நாத் சிங், தமிழக ஆளுனரிடம், தமிழக நிலவரம் பற்றியும், வன்முறை தொடர்ந்தால் கடுமையான நடவடிக்கை எடுக்க வேண்டி வரும் என்றும் பேசியதாக கூறப்படுகிறது. தமிழக ஆளுனரின் எதிர்பார்ப்பு, ஆட்சி தொடர்ச்சி உள்ளிட்ட காரணங்களால், நேற்று அடுத்த முதல்வர் யார் என்பது பற்றி ஜெயலலிதாவிடம் ஆலோசனை கேட்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது.

அதனால், நேற்று காலை 8:30 மணியளவில், சிறையில், ஜெயலலிதாவை சந்தித்து, அடுத்தகட்ட பணிகள் குறித்து ஆலோசனை நடத்த, மூத்த தமிழக அமைச்சர்கள் சென்றனர். ஆனால், நேற்று ஞாயிற்று கிழமை என்பதால், சிறைவாசிகளை சந்திக்க, பார்வையாளர்களுக்கு அனுமதி கிடையாது என்று, சிறை துறை அதிகாரிகள் தெரிவித்து விட்டனர்.அதையடுத்து, அமைச்சர்கள் இக்கட்டான நிலையில், செய்வதறியாமல் ஆழ்ந்து இருந்தனர். அந்த நேரத்தில், ஜெயலலிதாவுக்கு தேவையான மருந்து மாத்திரைகள் சிறைக்குள் அனுப்பப்படும் என்று அவர்களுக்கு தெரியவந்தது. உடனே அந்த சாக்கை பயன்படுத்தி, மருந்து சீட்டு மூலம், அடுத்த முதல்வரின் பெயரை அமைச்சர்கள் அறிந்துகொண்டதாக கூறப்படுகிறது.

# இந்திய செய்திகள்

## சத்தீஸ்கர் நக்ஸல் தாக்குதல் வழக்கில் குற்றப்பத்திரிகை

சத்தீஸ்கர் மாநிலம், பஸ்தார் மாவட்டத்தில் கடந்த ஆண்டு நக்ஸல் தாக்குதலில் காங்கிரஸ் மூத்த தலைவர்கள் உள்பட 31 பேர் கொல்லப்பட்டது தொடர்பான வழக்கில், தேசிய புலனாய்வு அமைப்பு (என்ஐஏ) சனிக்கிழமை குற்றப்பத்திரிகை தாக்கல் செய்தது.

இது தொடர்பான வழக்கு பிலாஸ்பூர் மாவட்ட சிறப்பு நீதிமன்றத்தில் நடைபெற்று வருகிறது.

இந்த வழக்கில் 34 மாவோயிஸ்டுகளுக்கு எதிராக குற்றம் சாட்டப்பட்டுள்ளது. குற்றப்பத்திரிகை தாக்கல் செய்யப்பட்டதையடுத்து, வழக்கின் அடுத்த விசாரணை நவம்பர் 20ஆம் தேதிக்கு ஒத்திவைக்கப்பட்டது. இத்தாக்குதலில் தொடர்புடையதாக 9 நக்ஸல்கள் கைது செய்யப்பட்டுள்ளனர். 25 பேர் இன்னும் தலைமறைவாக உள்ளனர்.



புதுடில்லியில் நடைபெற்ற அகரசன் மகாராஜாவின் சிலை திறப்பு விழாவில், மத்திய உள்துறை அமைச்சர் ராஜ்நாத்சிங் கலந்து கொண்டார்.

## மகா., தேர்தலில் 7,000 பேர் வேட்பு மனுநான்குமுனை போட்டியால் பரபரப்பு

மகாராஷ்டிர சட்டசபை தேர்தலில் போட்டியிட, 7,000க்கும் மேற்பட்டோர், வேட்பு மனுத் தாக்கல் செய்துள்ளனர். நான்குமுனைப் போட்டி நிலவுவதால், மாநிலத்தில் இதுவரை இல்லாத வகையில், தேர்தல் களம் சூடுபிடித்துள்ளது.

கூட்டணியில் பிளவு:மகாராஷ்டிராவில், அடுத்த மாதம் 15ல், சட்டசபை தேர்தல் நடக்கவுள்ளது. காங்., – தேசியவாத காங்., மற்றும் பா.ஜ., – சிவசேனா கூட்டணியில் பிளவு ஏற்பட்டதால், தேர்தலில், நான்கு முனைப் போட்டி உருவாகிஉள்ளது. இந்நிலையில், தேர்தலில் போட்டி இடு வதற்கான வேட்பு மனுத் தாக்கல், நேற்றுடன் நிறைவுஅடைந்தது.

அதிக வேட்பாளர்கள்:காங்கிரஸ், தேசியவாத காங்., சிவசேனா, பா.ஜ., ராஜ் தாக்கரே யின் நவநிர்மாண் சேனா மற்றும் பல சிறிய கட்சிகளை சேர்ந்த, 7,401 பேர், தேர்தலில் போட்டியிட வேட்பு மனுத் தாக்கல் செய்துஉள்ளனர். இதனால், மாநிலத்தில் எப்போதும் இல்லாத வகையில், அதிகப்படியான வேட்பாளர்கள் தேர்தலில் களம் இறங்கியுள்ளனர்.

அதிகப்படியாக, நாந்தெட் தெற்கு தொகுதியில், 91 பேரும், குறைந்தபட்சமாக, குகாகர், மாகிம் (மும்பை) மற்றும் கூடல் தொகுதி களில், தலா ஒன்பது பேரும் வேட்பு மனுத் தாக்கல் செய்து

உள்ளனர். மொத்தமுள்ள, 288 தொகுதிகளில், பா.ஜ., 257 இடங்களில் போட்டியிடுகிறது. மீதம் உள்ள, 31 இடங்களை கூட்டணிக் கட்சிகளுக்கு வழங்க முடிவு செய்து உள்ளது.

சிவசேனா 286 இடங்களில்...தேசியவாத காங்கிரஸ், சிவசேனா ஆகிய கட்சிகள், 286 இடங்களிலும், காங்கிரஸ் அனைத்து இடங்களிலும் தங்கள் வேட்பாளர்களை களம் இறக்கியுள்ளன.

பா.ஜ.,வுடன் கூட்டணியை முறித்துக் கொண்ட சிவசேனா, பா.ஜ.,வைச் சேர்ந்த முன்னாள் அமைச்சர் கோபிநாத் முண்டேவின் மகள், பங்கஜ் முண்டேவுக்கு எதிராக வேட்பாளரை களம் இறக்கவில்லை.

## ஜெ., தண்டனைக்கு கருத்தில்லை: தி.மு.க., மவுனத்தின் பின்னணி 2ஜி?



சொத்து குவிப்பு வழக்கில், ஜெயலலிதாவுக்கு நான்கு ஆண்டுகள் சிறைத் தண்டனை விதிக்கப்பட்டு, பெங்களூரு சிறையில் அடைக்கப்பட்டு உள்ளார்.இந்த வழக்கின் தீர்ப்பை வரவேற்று, தமிழக அரசியல் கட்சித் தலைவர்கள் பலரும் கருத்து தெரிவித்துள்ளனர். ஆனால், தி.மு.க., தரப்பு, இந்த விஷயத்தில் மவுனமாக உள்ளது.

இது தொடர்பாக, அரசியல் வட்டாரங்கள் கூறியதாவது:ஜெயலலிதா மீதான சொத்து குவிப்பு விவகாரத்தில், தி.மு.க., தரப்பு இரட்டை வேடம் போடுகிறது. வழக்கை சுப்ரமணியன் சாமி தாக்கல் செய்திருந்தாலும், ஆரம்ப காலம் தொட்டு, இந்த வழக்கில், அப்போதைய தி.மு.க., அரசு தான், தீவிர கவனம் செலுத்தி நடத்தி வந்தது.கடைசி வரையில், உச்ச நீதிமன்றத்தில் போராடியதோடு, வழக்கில் தி.மு.க., தரப்பு வழக்கறிஞராக, தர்மபுரி யின் முன்னாள் எம்.பி.,யான தாமரைசெல்வன் இருந்து செயல்பட்டார். கோர்ட்டில், வழக்கை நடத்திய அரசு தரப்பு வழக்கறிஞரும், ஜெயலலிதா தரப்பும் ஒன்றாக சேர்ந்து செயல்படுவதாக சந்தேகம் எழுந்தசூழ்நிலையில், ஜெயலலிதாவுக்கு எதிராக, நீதிபதிக்கு விவரங்களை கொண்டு சென்று, வழக்கு விசாரணையைதுரிதப்படுத்தியது, தி.மு.க., தரப்பே.

ஆனால், தீர்ப்பு வந்த பின், தி.மு.க., தரப்பு, அடக்கி வாசிக்கிறது. கருணாநிதி, எந்தவித கருத்தும் சொல்லாமல் அமைதியாக இருக்கிறார்.

'நாங்கள் தமிழக அரசின் தவறுகளை சுட்டி க்காட்டவே, வரும் சட்டசபை தேர்தலை சந்திக்க முடிவெடுத்திருக்கிறோம்' என்கின்றனர்; அதில் தவறு இல்லை.ஆனால், இந்த ஊழல் வழக்கின் தீர்ப்பை, ஜெயலலிதாவுக்கு எதிராக பெரிதுபடுத்தி னால், அ.தி.மு.க., தரப்பு, 2ஜி ஸ்பெக்ட்ரம் ஊழல் வழக்கு உட்பட, தி.மு.க., தரப்பு மீது பல்வேறு ஊழல் குற்றச்சாட்டுகளை கிளப்பி, அதை மக்கள் மத்தியில் மீண்டும் பிரதானப்படுத்தும். அது, வரும் தேர்தலில் பாதிக்கும் என,அஞ்சுகின்றனர். அதனால் தான், இந்த விஷயத்தில் அமைதி.இதை மக்களும் உணர்ந்து இருக்கின்றனர்.இவ்வாறு, அவர்கள் தெரிவித்தனர்.

## கருணாநிதியுடன் அழகிரி சந்திப்பா?

தி.மு.க., தலைவர் கருணாநிதி, பொருளா ளர் ஸ்டாலின் மீது போலீசார் வழக்குப் பதிவு செய்த தால், அதுகுறித்து விசாரிக்க, சென்னை, கோபால புரம் இல்லத்திற்கு, முன்னாள் மத்திய அமைச்சர் அழகிரியும், அவரின் மகன் துரை தயாநிதியும் வருகின்றனர் என்ற தகவலால், நேற்று பரபரப்பு உருவானது.

ஜெயலலிதாவுக்கு எதிராக அளிக்கப்பட்ட தீர்ப்பின் எதிரொலியாக, கோபாலபுரத்தில் உள்ள கருணாநிதியின் வீட்டில் கூடியிருந்த தி.மு.க.,வினர் மீது, ஆளுங்கட்சியினர் தாக்குதல் நடத்தினர். பதிலுக்கு, ஆளுங்கட்சியினர் மீது தி.மு.க.,வினரும், தாக்குதல் நடத்தினர். இது தொடர்பாக, கருணாநிதி, ஸ்டாலின் மீது ராயப்பேட்டை போலீசார் வழக்குப் பதிவு செய்து உள்ளனர்.

நேற்று காலையில், கோபாலபுரம் வீட்டிற்கு அழகிரி வருகிறார் என்ற தகவல், கட்சியினர் மத்தி யில் பரவியது. துரை தயாநிதிக்கு, நேற்று பிறந்த நாள் என்பதால், அவர் தன் தந்தை அழகிரியுடன், கருணாநிதியை சந்தித்து ஆசி வாங்க வருகிறார் என்றும், தி.மு.க.,வினர் தகவல் பரப்பினர். ஆனால், இருவரும் வரவில்லை.

## உச்ச நீதிமன்ற தலைமை நீதிபதியாக எச்.எல். தத்து பதவியேற்பு

உச்ச நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியாக எச்.எல். தத்து இன்று பதவி ஏற்றார்.

உச்ச நீதிமன்றத்தின் தலைமை நீதிபதியாக பதவி வகித்து வந்த ஆர்.எம். லோதா நேற்று ஓய்வு பெற்றார். இதைத் தொடர்ந்து உச்ச நீதிமன்றத்தின் புதிய தலைமை நீதிபதியாக எச்.எல். தத்துவுக்கு, குடியரசுத் தலைவர் பிரணாப் முகர்ஜி தலைமை நீதிபதியாக பதவிப் பிரமாணம் செய்து வைத்தார். குடியரசுத் தலைவர் மாளிகையில் உள்ள தர்பார் அரங்கில் இதற்கான விழா இன்று ஞாயிற்றுக்கிழமை நடைபெற்றது.

எச்.எல். தத்து உச்ச நீதிமன்றத்தின் 43வது தலைமை நீதிபதியாக பதவியேற்றார். 2015 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 2–ம் தேதி வரை இப்பதவியில் நீடிப்பார்.

கர்நாடக மாநிலத்தைச் சேர்ந்த எச்.எல்.தத்து, 1950 ஆம் ஆண்டு டிசம்பர் 13–ம் தேதி பிறந்தார். 1975–ம் ஆண்டு தன்னை வழக்கறிஞராக பதிவு செய்து கொண்டார். 1983–ம் ஆண்டு முதல் கர்நாடக மாநில உயர்நீதிமன்றத்தில் பல்வேறு வழக்கு களில் ஆஜரானார். அப்போது விற்பனை வரித்துறைக்கு அரசு பிளீடராகவும் இருந்தார்.

1995–ல் கர்நாடக மாநில உயர்நீதிமன்ற நீதிபதியாக பதவியேற்றார். 2007–ம் ஆண்டு சத்தீஷ்கார் மாநில உயர்நீதிமன்ற தலைமை நீதிபதியாக நியமிக்கப்பட்ட எச்.எல்.தத்து 2008–ம் ஆண்டு டிசம்பர் மாதம் உச்ச நீதிமன்றத்தின் நீதிபதியாக நியமிக்கப்பட்டார். 2014–ம் ஆண்டில் உச்ச நீதிமன்றத்தின் இரண்டாவது தலைமை நீதிபதியாக பதவியேற்றவர் என்பது குறிப்பிடத்தக்கது.

## அ.தி.மு.க.,வினரால் எதிர்க்கட்சிகளுக்கு அச்சுறுத்தல்: விஜயகாந்த் புகார்

'அ.தி.மு.க.,வினரால், எதிர்க்கட்சி தலைவர்களுக்கும், கட்சி அலுவலகங்களுக்கும் அச்சுறுத்தல் ஏற்பட்டுள்ளது' என, தமிழக கவர்னரிடம், தே.மு.தி.க., தலைவர் விஜயகாந்த் புகார் கூறியுள்ளார்.

சொத்துக் குவிப்பு வழக்கில், முதல்வர் ஜெயலலிதா குற்றவாளி என, தீர்ப்பளிக்கப்பட்ட பிறகு, தே.மு.தி.க., தலைவர் விஜயகாந்த், தீர்ப்பை வரவேற்று, நேற்று முன்தினம் அறிக்கை கொடுத்தார்.இதைத் தொடர்ந்து, கவர்னர் ரோசய்யாவை, தே.மு.தி.க., மாநில நிர்வாகிகள், எம்.எல்.ஏ.,க்கள், மற்றும் மாவட்ட செயலர்களுடன், நேற்று காலை சந்தித்தார்.

தமிழகத்தில், சட்டம் – ஒழுங்கு சீர்குலைவு, மின்வெட்டு, செய்தி டிவி ஒளிபரப்புகள் நிறுத்தம் உள்ளிட்டவை குறித்து, கவர்னரிடம் புகார் தெரிவித்தார். கூடவே, மனு ஒன்றையும் அளித்தார்.

விஜயகாந்த் வழங்கிய புகார் மனுவில் கூறப்பட்டுள்ளதாவது:

ஜெயலலிதா மீதான சொத்துக் குவிப்பு வழக்கின் தீர்ப்புக்கு பிறகு நடந்து வரும் சம்பவங்கள், வருத்தம் அளிக்கும் வகையில் உள்ளது. தமிழகத்தின் பல்வேறு பகுதிகளில், அ.தி.மு.க.,வினர், வன்முறை சம்பவங்களில் ஈடுபட்டு, பொது சொத்துக்களுக்கு சேதம்ஏற்படுத்தி வருகின்றனர்.

இதனால், வர்த்தகர்கள், பொதுமக்கள் பாதிக்கப்பட்டுள்ளனர்.இது மட்டுமின்றி, அ.தி.மு.க.,வினர், எதிர்க்கட்சி தலைவர்களுக்கும், அவர்களின் வீடுகள், கட்சி அலுவலகங்கள் போன்றவற்றிற்கும் குறி வைத்துள்ளனர்.

கடந்த சில ஆண்டுகளுக்கு முன்பு, அ.தி.மு.க.,வினரால், தர்மபுரியில் பஸ் எரிப்பு சம்பவம் நிகழ்த்தப்பட்டது. அதுதான், தற்போது அச்சத்தை ஏற்படுத்தியுள்ளது. தமிழகத்தில், சட்டம் – ஒழுங்கு சீரடையும் என்ற நம்பிக்கையை, மக்களுக்கு ஏற்படுத்த வேண்டும். இவ்விஷயத்தில் தலையிட்டு, உரிய நடவடிக்கை எடுக்க வேண்டும்.இவ்வாறு, மனுவில் கூறப்பட்டுள்ளது.

# காஷ்மீர் பிரச்னையை எழுப்புவதற்கு ஐ.நா. அமைப்பு உகந்த இடமல்ல: ஐ.நா. பொதுச் சபையில் மோடி உரை



இரு தரப்பு விவகாரமான காஷ்மீர் பிரச்னையை எழுப்புவதற்கு ஐ.நா. பொதுச் சபை உகந்த இடமல்ல என்று பிரதமர் நரேந்திர மோடி கூறினார். காஷ்மீர் பிரச்னை குறித்து ஐ.நா. பொதுச் சபையில் பாகிஸ்தான் பிரதமர் நவாஸ் ஷெரீஃப் வெள்ளிக்கிழமை பேசியதற்கு பதிலடி தரும் வகையில் அவர் இவ்வாறு பேசினார்.

இந்தியப் பிரதமராகப் பொறுப்பேற்ற பிறகு முதல்முதலாக ஐ.நா. பொதுச் சபையில் பிரதமர் மோடி சனிக்கிழமை உரையாற்றினார். அதன் விவரம்:

காஷ்மீர் பிரச்னையை ஐ.நா. பொதுச் சபையில் எழுப்புவது, இரு நாடுகளுக்கும் இடையேயான பிரச்னைகளைத் தீர்ப்பதற்கான பேச்சுவார்த்தைக்கு உகந்ததல்ல. (காஷ்மீரில் பொது வாக்கெடுப்பு நடத்த வலியுறுத்தி நவாஸ் ஷெரீஃப் பேசியதற்கு பதிலளிக்கும் வகையில் மோடி மறைமுகமாக இவ்வாறு பேசினார்).

தீவிரவாதத்தின் சுவடே இல்லாத, சுமுகமான சூழ்நிலையில் பாகிஸ்தானுடன் பேச்சு நடத்த விரும்புகிறேன். இருநாட்டு நல்லுறவையும், தோழமையையும் வலுப்படுத்துவதற்கான பேச்சுவார்த்தையில் சீரிய முறையில் ஈடுபடத் தயாராக இருக்கிறேன். அதற்கு முன்பாக, அப்படியொரு சுமுகமான சூழ்நிலையை உருவாக்க வேண்டியது தனது பொறுப்பு என்பதை உணர்ந்துகொண்டு பாகிஸ்தான் செயல்பட வேண்டும்.

வெள்ள நிவாரணத்துக்கு உதவி: இந்தியாவில் ஜம்மு-காஷ்மீர் மாநிலத்தில் ஏற்பட்ட வெள்ளத்தினால் பாதிக்கப்பட்டவர்கள் பற்றி நினைத்துப் பார்க்க வேண்டும். மிகப்பெரிய அளவில் அங்கு மீட்புப் பணிகளை மேற்கொண்டோம். வெள்ள பாதிப்புக்கு ஆளான பாகிஸ்தான் ஆக்கிரமிப்பு காஷ்மீருக்கும் உதவிகளை அளிக்க முன் வந்தோம்.

அண்டை நாடுகளுடன் சுமுக உறவு: அண்டை நாடுகளுடன் நல்லுறவு வைத்திருக்கும் நாடுதான் வளர்ச்சியை எட்டும். அந்தவகையில், பாகிஸ்தான் உள்ளிட்ட அண்டைய நாடுகளுடன் நல்லுறவைப் பேண வேண்டும் என்பதற்கு இந்திய அரசு அதிகபட்ச முன்னுரிமையை அளித்து வருகிறது.

சிறிய நாடுகளுக்கு உதவி: வளர்ந்து வரும் நாடுகளில் ஒன்றான இந்தியா, தன்னிடம் இருக்கும் ஓரளவு வளத்தைக்கூட, உதவி கேட்கும் சிறிய நாடுகளுக்கு வழங்கத் தயாராக இருக்கிறது.

அமைதிக்கு அச்சுறுத்தல்: உலக அளவில் பெரிய யுத்தங்கள் நிகழவில்லை என்றாலும் ஆசியா உள்ளிட்ட சில பிராந்தியங்களில் சண்டைகளும், அமைதியைச் சீர்குலைக்கும் வாய்ப்புகளும் உருவாகும் நிலை உள்ளது. ஆசியா – பசிபிக் பிராந்தியத்தில் கடல் போக்குவரத்து பாதுகாப்புக்கு அச்சுறுத்தல் நிலவுவது கவலையளிக்கிறது. மேற்கு ஆசியப் பகுதிகளில் நடைபெறும் கிளர்ச்சிகளினாலும் அமைதி சீர்குலைகிறது.

தீவிரவாதத்தை களைவோம்: நாடுகள் இடையேயான வேற்றுமைகளைக் களைந்துவிட்டு தீவிரவாதத்தை ஒழிப்பதற்கு ஒருங்கிணைந்த முயற்சியை மேற்கொள்வோம். சர்வதேச தீவிரவாதத்தைக் களைவதற்கான கூட்டமைப்பை ஏற்படுத்த வேண்டும்.

ஐ.நா.வுக்கு முக்கியத்துவம்: ஐ.நா. சபை இருக்கும்போது 'ஜி' அமைப்புகளை ஏற்படுத்துவது தேவைதானா என்பதை உலக நாடுகள் சிந்திக்க வேண்டும். பாதுகாப்பு கவுன்சிலை விரிவுபடுத்துவது உள்ளிட்ட ஐ.நா. சீர்திருத்தங்கள் விரைந்து மேற்கொள்ளப்பட வேண்டும். இந்தச் சபையில் உரையாற்றியதில் பெருமை கொள்கிறேன் என்றார் மோடி.

193 நாடுகள் பங்கேற்ற இந்தப் பொதுச் சபைக் கூட்டத்தில் மோடி சுமார் 35 நிமிடங்களுக்கு ஹிந்தியில் பேசினார். முன்னதாக, ஐ.நா. பொதுச்செயலர் பாங்-கீ-மூனை நரேந்திர மோடி சந்தித்தபோது காஷ்மீர் பிரச்னையை ஐ.நா.பொதுச் சபையில் நவாஸ் எழுப்பியது முறையற்றது என்றும் இருதரப்பிலான பிரச்னைகளை எழுப்புவதற்கு ஐ.நா. பொதுச்சபை உகந்த அமைப்பல்ல என்று தெரிவித்தார்.

இந்திய-அமெரிக்கர்கள் வரவேற்பு: முன்னதாக, ஐ.நா. பொதுச் சபைக் கூட்டத்தில் உரையாற்றுவதற்காக வருகைதந்த மோடியை, ஏராளமான இந்திய அமெரிக்கர்கள் வாழ்த்துக் கோஷங்களுடன் வரவேற்றனர். 'நியூயார்க் மோடியை விரும்புகிறது', 'அமெரிக்கா மோடியை விரும்புகிறது' என்பது போன்ற வாசகங்கள் அடங்கிய பதாகை களையும் அவர்கள் கையில் ஏந்தியபடி வரவேற்பு அளித்தனர்.

# 4 தீவிரவாதிகள் சுட்டுக் கொலை

அஸ்ஸாமில் பாதுகாப்புப் படையினருடன் நடந்த துப்பாக்கிச் சண்டையில் போடோலாந்து தேசிய ஜனநாயக முன்னணி அமைப்பைச் சேர்ந்த 4 தீவிரவாதிகள் ஞாயிற்றுக்கிழமை சுட்டுக் கொல்லப்பட்டனர்.

இதுகுறித்து பாதுகாப்புப் படையினர் கூறியது: கோக்ரஜார் மாவட்டத்தில் உள்ள வனப்பகுதியில் தீவிரவாதிகளைத் தேடும் பணியில் பாதுகாப்புப் படையினர் ஈடுபட்டிருந்தனர்.

அப்போது அங்கு பதுங்கியிருந்த தீவிரவாதிகள், பாதுகாப்புப் படையினரை நோக்கி சுட்டனர்.

பாதுகாப்புப் படையினரும் எதிர்த்தாக்குதல் நடத்தினர்.

இதில் 4 தீவிரவாதிகள் சுட்டுக் கொல்லப்பட்டனர்.

# கோவில்களில் பெண் பூசாரிகள் கர்நாடக முதல்வர் அறிவிப்பு

கர்நாடகாவில் உள்ள கோவில்களில், பெண் பூசாரிகளை நியமிப்பது குறித்து, மாநில அரசு தீவிரமாக ஆலோசித்து வருகிறது. இதற்கான அறிவிப்பு, விரைவில் வெளியாகும்,'' என, முதல்வர் சித்தராமையா கூறியுள்ளார்.

கர்நாடகாவில், நவராத்திரியை முன்னிட்டு, தசரா கொண்டாட்டங்கள் கோலாகலமாக நடைபெற்று வருகின்றன. மாநிலத்தின் பெரும்பாலான கோவில்களில் சிறப்பு பூஜைகள் நடைபெறுவதோடு, பெண்கள், இளைஞர்களின் பாரம்பரிய கலை நிகழ்ச்சிகளும், பார்வையாளர்களை கவரும் வகையில் அமைந்துள்ளன.

இதன் ஒரு பகுதியாக, கூட்ரோலி கோகர்னேஸ்வரர் கோவிலில், தசரா கொண்டாட்டங்களை துவங்கி வைத்த, மாநில காங்., முதல்வர் சித்தராமையா, கோவில்களில், பெண்களை பூசாரிகளாக நியமிப்பது குறித்து அரசு ஆலோசித்து வருவதாக கூறினார்.

இதுகுறித்து, சித்தராமையா கூறியதாவது:

மக்களிடையே, தீண்டாமை ஒழிக்கப்பட வேண்டும். அனைத்து சமுதாயத்தைச் சேர்ந்தவர்களுக்கும், சம நீதி கிடைக்க வேண்டும். 1912களில், நாராயண குரு, ஒடுக்கப்பட்டவர்களுக்கு நியாயம் கிடைக்க போராடினார். அவரின் பெரு முயற்சியால், அனைத்து தரப்பினரும் கோவிலுக்குள் பிரவேசித்து வழிபட்டனர்.அப்போது, தீண்டாமைக்கு எதிராக அனைவரும் குரல் கொடுத்தது போல், இப்போது பெண் உரிமைக்கும் போராட வேண்டும்.

பெண்களுக்கு மதிப்பளிக்கும் வகையில், கோவில்களில், பெண்களை பூசாரிகளாக நியமிப்பது குறித்து, மாநில அரசு ஆலோசித்து வருகிறது. அரசின் இந்த முடிவை, மக்கள் ஏற்றுக் கொள்வர் என நம்புகிறேன். அனைத்து தரப்பினரிடமும் கருத்து கேட்ட பின், விரைவில், பெண் பூசாரிகள் நியமனம் குறித்த அறிவிப்பு வெளியாகும்.இவ்வாறு, அவர் கூறினார்.

# 'ஆந்திரத் தலைநகருக்கு நிலம் கையகப்படுத்த புதிய முறை'

'ஆந்திர மாநிலத்தில் புதிய தலைநகரை உருவாக்குவதற்காக, புதிய முறையில் நிலம் கையகப்படுத்தப்படும்' என்று அந்த மாநில தகவல் தொழில்நுட்பத் துறை அமைச்சர் ரகுநாத ரெட்டி கூறினார்.

ஆந்திர மாநிலத்தின் புதிய தலைநகர், விஜயவாடா அருகில் உருவாக்கப்படும் என்று முதல்வர் சந்திரபாபு நாயுடு அறிவித்தார். அதற்காக நிலம் கையகப்படுத்துவதற்கு குழு ஒன்றை மாநில அரசு அமைத்துள்ளது.

அந்தக் குழுவில் இடம்பெற்றுள்ள தகவல் தொழில்நுட்பத் துறை அமைச்சர் ரகுநாத ரெட்டி, விஜயவாடாவில் ஞாயிற்றுக்கிழமை செய்தியாளர்களிடம் கூறியதாவது:

புதிய தலைநகருக்காக புதிய முறையில் நிலம் கையகப்படுத்தப்படும்.

அதாவது, நிலம் வழங்கும் விவசாயிகளுக்கு, அவர்களுடைய நிலத்தில் கட்டுமானப் பணிகள் மேற்கொள்ளப்பட்டு வளர்ச்சியடைந்த பிறகு, அதிலிருந்து குறிப்பிட்ட அளவு நிலம் அவர்களுக்கு திரும்ப வழங்கப்படும்.

விவசாயிகள் தாங்களாக முன்வந்து நிலம் வழங்குவதற்கு இது சிறந்த வழிமுறையாகும். இது, அவர்களுக்குச் சாதகமாகவும் இருக்கும்.

தகவல், மின்னணு துறைகளில் ரூ.42,000 கோடி முதலீடு: ஆந்திர மாநிலத்தை தகவல் தொழில்நுட்பம், மின்னணுவியல் துறைகளின் தொழில் மையமாக மாற்றுவதற்கு கொள்கை ஒன்றை அரசு தயாரித்துள்ளது.

அதன்படி, அடுத்த 5 ஆண்டுகளில் தகவல் தொழில்நுட்பத் துறையில் ரூ.12,000 கோடியும், மின்னணுவியல் துறையில் ரூ.30,000 கோடியும் முதலீடு செய்யப்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

இந்த துறைகளிலும் 9 லட்சம் பேருக்கு வேலைவாய்ப்பு வழங்கப்படும்.

விப்ரோ, டெக் மஹிந்திரா உள்ளிட்ட சில நிறுவனங்கள் ஆந்திரத்தில் முதலீடு செய்வதற்கு ஏற்கெனவே ஒப்புக் கொண்டுள்ளன.

விசாகப்பட்டினம், காக்கிநாடா, திருப்பதி, அனந்தபூர் ஆகிய நகரங்கள் தொழில் தொடங்குவதற்கு சாதகமான இடங்களாகும்.

# மகாராஷ்டிராவில் ஜனாதிபதி ஆட்சி

மகாராஷ்டிராவில், காங்கிரசைச் சேர்ந்த பிரித்விராஜ் சவான், முதல்வர் பதவியை ராஜினாமா செய்ததை அடுத்து, நேற்று முதல், அங்கு ஜனாதிபதி ஆட்சி அமல்படுத்தப்பட்டு உள்ளது.

காங்., ஆட்சிக்கு அளித்து வந்த ஆதரவை வாபஸ் பெறுவதாக, தேசியவாத காங்கிரஸ் அறிவித்தது. இதையடுத்து, காங்கிரஸ் மூத்த தலைவரான பிரித்விராஜ் சவான், கடந்த 26ம் தேதி, கவர்னர் வித்யாசாகர் ராவை சந்தித்து, பதவியை ராஜினாமா செய்வதாக கடிதம் அளித்தார்.

இதையடுத்து, சட்டசபை தேர்தலுக்கு, இன்னும், 15 நாட்கள் உள்ள நிலையில், மாநிலத்தில் ஜனாதிபதி ஆட்சியை அமல்படுத்தக் கோரி, மத்திய உள்துறை அமைச்சகத்துக்கு, கவர்னர் ராவ் பரிந்துரை செய்தார்.

உடன், மகாராஷ்டிராவில் ஜனாதிபதிஆட்சியை அமல்படுத்த, ஜனாதிபதி பிரணாப் முகர்ஜிக்கு, மத்திய அமைச்சகம், நேற்று முன்தினம் பரிந்துரை செய்தது. இதையடுத்து, மகாராஷ்டிராவில், நேற்று முதல் ஜனாதிபதி ஆட்சி அமல்படுத்தப் பட்டது.

கூட்டணி முறிவு:மகாராஷ்டிரா சட்டசபை தேர்தலில், ஆளும் கட்சி கூட்டணியில் இருந்த காங்கிரசுக்கும், தேசியவாத காங்கிரசுக்கும் இடையே, தொகுதி பங்கீட்டில் கருத்து வேறுபாடு ஏற்பட்டது. இதையடுத்து, காங்கிரசுடனான, 15 ஆண்டு கூட்டணியை, தேசியவாத காங்கிரஸ் முறித்தது.

பரிந்துரைக்கு முன்...ஜனாதிபதி ஆட்சியை பரிந்துரை செய்வதற்கு முன், சிவசேனா, பா.ஜ., ஆகிய கட்சிகளின் தலைவர்களிடம், 'உங்களால் ஆட்சி அமைக்க முடியுமா' என, கவர்னர், வித்யாசாகர் ராவ் கேட்டதாகவும் தகவல் வெளியாகியுள்ளது.

செய்திகள்

# விக்னேஸ்வரன் மற்றும் ஹக்கீமுக்கு மல்வத்து

வடமாகாண முதலமைச்சர் விக்னேஸ்வரன் மற்றும் ஸ்ரீ.ல.மு.கா தலைவர் ரவூப் ஹக்கீம் ஆகியோருக்கு நாட்டைத் துண்டாட முயற்சிக்க வேண்டாம் என்று மல்வத்து பீடம் எச்சரிக்கை விடுத்துள்ளது.

இலங்கையிலுள்ள அமெரிக்க தூதுவரான மிசெல் ஜே. சீசன், நேற்று மல்வத்து பீடத்தின் பிரதி சங்க நாயக்க நியாங்கொட விஜித தேரரை சந்தித்த போதே இந்த எச்சரிக்கை விடுக்கப்பட்டுள்ளது.

இந்த நாட்டை துண்டாடும் எந்த முயற்சியிலும் இறங்க வேண்டாமென வடமாகாண முதலமைச்சரான சீ.வி.விக்னேஸ்வரனிடமும் தமிழ்த் தேசியக் கூட்டமைப்பு உறுப்பினர்களிடம் மற்றும் ஸ்ரீலங்கா முஸ்லிம் காங்கிரஸ் தலைவரான ரவூப் ஹக்கீம் உள்ளிட்ட அனைவரிடமும் எடுத்துக் கூறுங்கள் என நியாங்கொட விஜித தேரர் அமெரிக்கத் தூதுவரிடம் தெரிவித்துள்ளார்.



தொடர்ந்தும் கருத்து வெளியிட்ட நியாங்கொட தேரர், பௌத்த மத குருமாரே இந்நாட்டின் கலாச ாரத்தில் முதன்மையானவர்கள். தேரர்களைச் சுற்றியே கலாசாரமும், சமூக கட்டமைப்புகளும் உருவாக்கப்பட்டுள்ளது. இந்த நாட்டின் பெரும்பான்மையினர் சிங்களவர்களே. அவர்களுக்கு உள்ள உரிமைகளையும் சலுகைகளையும் விட தங்களுக்கு அதிகளவில் வேண்டுமென இந்த நாட்டில் வாழும் சிறுபான்மை இனத்தினர் எதிர்பார்க்கக் கூடாது,எதிர்பார்க்கவும் முடியாது.

இந்நாட்டின் அனைத்து மக்களும் பரஸ்பர நம்பிக்கையுடனும், ஒற்றுமையுடனும் வாழ வேண்டும் என்றும் அவர் தெரிவித்துள்ளார்.

# வடக்கு முதல்வர் மற்றும் அமைச்சர்கள் சகிதம் மன்னாரில் மக்கள் சந்திப்பு



வடமாகாண முதலமைச்சர் க.வி.விக்னேஸ்வரன், அமைச்சர்களான பொ.ஐங்கரநேசன், த.குருகுலராஜா, ப.சத்தியலிங்கம், பா.டெனீஸ்வரன் சகிதம் மன்னாரில் மக்கள் குறை கேட்கும் சந்திப்பு ஒன்றை நேற்று மேற்கொண்டுள்ளார்.

மன்னார் மாவட்டத்தில் பின்தங்கிய பகுதிகளான ஈச்சளவக்கை, சன்னார் பிரதேச மக்கள் முதலமைச்சர் க.வி.விக்னேஸ்வரனிடம் தங்கள் பகுதிகளுக்கு நேரில் வந்து தாங்கள் எதிர்நோக்கும் பல்வேறு பிரச்சினைகளையும் அறிந்து அதற்கான தீர்வைப் பெற்றுத்தருமாறு வேண்டுகோள் விடுத்திருந்தனர். இதையடுத்தே முதலமைச்சர் தலைமையிலான அமைச்சர் குழுவினர் இப்பகுதிகளுக்குச் சென்று மக்கள் சந்திப்பை மேற்கொண்டுள்ளனர்.

இச்சந்திப்பின்போது பாராளுமன்ற உறுப்பினர்கள் செல்வன் அடைக்கலநாதன், வினோ நோகாதரலிங்கம் மற்றும் அமைச்சின் அதிகாரிகளும் கலந்துகொண்டிருந்தார்கள்.

ஈச்சளவக்கை, சன்னார் கிராமங்களில் மக்கள் குறைகேட்பு நிகழ்ச்சியில் கலந்துகொண்ட முதலமைச்சரும் அமைச்சர்களும் அதன் பின்னர் மன்னார் மறைமாவட்ட ஆயர் வணக்கத்துக்குரிய இராயப்பு ஜோசப்பு அவர்களையும் சந்தித்துக் கலந்துரையாடினார்கள்.

இச்சந்திப்பின் போது மன்னாரில் மேற்கொள்ளப்படும் திட்டமிட்ட குடியேற்றங்கள், பெண் தலைமைத்துவக் குடும்பங்கள் எதிர்நோக்கும் பிரச்சினைகள், ஐ.நா.மனித உரிமை ஆணையத்தின் விசாரணையில் தமிழர் தரப்பின் பங்களிப்பு உட்பட பல்வேறு விடயங்கள் விரிவாக ஆராயப்பட்டுள்ளதாகத் தெரியவந்துள்ளது.

# அரசாங்கத்தால் வடக்கு தமிழர்களின் மனங்களை வெல்ல முடியாது: அமைச்சர் ராஜித

இலங்கை அரசாங்கம் வடக்கில் பெருமெடுப்பில் அபிவிருத்திப் பணிகளை மேற்கொண்டாலும், வடக்கு தமிழ் மக்களின் மனங்களை வெல்ல முடியாது என கடற்றொழில் நீரியல் வளத்துறை அமைச்சர் ராஜித சேனாரத்ன சுட்டிக்காட்டியுள்ளார்.

கடற்றொழில் அமைச்சின் உதவியுடன் கூட்டுறவு திணைக்களத் தினால் யாழ். அரியாலை பகுதியில் புதிதாக அமைக்கப்பட்ட மீன் சந்தை திறப்பு விழாவில் இன்றைய தினம் கலந்துகொண்டு உரையாற்றும் பொழுதே அமைச்சர் மேற்கண்டவாறு கூறியுள்ளார்.

நிகழ்வில் அமைச்சர் தொடர்ந்தும் உரையாற்றுகையில்.

தமிழ் மக்கள் எதிர்கொள்ளும் பிரச்சினைகள் எமக்குத் தெரியும். அதேபோன்று இந்தமக்களின் தேவைகளும் எமக்குப் புரியும். இந்த மக்களின் உரிமைகளுக்காக கடந்த காலங்கள் முதல் இன்றுவரை பல்வேறு வழிகளிலும் மக்களுக்காக தொடர்ந்தும் குரல் கொடுத்து வருகின்றோம்.

இங்குள்ள அரசியல் கட்சிகளில் ஈழ மக்கள் ஜனநாயகக் கட்சியினர் ஆரம்பகாலம் முதலே எம்மோடு இணைந்த உறவாக செயற்பட்டு வருகின்றனர். அதேபோன்று தற்போது தமிழ்த் தேசியக் கூட்டமைப்பின் வடக்கு மாகாண சபையும் எம்முடன் இணைந்து செயற்படுகின்றது.

மாகாண அமைச்சர் மக்களின் நலன்களைக் கருத்திற் கொண்டு அரசியலுக்கப்பால் எம்முடன் இணைந்து செயலாற்றி வருகின்றார்.

இதற்கமைய வடக்கு மாகாண மீன்பிடி அமைச்சர் கடந்த சில மாதங்களிற்கு முன்னர் என்னைச் சந்தித்துக் கலந்துரையாடியிருந்தார். இதன்போது வடக்கு மீனவர்களின் தேவைகள் மற்றும் அவர்கள் எதிர்நோக்கி வருகின்ற பிரச்சினைகள் உள்ளிட்ட பல்வேறு விடயங்கள் தொடர்பாக கலந்துரையாடினார்.

இதற்கமைய வடக்கிற்குத் தேவையான கடற்தொழில் உபகரணங்கள் அனைத்தையும் மாகாண சபையினூடாக மேற்கொள்வதென்றும் வடக்கு கிழக்கிற்கு சென்று நிலைமைகளைப் பார்வையிடுவதற்கு அதிகாரிகள் அச்சம் கொண்டிருந்த வேளையிலும் உடனடியாக நிலைமைகளைப் பர்வையிடுமாறும் அதிகாரிகளுக்கு பணிப்புரை விடுத்திருக்கின்றதாகவும் குறிப்பிட்டுள்ளார்.

# மட்டு.கல்லடிப் பாலத்தில் பாய்ந்த காதலர்கள்

மட்டக்களப்பு கல்லடி பாலத்தின் கீழுள்ள வாவியில் குதித்த காதலர்கள் இருவரில், ஒருவர் உயிரிழந்துள்ளதாக பொலிஸார் தெரிவித்தனர்.

இன்று காலை 9.00 மணியளவில் கரடியனாறினை சேர்ந்த ஆணும் பெண்ணுமே இவ்வாறு பாலத்திலிருந்து பாய்ந்து தற்கொலைக்கு முயற்சித்துள்ளார். குடும்ப பிரச்சினைகள் காரணமாகவே தற்கொலைக்கு முயற்சித்துள்ளதாக விசாரணைகளின்போது தெரியவந்துள்ளதாக பொலிஸார் குறிப்பிட்டனர். சடலமாக மீட்கப்பட்டவர் தர்மலிங்கம் ராஜா (31) தற்போது இவரது சடலம் பிரேத அறையில் வைக்கப்பட்டுள்ளதாகவும், மீட்கப்பட்டவர் ஞானசெல்வம் வினோ (27) என்ற பெண், மட்டக்களப்பு போதனா வைத்தியசாலையில் சிகிச்சை பெற்று வருவதாக பொலிசார் தெரிவித்தனர்.

# மெக்சிகோ கால்பந்து அணி சென்ற பேருந்து மீது தாக்குதல்: மூவர் பலி

மெக்சிகோவின் ஏழ்மை நிறைந்த மாநிலங்களில் ஒன்றான குவேரெரோவில் போதை மருந்து வர்த்தகத்தின் ஆதிக்கம் நிறைந்திருப்பதால் வன்முறையும் அங்கு அதிக அளவில் காணப்படுகின்றது. குறிப்பாக பிராந்தியத் தலைநகரான அகபுல்கோவில் இத்தகைய தாக்குதல்கள் பொது மக்களுக்கு ஆபத்தை அளிப்பதாகவே உள்ளன.

இந்த மாநிலத்தைச் சேர்ந்த ல்குவாலா நகரில் கடந்த வெள்ளிக்கிழமை அன்று சில்பன்சிங்கோ ஹோர்நெட்ஸ் என்ற கால்பந்து அணியினரை ஏற்றிச்சென்ற பேருந்து ஒன்று வண்டியை நிறுத்துவதற்கான இடம் கிடைக்காமல் சுற்றி வந்துகொண்டிருந்தபோது அடையாளம்



தெரியாத கும்பல் ஒன்று பேருந்தை நோக்கி துப்பாக்கியால் சுட்டுள்ளது.

இதில் இரண்டு விளையாட்டு வீரர்களும், வண்டியின் ஓட்டுனரும் பலியாகியுள்ளதாக அந்நகரத்தின் பொது பாதுகாப்பு செயலாளர் நேற்று தெரிவித்துள்ளார். இதுதவிர அந்த வண்டியில் பயணம் செய்த மற்ற ஒன்பது வீரர்களும், பயிற்சியாளரும் இந்தத் தாக்குதலில் காயமடைந்ததாகவும் ஆனால் அவர்கள் ஆபத்திலிருந்து மீண்டு குணமடைந்து வருவதாகவும் அவர் குறிப்பிட்டார்.

அன்று இரவு நகர் முழுவதும் நடைபெற்ற வன்முறை சம்பவங்களில் பலர் இறக்க நேரிட்டதாகவும், டஜனுக்கும் மேற்பட்டோர் காயமடைந்துள்ளதாகவும் அதிகாரிகள் தெரிவித்துள்ளனர்.

## ஜப்பானில் எரிமலை வெடித்துச் சிதறி 30 பேர் பலி?

ஜப்பான் தலைநகரான டோக்கியோவில் இருந்து சுமார் 200 கிலோ மீட்டர் தொலைவில் உள்ள நகனோ மற்றும் கிபு பகுதிகளுக்கு இடையில் ஒன்டாகே என்ற எரிமலை அமைந்துள்ளது.

இந்த எரிமலையின் மீது ஏறி மலையேற்றக் குழுவினர் அவ்வப்போது பயிற்சி பெறுவது வழக்கமாக நடைபெற்று வருகின்றது. நேற்று காலை சுமார் 250 பேர் இந்த மலையின் மீது ஏறி பயிற்சி செய்துக் கொண்டிருந்தனர்.

அப்போது, சற்றும் எதிர்பாராத வகையில் ஒண்டாகே எரிமலை வெடித்துச் சிதறியது. இதன் விளைவாக வெளிப்பட்ட தீயின் பிழம்புகளும், சாம்பல் மேகங்களும் அம்மலையின் தென்பகுதியில் மூன்று கி.மீ தொலைவு வரை பரவின.

எரிமலையின் மேற்பரப்பில் இருந்து வெளியான சாம்பல் திட்டுகள் மேகங்களில் கலந்து, அப்பகுதி முழுவதையும் இருளில் ஆழ்த்தியது. இதனால், மலையின் சரிவுப்பகுதியில் சிக்கிக் கொண்டவர்களை மீட்கும் பணியில் தாமதம் ஏற்பட்டது. அவர்களில் சிலர் தங்களது சொந்த முயற்சியில் மலையை விட்டு மெல்ல இறங்கி, தரைப்பகுதியை வந்தடைந்தனர்.

எரிமலையில் இருந்து வெளியான வெப்பம் கலந்த சாம்பல் தாக்கி மூச்சுத்திணறி மயங்கிக் கிடந்த 30 பேரை மீட்புப் படையினர் கண்டெடுத்துள்ளதாக ஒரு பிரிவினரும், அந்த 30 பேரும் பிணமாக மீட்கப்பட்டதாக ஒரு தரப்பினரும் கூறியுள்ளதாக ஜப்பான் ஊடகங்கள் செய்தி வெளியிட்டுள்ளன.

மேலும், சாம்பலுக்குள் புதைந்து காணாமல் போன 30-க்கும் மேற்பட்டவர்களை தேடும் பணிகள் தொடர்ந்து நடைபெற்று வருவதாகவும் அந்த செய்திகள் குறிப்பிடுகின்றன.

## சோமாலியாவில் 4 ஆண்களை திருமணம் செய்த பெண் கல்லால் அடித்துக் கொலை

ஆப்பிரிக்க நாடான சோமாலியாவில் தென் கடலோர மாவட்டமான பராவேயை சேர்ந்த பெண் சபியோ அகமது ஜுமாலி (33). இவர் 4 ஆண்களை திருமணம் செய்துள்ளார்.

பராவே மாவட்டம் அல்-ஷபாப் தீவிரவாதிகளின் கட்டுப்பாட்டில் உள்ளது. இவர்கள் அல்கொய்தா அமைப்பின் ஒரு பிரிவை சேர்ந்தவர்கள்.

அங்கு இஸ்லாமிய சட்டங்கள் அமல்படுத்தப்படுகின்றன. எனவே 4 ஆண்களை திருமணம் செய்த சபியோ அகமது ஜுமாலி கைது செய்யப்பட்டார். அவர் மீது இஸ்லாமிய கோர்ட்டில் வழக்கு தொடரப்பட்டது.

வழக்கை விசாரித்த நீதிபதி ஷேக்முகமது அபு அப்துல்லா அவரை பொது மக்கள் மத்தியில் கல்லால் அடித்து கொல்ல உத்தரவிட்டார்.

அதன்படி நேற்று பராவே மாவட்டத்தில் பொது இடத்தில் தலை மட்டும் தெரியும்படி மண்ணில் புதைக்கப்பட்டார். பின்னர் அவர் கல்லால் அடித்து கொலை செய்யப்பட்டார்.

இக்காட்சியை ஏராளமானவர்கள் கூடிநின்று வேடிக்கை பார்த்தனர்

## கினியா- பிஸ்சாயு நாட்டில் கண்ணி வெடியில் சிக்கி வாகனம் நொறுங்கியது: 22 பேர் பலி

ஆப்பிரிக்க கண்டத்தில் கினியா- பிஸ்சாயு நாடு உள்ளது. இங்கு மான்சோயா நகரம் அருகே ஒரு வாகனம் சென்று கொண்டிருந்தது. அதில் இறந்த ஒருவரின் இறுதிசடங்கில் பங்கேற்க சென்றவர்கள் பலர் இருந்தனர்.

அந்த வாகனம் ஏற்கனவே மண்ணில் புதைத்து வைத்திருந்த கண்ணி வெடியில் சிக்கி வெடித்து சிதறியது. அதில் அந்த வாகனம் 2 ஆக பிளந்தது. அச்சம்பவத்தில் 19 பேர் அதே இடத்தில் பலியாகினர். பலர் காயம் அடைந்தனர்.

ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்ட அவர்களில் 3 பேர் சிகிச்சை பலனின்றி இறந்தனர். இவர்களையும் சேர்த்து இச்சம்பவத்தில் 22 பேர் பலியாகினர். கடந்த 1970 முதல் 1990-ம் ஆண்டு வரை இப்பகுதி



சுதந்திரத்துக்காக நடந்த போராட்டத்தின்போது நிலத்தில் கண்ணிவெடிகள் புதைக்கப்பட்டன.

அவை தற்போது வெடிக்கின்றன. அதில் இதுவரை நூற்றுக்கணக்கானவர்கள் பலியாகி உள்ளனர்.

## நாட்டில் உண்மையான அரசியல்வாதிகள் இல்லை: ராஜித சேனாரத்ன

நாட்டின் அரசியலில் இன்று இருக்கும் 90 வீதமானவர்கள் அமைச்சர்களும் நாடாளுமன்ற உறுப்பினர்கள் மட்டுமே, அரசியல்வாதிகள் நாட்டில் இல்லை என அமைச்சர் ராஜித சேனாரத்ன தெரிவித்துள்ளார்.

இவர்களில் ஒரு சிலரே உண்மையான அரசியல்வாதிகள். உண்மையான அரசியல்வாதிகள் நாட்டில் குறைந்துள்ளதால், பிரச்சினைகள் அதிகரித்துள்ளன.

அந்த காலத்தில் அரசியல்வாதிகள் இருந்தனர். அவர்கள் சிறந்த பண்புகளை கொண்ட அரசியல்வாதிகளாக காணப்பட்டனர். அவர்களுக்கு நாடாளுமன்ற உறுப்பினர் பதவிகளும் அமைச்சர் பதவிகளும் கிடைத்தன.

எனினும் அவர்கள் பதவிகளின் பின்னால் செல்லவில்லை. அவர்கள் சிறந்த அரசியல்வாதிகளாக செயற்பட்டனர்.

அவர்கள் இருந்த காலத்தில் நாட்டில் சிறந்த கொள்கைகளும், நிலைப்பாடுகளும் காணப்பட்டன. இன்று அப்படியான நிலைமையில்லை.

அரசியலில் தற்போதுள்ளவர்களின் நோக்கம் அதிகாரம் மற்றும் சொத்துக்களை சேகரிப்பது மாத்திரமே. இவற்றை சேகரிப்பதே அரசியல் என்று எண்ணிக்கொண்டிருக்கின்றனர். இதனை தொடர்ந்தும் முன்னெடுக்க முடியாது.

இப்படியான நாடு ஒன்றுக்கு முன்னோக்கி செல்ல முடியாது. இதனால், இதனை துய்மைப்படுத்தும் நாள் ஒன்று வரும். அப்போது அந்த போராட்டத்திற்கு எனது வயது பாதிப்பாக அமையாது எனவும் ராஜித சேனாரத்ன குறிப்பிட்டுள்ளார்.

## பொது வேட்பாளருக்கு ஆதரவு வழங்கப்படும்! - ஜனநாயகக் கட்சி

எதிர்வரும் ஜனாதிபதித் தேர்தலில் பொது வேட்பாளருக்கு ஆதரவை வழங்க தீர்மானித்துள்ளதாக சரத் பொன்சேகா தலைமையிலான ஜனநாயகக் கட்சி தெரிவித்துள்ளது.

நிறைவேற்று அதிகாரம் கொண்ட ஜனாதிபதியின் அதீதமான அதிகாரங்களை குறைத்து நாடாளுமன்றத்திற்கு முழுமையான அதிகாரிகளை வழங்க விரும்பும் பொது வேட்பாளருக்கு ஆதரவு வழங்கப்படும் என அந்த கட்சியின் செயலாளர் ஆனந்த மானவடு தெரிவித்துள்ளார்.

இது சம்பந்தமாக அங்கீகரிக்கப்பட்ட அரசியல் கட்சிகள் பலவற்றுடன் பேச்சுவார்த்தைகளை நடத்தியுள்ளதாகவும் அவர் கூறியுள்ளார்.

எவ்வாறாயினும் பொது வேட்பாளர் யார் என்ற ஸ்திரமான முடிவுக்கு வர முடியாத நிலைமை ஏற்பட்டுள்ளது எனவும் மானவடு குறிப்பிட்டுள்ளார்.

## ஹம்பாந்தோட்டையில் மான் இறைச்சியுடன் நாய் இறைச்சி கலந்து விற்பனை

ஹம்பாந்தோட்டையில் மான் இறைச்சியுடன் கலந்து நாய் இறைச்சி விற்பனை செய்யப்பட்டு வருவதை வனப்பாதுகாப்புத் துறையினர் கண்டறிந்துள்ளனர்.

ஜனாதிபதியின் சொந்த ஊரான ஹம்பாந்தோட்டைப் பிரதேசம் வரட்சிக்குப் பெயர் போன பகுதியாகும்.

தற்போது அங்கு நிலவும் கடும் வரட்சி காரணமாக குடி தண்ணீருக்கு பஞ்சம் ஏற்பட்டுள்ளதுடன், நீர் நிலைகளும் வற்றியுள்ளன.

இந்நிலையில் நீரைத் தேடி வரும் மான் உள்ளிட்ட காட்டு விலங்குகளை வேட்டையாடி விற்பனை செய்துவரும் நடவடிக்கையில் ஆளுங்கட்சி ஆதரவாளர்கள் குழுவொன்று ஈடுபட்டுள்ளது.

இவர்கள் அதிக வருமானம் ஈட்டும் மான் இறைச்சியுடன் நாய் இறைச்சியையும் கலந்து விற்பனை செய்து நோக்கில் வருவதாக வனத்துறையினருக்கு அதிர்ச்சியூட்டும் தகவல்கள் கிடைக்கப் பெற்றுள்ளன.

ஹம்பாந்தோட்டை தம்மென்னாவை குளக்கரையோரம் அவ்வாறு இறைச்சிக்காக கொல்லப்பட்ட நாய்களின் தலைகள் மற்றும் கால் பகுதிகளை வனத்துறையினர் கண்டெடுத்துள்ளனர்.

இதற்கிடையே சட்டவிரோத வேட்டையாடுதல் மற்றும் மான் இறைச்சியில் நாய் இறைச்சியைக் கலந்து விற்பனை செய்தல் என்பவற்றுக்கு எதிராக சட்ட நடவடிக்கை எடுக்க முடியாத நிலையில் வனத்துறையினர் ஆளுங்கட்சியினரால் அச்சுறுத்தப்பட்டுள்ளனர் என சிங்கள ஊடகம் செய்தி வெளியிட்டுள்ளது.

## ஆப்கானிஸ்தானில் ராணுவ வாகனத்தின் மீது வெடிகுண்டு தாக்குதல்

ஆப்கானிஸ்தானில் தலைநகர் காபூலில் திங்கட்கிழமை நடைபெறும் விழாவில், புதிய அதிபராக அஷ்ரப் கனி பதவி ஏற்க உள்ளார். அதற்கான ஏற்பாடுகள் முழு வீச்சில் நடந்து வருகின்றன. அங்கு பலத்த பாதுகாப்பு ஏற்பாடுகளும் செய்யப்பட்டுள்ளன.

இந்த நிலையில், அங்கு அதிபர் மாளிகை, தூதரக அலுவலகங்கள் அமைந்துள்ள ஜான்பாக் சதுக்கம் பகுதியில் நிறுத்தப்பட்டிருந்த ராணுவ வாகனம் ஒன்றின்மீது நேற்று காலை உள்ளூர் நேரப்படி 9.15 மணிக்கு வெடிகுண்டு தாக்குதல் நடந்தது. இதில் டிரைவர் படுகாயம் அடைந்தார். அவரது இருக்கையும் சேதம்



அடைந்தது. இந்த சம்பவத்தால், காபூலில் நேற்று பரபரப்பு நிலவியது.

## பெருவில் நிலநடுக்கம்: ரிக்டர் அளவுகோலில் 4.9 ஆக பதிவு-7 பேர் பலி

பெரு நாட்டின் கஸ்கோ நகரத்திற்கு அருகே உள்ள பின்தங்கிய கிராமமான அண்டியனில் நேற்று மிதமான நிலநடுக்கம் ஏற்பட்டது. இந்த நிலநடுக்கத்தில் புதிதாய் கட்டப்பட்ட வீடுகள் இடிந்தது. இதில் கட்டிட இடுபாடுகளில் சிக்கி ஏழு பேர் பலியானதாக அந்நாட்டு அதிகாரிகள் தெரிவித்தனர்.

பருரோ பகுதியிலும் நிலநடுக்கத்தால் உயிரிழப்பு ஏற்பட்டுள்ளதாக பொதுமக்கள் பாதுகாப்பு நிறுவனம் தெரிவித்துள்ளது. நிலப்பரப்பில் இருந்து ஐந்து மைல் தொலைவில் இந்த நிலநடுக்கம் மையம் கொண்டிருந்ததாக தனது வலைதளத்தில் அது



கூறியுள்ளது. இதன் காரணமாக 15 வீடுகள் இடிந்ததுடன் 75 பேர் தங்கள் வீடுகளை இழந்துள்ளனர். இந்நிலநடுக்கத்தால் அப்பகுதியில் ஐந்து பேர் படுகாயமடைந்தனர். மின் சப்ளையும் துண்டிக்கப்பட்டுள்ளது.

யாரிஸ்க் நகர மேயரான வில்பர் லோய்சா இது குறித்து கூறுகையில் கஸ்கோவில் இருந்து இரண்டு மணி நேரத்தில் செல்லக்கூடிய பகுதியாக பருரோ உள்ளது என்றார். விவசாய பூமியான இந்நகரத்தில் 1000 மக்கள் வசித்துவருவது குறிப்பிடத்தக்கது.

## ஏர்பிரான்ஸ் விமானிகளின் வேலைநிறுத்தம் முடிவுக்கு வந்தது




பட்ஜெட் விமான நிறுவனங்கள் மற்றும் அரச குடும்பத்தினரால் ஆதரிக்கப்படும் அரபு விமான நிறுவனங்கள் ஏற்படுத்தும் கடும் வர்த்தகப் போட்டியைத் தொடர்ந்து ஐரோப்பாவின் பல விமான நிறுவனங்கள் தங்களின் பட்ஜெட் சேவையைத் தொடர உத்தேசித்துள்ள வேளையில் ஐரோப்பாவின் இரண்டாவது பெரிய விமான நிறுவனமான ஏர்பிரான்ஸ் தனது பட்ஜெட் நிறுவனமான டிரான்ஸ்அவிவாவின் சேவைகளை ஐரோப்பாவில் அதிகரிக்க முடிவு செய்தது. அதிக சம்பளம் பெற்றுவந்த அந்நிறுவன விமானிகளிடையே விமான நிறுவனத்தின் திட்டங்கள் குறித்து எழுந்த கருத்து வேற்றுமையானது போராட்டத்தில் முடிந்தது.

இரண்டு வாரத்துக்கும் மேல் நடைபெற்ற இந்தப் போராட்டத்தால் 60 சதவிகிதத்திற்கும் மேற்பட்ட விமானங்கள் தரையிறக்கம் செய்யப்பட தினந்தோறும் 20 மில்லியனுக்கும் மேற்பட்ட யூரோ நஷ்டத்தை விமான நிறுவனம் சந்திக்க நேர்ந்தது. தொடர்ந்து நடைபெற்ற பேச்சுவார்த்தைகள் தோல்வியைத் தழுவிய நிலையில் சுதந்திரமான இடைத்தரகர் நியமிக்கப்பட்டால் போராட்டத்தை நிறுத்திக் கொள்வதாக விமானிகள் சங்கம் தெரிவித்தது. ஆனால் விமான நிறுவனம் மட்டுமின்றி, 16 சதவிகித பங்குகளைக் கொண்டிருந்த அரசு தரப்பும் இத்திட்டத்தை நிராகரித்தது. இருப்பினும், பட்ஜெட் விமான சேவையை உள்நாட்டில் மட்டும் தொடர்வது என்றும், ஐரோப்பாவில் இதன் விஸ்தரிப்பை நிறுத்திவைப்பது என்றும் விமான நிறுவனம் எடுத்த முடிவைத் தொடர்ந்து விமானிகள் சங்கம் வேலைநிறுத்தத்தை முடித்துகொள்வதாக நேற்று இரவு அறிவித்தது. இதன்பின்னர் இன்று பாதிக்கும் குறைவான விமானங்கள் இயக்கப்படும் என்று ஏர் பிரான்ஸ் அறிக்கை வெளியிட்டது.

இருதரப்பினரிடையேயும் எந்தவிதமான உடன்பாடும் ஏற்படவில்லை என்றபோதிலும் வேலைநிறுத்தம் முடிவுக்கு வந்ததால் பேச்சுவார்த்தை அமைதியான சூழலில் தொடரும் என்று தொழிற்சங்க யூனியனின் செய்தித் தொடர்பாளர் ஒருவர் தெரிவித்தார்.

## பிரதமர் மோடியுடன் விருந்து: ஆப்கன் அதிபர் பதவியேற்பு விழாவைத் தவிர்த்த ஜான் கெர்ரி

ஆப்கானிஸ்தானில் கடந்த ஏப்ரல் மாதம் அதிபர் தேர்தல் நடந்தபோது முதல் சுற்று அறிவிப்புகள் அப்துல்லா அப்துல்லாவிற்கு சாதகமாக இருந்தது. ஆனால் அதன்பின் வந்த இரண்டாம் சுற்று முடிவுகள் அஷ்ரப் கனியை முன்னிலைப்படுத்தியபோது அங்கு பிரச்சினை தோன்றியது. நான்கு மாதங்களுக்கும் மேலாகத் தீர்வு காணமுடியாமல் இருந்த இந்தப் பிரச்சினையைத் தீர்ப்பதற்காக அமெரிக்காவின் வெளியுறவுத்துறை அமைச்சர் ஜான் கெர்ரி பலமுறை ஆப்கானிஸ்தானுக்குப் பயணித்தார்.

இறுதியாக இரண்டு வேட்பாளர்களுக்கும் இடையில் ஒற்றுமை அரசு குறித்த ஒரு ஒப்பந்தம் ஏற்கப்பட்டு அஷ்ரப் கனி வென்றதாக சென்ற வாரம் அறிவிக்கப்பட்டது. இதனைத் தொடர்ந்து நாளை அஷ்ரப் பதவியேற்பு விழா நடைபெற உள்ளது. இந்த நிகழ்ச்சியில் ஜான் கெர்ரி பங்கேற்பதாக இருந்தது. ஆனால் ஐ.நா பொதுசபை ஆண்டு கூட்டத்தில் கலந்துகொள்ளும்விதமாக தற்போது நியுயார்க்கில் இருக்கும் இந்தியப் பிரதமர் மோடி நாளை வாஷிங்டனுக்கு செல்லுகின்றார். அங்கு நாளை அமெரிக்க



அதிபர் பாரக் ஒபாமா இந்தியப் பிரதமருக்கு இரவு விருந்தினை அளிக்கின்றார். வெள்ளை மாளிகையில் நடைபெறும் இந்த சந்திப்பிற்குப் பின்னர் நாளை மறுநாள் மதிய விருந்தினை அமெரிக்க துணை அதிபர் ஜோ பிடெனும், ஜான் கெர்ரியும் நரேந்திர மோடிக்கு அளிப்பதாகத் திட்டமிடப்பட்டுள்ளது.

இந்தியாவுடனான உறவினை வலுப்படுத்த ஒபாமா நிர்வாகம் விரும்புவதை முன்னிட்டு ஆப்கன் அதிபர் பதவியேற்பு நிகழ்ச்சியை ஜான் கெர்ரி தவிர்த்துள்ளார் என்று அரசு தரப்பு செய்திகள் குறிப்பிட்டுள்ளன.

## நியூயார்க்கில் 60 ஆயிரம் பேர் பங்கேற்ற விழாவில் மோடி



அமெரிக்காவில் சுற்றுப் பயணம் செய்து வரும் பிரதமர் நரேந்திரமோடி இன்று நியூயார்க் சென்ட்ரல் பார்க்கில் நடந்த 'குளோபல் சிட்டிசன்' திருவிழாவில் கலந்து கொண்டார். இதில் 60 ஆயிரம் பேர் கலந்து கொண்டனர்.

அதில் பேசிய அவர், ''சுகாதாரம், சுத்தமான குடிநீர், உடல் நலம் குறித்து பேசினார். இங்கு அவர் ஆங்கிலத்தில் பேசினார். எதிர்காலம் இளைஞர்கள் கையில் உள்ளது. இன்று நீங்கள் செய்வதுதான் நாளைய தினத்தை உருவாக்கும்'' என்றார்.

விழாவில் கலந்து கொண்ட அவர் வெள்ளைநிற குர்தா மீது நீலநிற நேரு ஜாக்கெட் அணிந்து இருந்தார். இந்த விழாவில் ஆலிவுட் நடிகர் ஹக்ஜாக்மேன் கலந்து கொண்டார். அவரை மோடி கட்டித்தழுவி வரவேற்றார்.

## ஆப்கானிஸ்தானில் 4 தலிபான் தீவிரவாதிகளை தூக்கிலிட்டு கொன்ற கிராம மக்கள்

ஆப்கானிஸ்தானில் ஹாஷ்னி மாகாணத்தில் அஜ்ரஸ்தான் மாவட்டம் உள்ளது. இப்பகுதியில் தற்போது தலிபான் தீவிரவாதிகள் ஆதிக்கம் செலுத்தி வருகின்றனர். கடந்த வாரம் அங்கு திடீர் தாக்குதல் நடத்தினார்கள்.

அதில் 100-க்கும் மேற்பட்டோரை கொன்று குவித்தனர். அவர்களில் 20 பேர் தலை துண்டிக்கப்பட்டனர். இச்சம்பவத்தை தொடர்ந்து அங்கு ஆப்கானிஸ்தான் ராணுவம் தாக்குதல் தொடங்கி நடத்தி வருகிறது.

இந்த நிலையில் அங்கு உயிருடன் பிடிபட்ட 4 தலிபான் தீவிரவாதிகள் அர்ஷாகை என்ற கிராம மக்களிடம் ஒப்படைக்கப்பட்டனர்.

அவர்களை அங்குள்ள



மரத்தில் கிராம மக்கள் தூக்கிலிட்டு கொன்றனர். 100 பேரை கொன்றதற்கு பழி வாங்கவே இந்த நடவடிக்கையில் அவர்கள் ஈடுபட்டனர்.

இந்த தகவலை ஹஷானி துணை கவர்னர் முகமது அலி அக்மதி தெரிவித்துள்ளார்.

# நேஷனல் ஹெரால்டு பத்திரிகை வழக்கு

## விசாரணைக்கான தடை நீட்டிப்பு



காங்கிரஸ் தலைவர் சோனியா காந்தி, ராகுல் காந்திக்கு எதிரான நேஷனல் ஹெரால்டு பத்திரிகை வழக்கின் விசாரணைக்கு விதிக்கப்பட்ட தடையை டெல்லி உயர்நீதிமன்றம் நீட்டித்துள்ளது.

இதுதொடர்பான வழக்கு உயர்நீதிமன்றத்தில் புதன்கிழமை விசாரணைக்கு வந்தபோது, சோனியா காந்தி, ராகுல் காந்தி ஆகியோரது வழக்கறிஞர் ஆஜராகவில்லை.

இதற்கு ஆட்சேபம் தெரிவித்த மனுதாரர் சுப்பிரமணியன்சாமி, கீழ் நீதிமன்ற விசாரணைக்கு விதிக்கப்பட்ட தடையை நீக்குமாறு கோரிக்கை விடுத்தார்.

இதனை ஏற்க மறுத்த உயர் நீதிமன்ற நீதிபதி, சோனியா மற்றும் ராகுலின் வழக்கறிஞர் ஆஜராகாததால், விசாரணையை நவம்பர் 3ஆம் தேதிக்கு ஒத்திவைத்தார். அன்றைய தினம், இறுதி விசாரணை நடைபெறும் என கூறிய நீதிபதி, அதுவரை கீழ் நீதிமன்ற விசாரணைக்கு விதிக்கப்பட்ட தடை தொடரும் என்றார்.

கட்சிப் பணம் மூலம் நேஷனல் ஹெரால்டு பத்திரிகையை முறைகேடாக வாங்கியதாக சோனியா காந்தி, ராகுல் காந்தி, ஆஸ்கர் பெர்னாண்டஸ் உள்ளிட்டோர் மீது டெல்லி நீதிமன்றத்தில் சுப்பிரமணியன்சாமி வழக்கு தொடர்ந்திருக்கிறார்.

இந்த வழக்கை ரத்து செய்யக்கோரி சோனியா காந்தி, ராகுல் காந்தி உள்ளிட்டோர் தாக்கல் செய்த மனு டெல்லி உயர் நீதிமன்றத்தில் விசாரணையில் உள்ளது.

உத்தரப்பிரதேசத்தில்

# ராணுவ ஹெலிகாப்டர் விபத்து

## விமானிகள் உட்பட மூவர் பலி



உத்தரப்பிரதேசத்தில், விமானப்படைக்கு சொந்தமான ஹெலிகாப்டர் தீப்பிடித்து விழுந்து நொறுங்கியதில் விமானிகள் இருவர் உள்பட மூவர் உயிரிழந்தனர்.

அந்த ஹெலிகாப்டர் பரேலியில் இருந்து புறப்பட்ட சில நிமிடங்களிலேயே விபத்து நேரிட்டது. ஹெலிகாப்டர் புறப்பட்டபோது கட்டுப்பாடு இழந்து தடுமாறியதாகவும், பின்னர் தீப்பிடித்ததாகவும் விபத்தை நேரில் பார்த்தவர்கள் கூறியிருக்கிறார்கள். விபத்து நேரிட்ட பகுதிக்கு போலீஸ் அதிகாரிகளும், அரசு அதிகாரிகளும் விரைந்துள்ளனர். விபத்துக்கான காரணம் குறித்து விசாரிக்க உத்தரவிடப்பட்டிருக்கிறது.

# இந்திய நிறுவனங்களுக்கு வாய்ப்பு

## ஒபாமாவிடம் மோடி வலியுறுத்தல்



இந்திய சேவைத் துறை நிறுவனங்கள் அமெரிக்க சந்தைகளை எளிதாக அணுகும் வகையில் வாய்ப்புகள் ஏற்படுத்தி தரப்பட வேண்டும் என பிரதமர் மோடி கேட்டுக்கொண்டுள்ளார்.

அமெரிக்க அதிபர் ஒபாமா உடனான சந்திப்பின்போது இந்த கோரிக்கையை மோடி வலியுறுத்தினார். இது தவிர உலக வர்த்தக ஒப்பந்தம் தொடர்பான இந்தியாவின் கவலைகள்

கருத்தில் கொள்ளப்பட வேண்டும் என ஒபாமாவிடம் மோடி வலியுறுத்தினார். உலக வர்த்தக ஒப்பந்தத்தில் இந்தியாவுக்கு பாதகமான அம்சங்கள் குறித்து ஒபாமாவுடன் விரிவாக விவாதித்ததாக மோடி கூறினார்.

உணவு மானியக் கட்டுப்பாடு உள்ளிட்ட அம்சங்களில் இந்தியாவின் கவலைகளுக்கு விரைவில் தீர்வு காணப்படும் என்றும் மோடி நம்பிக்கை தெரிவித்தார்.

உலக வர்த்தகத்தை விரிவுபடுத்துவதற்காக ஏற்படுத்தப்பட்டுள்ள உலக வர்த்தக ஒப்பந்தத்தில் இடம்பெற்றுள்ள உணவு மானியக் கட்டுப்பாடு உள்ளிட்ட அம்சங்கள் இந்தியாவுக்கு பாதகமாக உள்ளதால், இதற்கு தீர்வு காண் பது குறித்து ஒபாமாவுடன் மோடி பேசியுள்ளார்.

# உலக வர்த்தக அமைப்பு ஒப்பந்தம்

## பேச்சு நடத்த இந்தியா, அமெரிக்கா முடிவு



உலக வர்த்தக அமைப்பின் சர்வதேச வணிக ஒப்பந்தத்தில் ஏற்பட்டுள்ள இழுபறி நிலையை மாற்ற ஆலோசனை நடத்தப்போவதாக இந்தியாவும், அமெரிக்காவும் அறிவித்துள்ளன.

அமெரிக்க அதிபர் பராக் ஒபாமாவும், பிரதமர் நரேந்திர மோடியும் இணைந்து வெளியிட்டுள்ள கூட்டறிக்கையில் இது தெரிவிக்கப்பட்டுள்ளது.

உலக வர்த்தக அமைப்பின் சர்வதேச வணிக ஒப்பந்தத்தில் மொத்த தானிய உற்பத்தியில் 10 சதவிகிதம் வரை மட்டுமே கிடங்குகளில் சேமிக்கவும், உணவு மானியத்தை குறைக்கவும் வலியுறுத்தப்பட்டு வருகிறது.

ஆனால், வளரும் நாடுகளில் ஏழைகளின் நலனைப் பாதுகாக்கவும், இந்தியாவில் உணவுப் பாதுகாப்பு சட்டத்திற்கு பாதிப்பு ஏற்படாமல் இருக்கவும் மானியக் குறைப்பை ஏற்க இயலாது என்று இந்தியா தெரிவித்துள்ளது.

இதனால், ஒப்பந்தம் நிறைவேறாத சூழ்நிலையில், இது பற்றி அவசர ஆலோசனை நடத்த இந்தியாவும், அமெரிக்காவும் ஒப்புக் கொண்டுள்ளன.

இயற்பியல் துறை நோபல் பரிசு

# சென்னையைச் சேர்ந்தவரின் பெயர் பரிந்துரை



நடப்பாண்டு இயற்பியல் துறை நோபல் பரிசுக்கான பட்டியலில், அமெரிக்காவில் வசிக்கும், தமிழகத்தைச் சேர்ந்தவரான ராமமூர்த்தி ரமேஷின் பெயர் பரிந்துரைக்கப்பட்டிருக்கிறது. ராய்ட்டர்ஸ் செய்தி நிறுவனம், இந்த பரிந்துரை பட்டியலை வெளியிட்டுள்ளது.

அமெரிக்காவின் கலிபோர்னியா, மாகாணத்தில் உள்ள பல்கலைக் கழகத்தில் பணியாற்றி வரும் ராமமூர்த்தி ரமேஷ், கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழக பேராசிரியர் ஜேம்ஸ் காட், ஜப்பான் பேராசிரியர் யொஷினோரி டோகுரா உள்ளிட்டோரின் பெயர்களையும், இந்தப் பரிந்துரைப்பட்டியலில் இடம்பெற்றுள்ளன.

பெங்களூர் ஐ.ஐ.டி.யில் படித்த ராமமூர்த்தி சென்னையைச் சேர்ந்தவராவார். கலிபோர்னியா பல்கலைக்கழகத்தில் மெட்டீரியல் சயின்ஸ் பிரிவில் முனைவர் பட்டம் மேற்கொண்டுள்ள ரமேஷ், சிக்கலான ஆக்ஸைடுகள் குறித்த ஆராய்ச்சிற்காக, நோபல் பரிசுக்கான பரிந்துரைப் பட்டியலில் இடம் பெற்றுள்ளார். இந்த பரிந்துரை அதிகாரபூர்வமற்றது என்றும் பரிசு கிடைத்தால் மகிழ்ச்சி என்றும் ராமமூர்த்தி ரமேஷ் தெரிவித்திருக்கிறார்.

செவ்வாய் கிரக ஆராய்ச்சி

# நாசா-இஸ்ரோ இடையே ஒப்பந்தம் கையெழுத்து



செவ்வாய் கிரகத்தை ஆராய்ச்சி செய்யும் பணியில் இணைந்து செயல்படுவது என இந்தியாவும், அமெரிக்காவும் முடிவு செய்துள்ளன.

நாசா விண்வெளி ஆராய்ச்சி கழகத்தின் நிர்வாகி சார்லஸ் போல்டன், இஸ்ரோ தலைவர் ராதாகிருஷ்ணன் ஆகியோர் இதற்கான ஒப்பந்தத்தில் கையெழுத்திட்டுள்ளனர்.

செவ்வாய் கிரகத்தை ஆராய இரு நாட்டு விஞ்ஞானிகள் கொண்ட குழு ஒன்றை அமைக்கவும் திட்டமிடப்பட்டுள்ளது.

2020 ம் ஆண்டு நாசா-இஸ்ரோ இணைந்து விண்வெளியில் செலுத்த திட்டமிடப்பட்டுள்ள ராடார் தொடர்பான மற்றொரு ஒப்பந்தமும் கையெழுத்தானது.

இருநாட்டு விஞ்ஞானிகளின் குழு, வருடத்திற்கு ஒருமுறை சந்தித்து, செவ்வாயில் ஆராய்ச்சி நடத்த ஒருங்கிணைந்து செயல்படுவது குறித்து ஆலோசனை நடத்தும். இந்த ஒப்பந்தங்களின் மூலம், இரு நாடுகள் மட்டுமின்றி, பிற நாடுகளும் பயனடையும் என்று அமெரிக்கா தெரிவித்துள்ளது.

அமெரிக்காவின் நாசா விண்வெளி அமைப்பு அனுப்பிய மாவென் விண்கலம், செவ்வாய் கிரகத்தின் மேற்பகுதியை ஆராய்ச்சி செய்து வருகிறது. இந்தியாவின் மங்கள்யான் செவ்வாய் கிரகத்தில் உயிர்வாழ சாத்திய கூறுகள் உள்ளதா என்று ஆராய்ந்து வருகிறது.

# இந்திய வம்சாவளியினருக்கு நிரந்தர விசா

## அரசாணை வெளியிட்டது மத்திய அரசு



வெளிநாடுகளில் வாழும் இந்திய வம்சா வளியினருக்கு, நிரந்தர விசா வழங்குவதற்கான ஆணையை மத்திய அரசு பிறப்பித்துள்ளது.

நியூயார்க் மேடிசன் சதுக்கத்தில் இந்திய வம்சாவளியினர் மற்றும் அமெரிக்க வாழ் இந்தியர்கள் மத்தியில் சில தினங்களுக்கு முன் உரையாற்றிய பிரதமர் மோடி, அவர்களுக்கு ஆயுட்கால விசா வழங்கப்படும் என உறுதியளித்திருந்தார்.

இதன்படி, அரசிதழில் அறிவிப்பாணையை வெளியிட்டுள்ள மத்திய உள்துறை அமைச்சகம், இந்திய வம்சாவளியினர் என பதிவு செய்யப்பட்ட அனைவருக்கும், வாழ்நாள் முழுவதும் செல்லத்தக்க விசா வழங்கப்படும் என தெரிவித்துள்ளது.

மேலும், இந்திய வம்சாவளியினர், இனி எவ்வளவு நாட்கள் வேண்டுமென்றாலும் காவல்துறை அனுமதியின்றி இந்தியாவில் தங்கிக் கொள்ளலாம் என மத்திய அரசு தெரிவித்துள்ளது. இதற்குமுன், இந்திய வம்சாவளியினருக்கு 15 ஆண்டுகளுக்கு செல்லத்தக்க விசா வழங்கப்பட்டு வந்தது.

தேவையெனில், மேலும் 10 ஆண்டுகளுக்கு விசாவை நீட்டித்துக்கொள்ள முடியும். தற்போது அறிவிக்கப்பட்டுள்ள ஆயுட்கால விசா முறை இலங்கை, பாகிஸ்தான், ஆப்கானிஸ்தான், சீனா, நேபாளம், பூட்டான் ஆகிய நாடுகளைச் சேர்ந்த இந்திய வம்சாவளியினருக்கு பொருந்தாது.

# தூய்மை இந்தியா திட்டம்

## பிரதமர் மோடி இன்று தொடங்கி வைக்கிறார்

பிரதமர் நரேந்திர மோடி இன்று தொடங்க உள்ள தூய்மை இந்தியா திட்டத்தில் நாடு முழுவதும் உள்ள 31 லட்சம் மத்திய அரசு ஊழியர்கள் பங்கேற்பார்கள் என்று மத்திய அமைச்சரவைச் செயலாளர் அஜித் சேத் தெரிவித்துள்ளார்.

இது தொடர்பாக அவர் வெளியிட்டுள்ள செய்திக்குறிப்பில், இந்த மிகப்பெரிய முயற்சியில் மாநில அரசு ஊழியர்களும் பங்கேற்க வேண்டும் என கேட்டுக் கொள்ளப்பட்டிருப்பதாகத் தெரிவித்துள்ளார்.

அரசு அலுவலகங்களிலும், பொது நிகழ்ச்சிகள் மூலமாகவும் தூய்மை குறித்த விழிப்புணர்வுப் பணிகள் மேற்கொள்ளப்படும் என்று குறிப்பிட்டுள்ள அஜித் சேத், அரசு ஊழியர்கள் அனைவரும் தூய்மையைப் பேணுவதற்கான உறுதி மொழியை ஏற்கவும் திட்டமிடப்பட்டுள்ளதாகத் தெரிவித்துள்ளார்.

விழிப்புணர்வை ஏற்படுத்தும் நிகழ்ச்சிகளோடு, தூய்மைப் பணிகளும் மேற்கொள்ளப்படும் என்று குறிப்பிட்டுள்ள அஜித் சேத், வீடுகள், பணி இடங்கள், சாலைகள், பேருந்து நிலையங்கள், ரயில் நிலையங்கள், நீர் நிலைகள் என அனைத்து இடங்களையும் சுத்தப்படுத்துவதன் மூலம் இத்திட்டத்தை வெற்றி பெறச் செய்ய முடியும் என்று அவர் கூறியுள்ளார்.

மகாத்மா காந்தியின் 150 ஆவது பிறந்த தினம் கொண்டாடப்பட உள்ள 2019ஆம் ஆண்டுக்குள் அவர் கண்ட கனவான தூய்மையான இந்தியாவை உருவாக்குவதே இத்திட்டத்தின் நோக்கம் என பிரதமர் நரேந்திர மோடி தெரிவித்திருந்தார்.

## செய்திச்சாரல்

### கால்வாயை சீரமைக்க கோரி சாலை மறியல்

நீலகிரி மாவட்டம் உதகை சேரிங் கிராஸ் பகுதியில் உள்ள கழிவு நீர்க் கால்வாயை சீரமைக்கக் கோரி மக்கள் சாலை மறியலில் ஈடுபட்டனர். இந்த கால்வாய் சரிவர பராமரிக்கப்படாததால் அடைப்பு ஏற்பட்டு கழிவு நீர் சாலையில் ஓடுவதாக அவர்கள் குற்றம் சாட்டினர். பின்னர் அங்கு வந்த காவல்துறையினர் நடத்திய பேச்சு வார்த்தை அடுத்து மறியலில் ஈடுபட்டவர்கள் கலைந்து சென்றனர்.

### ரூ.2 லட்சம், தங்கம் கொள்ளை

திருவள்ளூர் மாவட்டத்தில் ஒரு கடையிலிருந்து 2 லட்சம் பணம் மற்றும் ஒரு லட்சம் ரூபாய் மதிப்பிலான தங்க நாணயங்கள் கொள்ளையடிக்கப்பட்டுள்ளன. அதன் உரிமையாளர் நேற்று காலை வழக்கம் போல் கடையைத் திறக்க வந்தபோது, கதவு உடைக்கப்பட்டிருப்பதைக் கண்டு அதிர்ச்சியடைந்தார். உள்ளே சென்று பார்த்த போது பொருட்கள் கொள்ளையடிக்கப்பட்டிருப்பது தெரியவந்தது. இதுகுறித்து புகார் தெரிவிக்கப்பட்டதை அடுத்து போலீசார் விசாரணை நடத்தி வருகின்றனர்.

### மொட்டை அடித்து போராட்டம்

சொத்துக்குவிப்பு வழக்கில் ஜெயலலிதாவுக்கு சிறை தண்டனை விதிக்கப்பட்டதைக் கண்டித்து தஞ்சாவூர் மாவட்டம் கும்பகோணம் அருகே அதிமுகவினர் மொட்டை அடித்து கண்டன ஆர்ப்பாட்டத்தில் ஈடுபட்டனர். திருக்கோடிக்காவல் அய்யனார் கோயில் அருகே இந்த ஆர்ப்பாட்டம் நடைபெற்றது. இதில் 25க்கும் மேற்பட்டோர் மொட்டை அடித்து போராட்டத்தில் ஈடுபட்டனர்.

### வாகன விபத்தில் அதிமுக பிரமுகர் பலி

புதுக்கோட்டை மாவட்டம் திருமயத்தில் இருசக்கர வாகனங்கள் மோதிய விபத்தில் அதிமுக பிரமுகர் ஒருவர் உயிரிழந்தார். நெய்வாசல் கிராமத்தை சேர்ந்த அதிமுக பிரமுகர் சேவியர் திருமயத்தில் நடைபெற்ற போராட்டத்தில் பங்கேற்றுவிட்டு இருசக்கரவாகனத்தில் திரும்பியுள்ளார். அப்போது திருமயம் பெட்ரோல் பங்க் அருகே அவரது வாகனம் கணேசன் என்பவரது வாகனம் மீது மோதியது. இதில் சேவியர் தலையில் காயம் ஏற்பட்டது. இதையடுத்து திருச்சி மருத்துவமனையில் சேர்க்கப்பட்ட சேவியர் சிகிச்சை பலனின்றி உயிரிழந்தார்.

### முதியோர் தினத்தை முன்னிட்டு பேரணி

சர்வதேச முதியோர் தினத்தை முன்னிட்டு, புதுச்சேரியில் நேற்று நடைபயிற்சி விழிப்புணர்வு பேரணி நடைபெற்றது. நடைபயிற்சியின் முக்கியத்துவத்தை உணர்த்தும் வகையில் 500க்கும் மேற்பட்ட முதியோர் மற்றும் மாணவர்கள் இந்த பேரணியில் கலந்து கொண்டனர். புதுச்சேரி கடற்கரையில் இருந்து நான்கு கிலோ மீட்டர் தூரம் விழிப்புணர்வு பேரணி நடத்தப்பட்டது.

### இலவச மருத்துவ முகாம்

ராமநாதபுரம் மாவட்டம் கடலாடி அருகேயுள்ள கண்ணன் புதுவன் கிராமத்தில் கால்நடைகளுக்கான இலவச மருத்துவ முகாம் நடைபெற்றது. மழைக்காலங்களில் கோமாரி, கோழிக்கழிச்சல் போன்ற நோய் தாக்காமல் தடுக்க கால்நடைகளுக்கும் பறவைகளுக்கும் தடுப்பூசிகள் போடப்பட்டு அவற்றின் உரிமையாளர்களுக்கு ஆலோசனை வழங்கப்பட்டது.

### சாலை விபத்தில் இருவர் பலி

விருதுநகர் மாவட்டம் ஸ்ரீவில்லிபுத்தூர் அருகே விலக்கு தேசிய நெடுஞ்சாலையில் நிகழ்ந்த சாலை விபத்தில் இருவர் உயிரிழந்தனர். காரும் சரக்கு வேனும் நேருக்கு நேர் மோதிய இந்த விபத்தில் வேன் ஓட்டுநரும், காரில் சென்ற பெண்ணும் பலியாயினர். காரில் பயணித்த ஒரு சிறுவன் உட்பட நான்கு பேர் படுகாயம் அடைந்தனர். அவர்கள் ஸ்ரீவில்லிப்புத்தூர் அரசு மருத்துவமனையில் சேர்க்கப்பட்டுள்ளனர்.

### மணல் கடத்தல்: லாரிகள் மற்றும் இயந்திரம் பறிமுதல்

திருவண்ணாமலை மாவட்டம் காழியூர் கிராமத்தில் அனுமதியின்றி மணல் அள்ள பயன்படுத்தப்பட்ட 2 லாரிகள் மற்றும் இயந்திரத்தை காவல்துறையினர் பறிமுதல் செய்தனர். காழியூர் கிராமத்தில் செய்யாறு ஆற்றுப்படுகையில் அனுமதியின்றி மணல் அள்ளப்படுவதாக வந்த தகவலை அடுத்து காவல்துறையினர் ரோந்துப்பணி மேற்கொண்டனர். அப்போது ஆற்றில் மணல் அள்ளிக்கொண்டிருந்தவர்கள் காவல்துறையினரைக் கண்டதும் தப்பியோடிவிட்டனர். அவர்கள் விட்டுச்சென்ற லாரிகளையும், மணல் அள்ளும் இயந்திரத்தையும் போலீசார் பறிமுதல் செய்தார்கள்.

---

**என்எல்சி ஒப்பந்த தொழிலாளர்கள் விவகாரம்**

# 500க்கும் மேற்பட்ட தொழிலாளர்கள் கைது

என்எல்சி தலைமை அலுவலகத்தை முற்றுகையிட முயன்றஒப்பந்ததொழிலாளர்கள் 500 பேரை காவல்துறையினர் கைது செய்தனர்.

பணி நிரந்தரம் உள்ளிட்ட கோரிக்கைகளை வலியுறுத்தி 28ஆவது நாளாக என்எல்சி ஒப்பந்த தொழிலாளர்கள் போராட்டத்தில் ஈடுபட்டு வருகின்றனர்.



பிரச்னைக்கு தீர்வு காண சென்னையில் செவ்வாய்க்கிழமை நடைபெறவிருந்த பேச்சுவார்த்தையை தங்களுக்கு தெரிவிக்காமலேயே ஒத்திவைத்துவிட்டதாக ஒப்பந்த தொழிலாளர்கள் குற்றம் சாட்டியிருக்கிறார்கள்.

இதனைக் கண்டித்தும், கோரிக்கைகளை வலியுறுத்தியும் அவர்கள், என்எல்சி தலைமை அலுவலகத்தை முற்றுகையிட நேற்று கருப்புக் கொடியுடன் பேரணியாகச் சென்றபோது கைது செய்யப்பட்டனர். தடையை மீறி போராட்டம் நடத்தியதாகக் கூறி அவர்களை போலீசார் கைது செய்தனர்.

இதனிடையே நாளை இரண்டாவது சுரங்கத்தை முற்றுகையிட போவதாக அறிவித்துள்ள தொழி லாளர்கள், வரும் 7ஆம் தேதி சென்னையில் நடைபெற உள்ள பேச்சுவார்த்தையில் உடன்பாடு எட்டப்படவில்லை எனில் போராட்டம் தீவிரமடையும் என தெரிவித்துள்ளனர்.

---

## தேர்வுக்கட்டண உயர்வுக்கு எதிர்ப்பு

**கண்களில் கருப்புத்துணி கட்டி மாணவர்கள் போராட்டம்**

தேர்வுக் கட்டணம் உயர்த்தப்பட்டிருப்பதைக் கண்டித்து திருவண்ணாமலை அரசு கலைக்கல்லூரி மாணவர்கள் கண்களில் கருப்புத்துணி கட்டி போராட்டத்தில் ஈடுபட்டனர்.

திருவள்ளுவர் பல்கலைக்கழகத்தின் தேர்வு கட்டண உயர்வை ரத்து செய்ய வலியுறுத்தி கல்லூரி வளாகத்தில் மாணவர்கள் போராட்டம் நடத்தி வருகின்றனர். திருவள்ளுவர் பல்கலைக்கழகத்தின் கீழ் இயங்கி வரும் திருவண்ணாமலை அரசினர் கலைக்கல்லூரியில் சுமார் 4 ஆயிரம் மாணவ மாணவியர் பயின்று வருகின்றனர்.

கல்லூரியில் போதிய பேராசிரியர்கள் இல்லாத நிலையில், தேர்வு முடிவுகளிலும் குளறுபடி நடைபெறுவதாக மாணவர்கள் குற்றஞ்சாட்டியுள்ளனர். தேர்வுக் கட்டணம் மற்றும் மதிப்பெண் சான்றிதழ் பெறுவதற்கான கட்டணங்களை இருமடங்காக பல்கலைக்கழக நிர்வாகம் உயர்த்தியுள்ளதாகக் கூறி மாணவர்கள் போராட்டத்தில் ஈடுபட்டு வருகின்றனர். கட்டண உயர்வை திரும்ப பெறவில்லை என்றால் வரும் 7ஆம் தேதி வேலூரிலுள்ள திருவள்ளுவர் பல்கலைக்கழகத்தை முற்றுகையிடப்போவதாக மாணவர்கள் தெரிவித்துள்ளனர்.

## அருண் செல்வராஜன் தொடர்பான வழக்கு

**ஆதாரங்களை திரட்ட முயற்சி**

பாகிஸ்தான் உளவாளி என சந்தேகிக்கப்படும் அருண் செல்வராஜன் தொடர்பாக, கூடுதல் ஆதாரங்களை திரட்டும் முயற்சியில் தேசிய புலனாய்வு அமைப்பினர் ஈடுபட்டுள்ளனர்.

இதுதொடர்பாக, தமிழக கியூ பிரிவு போலீசாரின் உதவியையும் அவர்கள் நாடியுள்ளனர். அண்மையில், அருண் செல்வராஜனை போலீஸ் காவலில் எடுத்து, தேசிய புலனாய்வு அமைப்பினர் விசாரணை நடத்தினர். இதில், அருண் செல்வராஜனிடம் இருந்து எந்த தகவலையும் பெற முடியவில்லை எனக் கூறப்படுகிறது. இதன் காரணமாக, அருண் செல்வராஜன் தொடர்பான ஆவணங்களை, கியூ பிரிவு போலீசாரிடம் தேசிய புலனாய்வு அமைப்பினர் கேட்டுள்ளனர்.

இதனிடையே, போலீஸ் காவலில் எடுத்து விசாரணை நடத்தப்பட்ட பின்னர், அருண் செல்வராஜனின் நீதிமன்றக் காவல் நீட்டிக்கப்பட்டது. இதனையடுத்து, தற்போது அவர் நீதிமன்றக் காவலில் வைக்கப்பட்டுள்ளார்.

---

**ஜெயலலிதா சிறையில் அடைக்கப்பட்டதற்குக் கண்டனம் தெரிவித்து**

# கோவையில் ரயில் நிலையம் முற்றுகை

சொத்துக்குவிப்பு வழக்கில் ஜெயலலிதா சிறையில் அடைக்கப்பட்டதற்குக் கண்டனம் தெரிவித்து தமிழகத்தில் பல்வேறு இடங்களில் போராட்டங்கள் நடத்தப்பட்டன.

ஜெயலலிதாவை விடுதலை செய்யக்கோரி கோவையில் தமிழ்நாடு கொங்கு இளைஞர் பேரவையினர் கோவை ரயில் நிலையத்தில் முற்றுகைப் போராட்டத்தில் ஈடுபட்டனர். ரயில் மறியலில் ஈடுபட முயன்ற அவர்களைக் காவல்துறையினர் கைது செய்தனர்.



இதே கோரிக்கையை வலியுறுத்தி கோவை கோட்டைமேடு பகுதியில் செயல்பட்டு வரும் மீன் மார்க்கெட்டிற்கு ஒரு நாள் விடுமுறை அறிவிக்கப்பட்டது. இதனால் அந்தப் பகுதியே வெறிச்சோடிக் காணப்பட்டது.

இதே போன்று மதுரை மாவட்டம் வாடிப்பட்டியில் சோழவந்தான் தொகுதி சார்பாக சுமார் 500 அதிமுகவினர் மனிதச் சங்கிலி போராட்டத்தில் ஈடுபட்டனர். கருப்புச் சட்டை அணிந்தும், வாயில் கருப்புத் துணி கட்டியும் அவர்கள் தங்கள் கண்டனத்தைப் பதிவு செய்தனர்.

வாடிப்பட்டி அருகே போடி நாயக்கன்பட்டியில் வேளாண் கூட்டுறவு சங்கம் சார்பில் அதிமுகவினர் உண்ணாவிரதத்தில் ஈடுபட்டனர். இங்கு மட்டுமின்றி மதுரை பெரியார் பேருந்து நிலையம், கோரிப்பாளையம் உள்ளிட்ட இடங்களில் கல்லூரி மாணவர்கள் ஆர்ப்பாட்டத்தில் ஈடுபட்டனர்.

---

**இலங்கை சிறைகளில் இருந்து விடுவிக்கப்பட்ட**

## மீனவர்கள் இந்திய தூதரகத்தில் ஒப்படைப்பு

இலங்கை அதிபர் ராஜபக்சேவின் உத்தரவை அடுத்து அந்நாட்டின் சிறைகளில் இருந்த 67 தமிழக மீனவர்கள் விடுவிக்கப்பட்டுள்ளனர். மன்னார் நீதிமன்றத்தின் மூலம் 36 பேரும், பருத்தித்துறை நீதிமன்றத்தின் மூலம் 25 பேரும், ஊர்க்காவல்துறை நீதிமன்றத்தின் மூலம் 6 பேரும் புதன்கிழமை விடுவிக்கப்பட்டனர். விடுவிக்கப்பட்ட மீனவர்கள் அனைவரும் யாழ்ப்பாணத்தில் உள்ள இந்திய தூதரக அதிகாரிகளிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளனர். விரைவில் மீனவர்கள் அனைவரும் தாயகம் திரும்புவார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

இவர்கள் தவிர்த்து கடந்த மாதம் 27 மற்றும் 30 தேதிகளில் கைது செய்யப்பட்ட தமிழக மீனவர்கள் 20 பேர் இதுவரை விடுவிக்கப்படவில்லை. அதோடு, பல்வேறு காலகட்டங்களில் இலங்கை கடற்படையால் சிறைபிடிக்கப்பட்ட தமிழக மீனவர்களுக்குச் சொந்தமான 77 படகுகளும் விடுவிக்கப்படவில்லை. சிறையில் உள்ள 20 மீனவர்களையும், சிறைபிடிக்கப்பட்ட 77 படகுகளையும் இலங்கை அரசு உடனடியாக விடுவிக்க வேண்டும் என்று மீனவர்கள் வலியுறுத்தியுள்ளனர்.

**கடலாடி அருகே**

## சுகாதாரமற்ற குடிநீர் விநியோகம்

குடிநீருக்காக மணிக்கணக்கில் காத்திருந்தும் சுகாதரமற்ற நீரை பருகும் அவல நிலைக்கு ராமநாதபுரம் கடலாடி தாலுக்கா பகுதி மக்கள் தள்ளப்பட்டுள்ளனர். குடிநீர் தேவைகளை பூர்த்தி செய்வதற்காக கடல் நீரை குடிநீராக்கும் திட்டம் கடலாடியில் தொடங்கப்பட்டது. ஆனால் பராமரிப்பு பணி மேற்கொள்ளப்படாததால் எந்திரங்கள் பழுதாகி தற்போது குடிநீர் உற்பத்தி நிறுத்தப்பட்டு விநியோகமும் தடைப்பட்டுள்ளது. எனவே தண்ணீரை விலை கொடுத்து வாங்க முடியாத நிலையில், குழாயில் வரும் அசுத்தமான நீரை பயன்படுத்தி வருவதாக கூறுகின்றனர் அப்பகுதி மக்கள். இது குறித்து பலமுறை புகார் தெரிவித்தும் ஊராட்சி மன்ற தலைவர் கண்டுகொள்வதில்லையென்றும் குற்றம் அவர்கள் சாட்டுகின்றனர்.

இது குறித்து கடலாடி ஊராட்சி மன்ற தலைவரை கேட்டபோது, கடலாடியில் , காவிரி கூட்டு குடிநீர் வினியோகம் செய்யும் வகையில் ஐம்பதாயிரம் லிட்டர் கொள்ளவு கொண்ட இரு கீழ்நிலைத் குடிநீர் தொட்டிகள் அமைக்க ஏற்பாடு செய்து வருவதாக தெரிவித்தார்.

## வயதானவர்கள் வாழத் தகுந்த நாடு நார்வே ஆகும்: சர்வே தகவல்

நார்வே, அக்.1-

உலகில் உள்ள 96 நாடுகளில் வாழும் முதியவர்களின் வாழ்க்கைத் தரத்தை சர்வதேச ஹெல்ப்ஏஜ் குளோபல் ஏஜ்வாட்ச் அமைப்பு கணிப்பீடு செய்துள்ளது. இந்த முடிவின்படி வயதானவர்கள் வாழ்வதற்கு சிறந்த இடம் என்ற பெருமையை நார்வே பெறுகின்றது. இவர்களின் சமூக மற்றும் பொருளாதார நலன்களின் அடிப்படையில் இந்த ஆய்வுகள் நடத்தப்பட்டுள்ளன.

முதியவர்களுக்கான ஐ.நா. சர்வதேச தினத்தன்று வெளியிடப்பட்டுள்ள இந்தக் கருத்துக் கணிப்புகள் ஆஸ்திரேலியா, மேற்கு ஐரோப்பா, வடக்கு அமெரிக்கா போன்ற இடங்களுக்கு உயர்ந்த தகுதிகளையும் ஆப்கானிஸ்தானிற்கு கடைசி இடத்தையும் வழங்குகின்றது. நார்வேக்குப் பிறகு ஸ்வீடன், சுவிட்சர்லாந்து, கனடா, ஜெர்மனி ஆகிய நாடுகள் சிறந்த இடங்கள் வரிசையைப் பெறுகின்றன.

வருமான பாதுகாப்பு, சுகாதாரம், தனிப்பட்ட திறன் மற்றும் செயல்திறன் மிக்க சூழலிலான வாழ்க்கை என்ற நான்கு பிரிவுகளில் இந்த சர்வே மேற்கொள்ளப் பட்டுள்ளது. வரும் 2030-ம் ஆண்டிற்குள் உலகம் முழுவதிலுமான 60 வயதுக்கு மேற்பட்டவர்களின் எண்ணிக்கை 1.4 பில்லியனைத் தொடும் என்று ஐ.நா. சர்வே குறிப்பிடுகின்றது. 2050-ம் ஆண்டிற்குள் உலக மக்கள் தொகையில் 21 சதவிகிதத்தினர் 60 வயதுக்கு மேற்பட்டவர்களாக இருப்பார்கள் என்றும், இந்த கணக்கீடு எடுக்கப்பட்டுள்ள 40 நாடுகளில் அவர்களின் எண்ணிக்கை 30 சதவிகிதமாக இருக்கும் என்றும் தெரிவிக்கப்பட்டுள்ளது.

உடல்நல மற்றும் ஊட்டச்சத்து முன்னேற்றங்கள், மேம்படுத்தப்பட்டுள்ள சுகாதாரம், அதிகரித்துள்ள பொருளாதார செழிப்பு போன்றவையே இந்த நீட்டிக்கப்படும் வாழ்க்கை முறைக்குக் காரணங்களாக இருப்பது மகிழ்வை அளிக்கும் விஷயம் என்று ஆய்வாளர்கள் குறிப்பிடுகின்றனர்.

இதுதவிர பிறப்பு விகிதம் குறைந்து வருவதும் வயதானவர்களையே அதிகம் பார்ப்பதற்கான ஒரு காரணமாகவும் இவர்களால் முன்வைக்கப்படுகின்றது.



## இந்தியாவில் 3 ஸ்மார்ட் சிட்டிகளை உருவாக்கி மேம்படுத்த அமெரிக்கா உதவி

வாஷிங்டன், அக்.1-

இந்தியாவில் உலகத்தரத்துக்கு ஒப்பாக 100 பெருநகரங்களை 'ஸ்மார்ட் சிட்டி'களாக உருவாக்க வேண்டும் என்று திட்டமிட்ட பிரதமர் மோடி, ஜப்பானின் 'ஸ்மார்ட் சிட்டி' என்றழைக்கப்படும் கியோட்டோ நகரை கடந்த மாத ஜப்பான் பயணத்தின்போது சுற்றிப்பார்த்து, சில விபரங்களை அறிந்து வந்தார்.

அதே வகையில் இந்தியாவில் உள்ள 100 மத்தியதர நகரங்களை ஸ்மார்ட் சிட்டிகளாக வடிவமைக்க தேவையான நடவடிக்கைகளை அவர் மேற்கொண்டுள்ளார். இதற்காக, 7 ஆயிரத்து 60 கோடி ரூபாயை மத்திய அரசு ஒதுக்கீடு செய்யவுள்ளது.

பிரதமரின் இந்த திட்டத்தைப் பற்றி அறிந்த அமெரிக்க அரசு, முதல்கட்டமாக உத்தரப்பிரதேசம் மாநிலத்தில் உள்ள அலகாபாத், ஆக்ரா மற்றும் ஆந்திர மாநிலத்தில் உள்ள விசாகப்பட்டினம் ஆகிய 3 நகரங்களை 'ஸ்மார்ட் சிட்டி'களாக உருவாக்கி, மேம்படுத்துவதில் உதவி செய்ய முன்வந்துள்ளது.

மேலும், இந்தியாவின் 500 பெருநகரங்களில் குடிநீர் மற்றும் கழிவுநீர் அகற்றம் தொடர்பான பணிகளிலும் தொழில்நுட்ப ஒத்துழைப்பு வழங்க தயாராக உள்ளதாகவும் அமெரிக்கா அறிவித்துள்ளது.



## இந்தியாவில் இருந்து ஹஜ் யாத்திரை சென்ற குழுவில் 109 வயது முதியவர்

ஜெட்டா, செப். 30-

இஸ்லாமியர்களின் ஐந்தாவது கடமையான ஹஜ் புனித யாத்திரை செய்வதற்காக இந்தியாவில் இருந்து இந்த ஆண்டு புறப்பட்ட ஒரு லட்சத்து 36 ஆயிரத்து 20 பயணிகளும் சவுதி அரேபியா வந்தடைந்தனர்.

இந்தியாவில் இருந்து புறப்பட்ட முதல் குழு கடந்த ஆகஸ்ட் 27-ம் தேதி மதினா நகரை வந்தடைந்தது. அந்த குழுவில் மொத்தம் 235 பேர் இடம்பெற்றிருந்தனர். கடைசி நாளான நேற்று முன்தினம்வரை ஒரு லட்சத்து 36 ஆயிரத்து 20 யாத்திரீகர்கள் இந்தியாவில் இருந்து சவுதி வந்தடைந்துள்ளனர்.

இவர்களில் ஒரு லட்சத்து 20 பேர் இந்திய ஹஜ் கமிட்டி மூலமாகவும், மற்றவர்கள் தனியார் பயண ஏற்பாட்டாளர்கள் மூலமாகவும் வந்துள்ளனர். இந்த குழுவில் இந்தியாவைச் 109 வயது முதியவர் ஒருவரும், 100 வயது முதியவர் ஒருவரும் இடம்பெற்றுள்ளனர்.

மேற்கு வங்காளம் மாநிலத்தைச் சேர்ந்த இஞ்சில் ஹொஸைன் பிஸ்வாஸ்(109), உத்தரப்பிரதேசம் மாநிலத்தைச் சேர்ந்த அப்துர் ரஹிம்(100) மற்றும் ஃபிடா ஹுஸைன் ஆகியோர் இவ்வாண்டு ஹஜ் செய்யச் சென்ற இந்தியர்களில் மிகவும் வயதானவர்கள் என தெரியவந்துள்ளது.

இந்த ஆண்டு, உலகம் முழுவதிலும் இருந்து சுமார் 20 லட்சத்துக்கும் அதிகமான முஸ்லிம்கள் ஹஜ் கடமையை நிறைவு செய்வதற்காக சவுதியில் குவிந்துள்ளனர் என அந்நாட்டு ஊடகங்கள் செய்தி வெளியிட்டுள்ளன.